எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
யுவராதே யவரவரைக் கண்ட போது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

என்றருளிச்செய்தது. இதனால் ஆரியவேதமே தமிழ்வேதம் என்பதும் சிவனடியார்க ளியாவராயிருந்தாலும் பிராமணர்முதல் எல்லா வருணத்தாரும் வணங்குதற்குரியார் என்பதும் விளங்கும்" என்பார்.

அவர் இவ்வாறு ஒழுகுநாளில், திருத்தலங்கடோறும் எழுந்தருளித் தேவாரத் திருப்பதிகங்கள் பாடி இறைவனுரை வணங்கிச் சென்ற திருநாவுக்கரசு நாயனுர், திருப்பழனத்தைத் தரிசித்துக் கொண்டு போம்போது திங்களூரை யடுத்தமார்க்கமாய்ச் சென்றார். அது இடைவிடாமல் பிரயாணிகள் பல வூர்களுக்குப்போகும் மார்க்கமாயிருந்தது. அதில் ஒரு தண்ணீர்ப்பந்தர் மிகவும் விசாலமாய், சிறு தென்றல்வீசுவதாய், எத்தனைபேர்வந்தாலும் நிழல்கொடுக்கக்கூடியதாய், சீவகாருணியமுடையவர்கள் மனம்போலவும் நீர்நிறைந்த தடாகம்போலவும் குளிர்ந்து,நீர்மோர்முதலியனநிறைந்து,பொலிவுபெற்றிருக்கக் கண்டு, அவ்வாறு அப்பந்தரை யமைத்தவரின் கருணையை வியந்து, அதனை யணைதலும், அதில் எங்குபார்த்தாலும் மிகவும் அழகாய்

திருநாவுக்கரசு நாயனுர் தண்ணீர்ப்பந்தர்

என்று எழுதி யிருந்ததைப்பார்த்துப் பின்னும் அதிசயமடைந்து, அங்கிருந்தவர்களைப்பார்த்து "இப்பெயரையிட்டு இவ்விடத்தில் இத்தண்ணீர்ப்பந்தர் வைத்தவர் யாவர்?" என்று வினவினர். அவர்கள், "சுவாமீ, யாரோ வொருபெரியவர் திருவதிகையில் வீரட்டானேசுவரரால் தடுத்தாளப்பெற்று, திருநாவுக்கரசு என்று பெயரிடப் பெற்றனராம். அவர்பெயரால் அப்பூதியைய ரவர்கள் இப்பந்தரைமாத்திரமன்றி, மடங்கள் நந்தனவனங்கள் அறச்சாலைகள் முதலியனவும் அமைத்துள்ளார்கள்" என்றார்கள். அதைக்கேட்டு வாகீசமுனிவர் பின்னும் ஆச்சரியமடைந்து அவரைக்காண விரும்பி "அவர் எங்குள்ளவர்" என்று கேட்க, அவர்கள் "அம்மறையவர் இவ்வூரினுள்ளவரே. இதுவரையில் இங்கிருந்து இப்போதுதான் வீட்டுக்குப் போனர். அவர்வீடும் தூரத்திலில்லை, சமீபத்திலுள்ளது" என்

ருர்கள். அதைக்கேட்டு வாகீசமுனிவர் விரைந்துபோய் அப்பூதியடிகளாரின் திருமாளிகைத் தலைவாயிலை யடைதலும், அவர் யாரோ ஒரு சிவனடியார் எழுந்தருளினர் என்று கேள்வியுற்று விரைந்து சென்று வாகீசப்பெருமான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அவர் பணிவதற்குமுன் வாகீசமுனிவரும் அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அப்பூதியடிகளுபனர் வாகீசப்பெருமானுருடைய சிவவேடப்பொலிவையும் கருணைபொழி விழியையுங்கண்டு மனமுருகி "என்னையாளும் கிருபாசமுத்திரமே, தேவரீர் இவ்விடம் எழுந்தருள யான் எத்தவஞ் செய்தேன்" என்றனர். வாகீசமுனிவர் "ஐயரே, அடியேன் திருப்பழனஞ்சென்று இறைவனுரை வணங்கிச் செல்லும்போது வழியெங்கும் தாங்கள் வைத்திருக்கும் தண்ணீர்ப் பந்தர், அறச்சாலைகள், மடங்கள், நந்தனவனங்கள், வெட்டிவைத்திருக்கும் குளங்கள், கட்டிவைத்திருக்குங் கிணறுகள், முதலியவைகளைக்கண்டு சந்தோஷங்கொண்டு இத்தகைய பதிபுண்ணியங்களைச் செய்துகொண்டிருக்கும் தங்களைத் தரிசிக்க விரும்பிவந்தேன். தாங்கள் சிவனடியார்கள்பொருட்டு வைத்திருக்கும் குறைவற்ற அரிய பெரியதண்ணீர்ப்பந்தலில் தங்கள்பெயரை யெழுதாமல் ஏன் வேறொருவருடைய பெயரை யெழுதினீர்கள் ?" என்றார். இதைக் கேட்டமாத்திரத்தில், அப்பூதியடிகளுபனருக்கு மனம் கலங்கிவிட்டது. கண்கள் நீர் ததும்பின. விம்மிவிம்மி அழத்தொடங்கினர். திருநாவுக்கரசு நாயனரிடம் அதிக கோபங்கொண்டு, அவர்முகத்தைப் பார்த்துப் பேசவும் மனமில்லாமல், உரைதடுமாற, ஐயா, நல்லவார்த்தை சொன்னீர் ! நல்லவார்த்தை சொன்னீர் ! சமணப் பாவிமக்களோடு கூடி பல்லவராஜன் செய்த கொடுமைகளையெல்லாம் சிவத்தொண்டின் சிறப்பால் வென்றருளிய எங்கள் குலதெய்வத்தின் திருப்பெயரா வேறொருவர் பெயர்?. சர்வான்மாக்களையும் அடிமைகளாகவுடைய எமது சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளிடத்தில் நீங்காத அன்புடையவர்களுக்கு முத்திகாலத்திலன்றி பெத்தகாலத்திலும் இன்பமேயுண்டாகுமென்பதைக் கடையேனுகிய என்போல்வாருந் தெளிந்துய்யும்பொருட்டு, இறைபணியின் மகிமைகளை உலகமுய்ய விளக்கிக்கொண்டிருக்கும் திருநாவுக்கரசர் திருப்பெயரை யான் எழுதியிருக்க, நான் உம்மிடத்தில் எதிர்பாராத கொடுஞ்சொற்களை மொழிந்தீர். அவர் தம்மைச் சமணர்கள் கற்றூணில் கட்டிக் கடலில் தள்ளிவிட அதையே தெப்பமாகக்கொண்டு கரையேறியதைஉலகடங்கலு மறியுமே. இது மரம் கொடி செடிகளுக்கும் தெரியுமே. நீர்

யாரையா ?; சைவப்பழம்போ லிருந்துகொண்டு இவ்வாறு பேசுகிறீர். நீர் உறைவது எவ்விடம்?" என்றனர். திருநாவுக்கரசுநாயனார் அவருடைய அளவுபடாத அன்பையும் பெருமையையும் வியந்து, "அவ்வாறு அருளுருவாயமைந்த சூலைநோயால் தடுத்தாண்டருளப்பெற்று, பிறசமயத்துறையினின்றுங் கரையேறி, சைவத்துறையடைந்து உய்ந்தவன் அறிவு ஒரு சிறிதுமில்லாச் சிறியவனாகிய யானே" என்று கூறி, தம்மை யவர் அறியும்படி தம்முடைய சரித்திரத்தைக் கூறியருளினார். அதைக் கேட்டவுடனே, அப்பூதியடிகணாயனார் மெய்ம்மறந்து, கைகள் சிரசின்மேலேறிக் குவியவும், கண்கள் ஆனந்தவருவி சொரியவும், உரை தடுமாறவும், உடம்புமுழுதும் மயிர்க்கூச்சுண்டாகவும், நிலத்தில் விழுந்து அவருடைய திருவடித்தாமரைகளைத் தமது சிரசிற் சூடிக்கொண்டார். உடனே வாகீசமுனிவரும் அப்பூதியடிகளுடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தனர். இவ்வாறு இவர்களிருவரும் ஒருவரையொருவர் வீழ்ந்து பணிந்தபோது இவர்களுள்ளமிருந்த நிலையை அந்நிலையில்நின்றுணர்வதன்றி எவ்வாறு சொற்களால் விளக்கலாம்!. வாகீசமுனிவர் தமது திருவடியில் மெய்ம்மறந்து வீழ்ந்துகிடந்த அப்பூதியடிகளாரை இருகரங்களாலும் எடுத்தருள, அவர் எழுந்து ஆனந்தக் கூத்தாடி, தோத்திரங்கள் பாடி, இன்னது செய்வதென்று தெரியாமல், திருமாளிகையின் உள்ளே சென்று தமது மனைவி மக்களையும் சுற்றத்தாரையும் அழைத்துச் சென்று வணங்குவித்து, வாகீசமுனிவரை உள்ளே எழுந்தருளுவித்து, அவர் திருவடிகளை மலரிட்டுவைத்த பாத்தியநீரால் விளக்கி, அந்நீரைத் தங்கள் சிரசின்மேல் தெளித்துக்கொண்டு உள்ளும் பருகி உள்ளங் குளிர்ந்தார்கள். பிறகு, அவரை பீடத்தில் எழுந்தருளுவித்து, மலர்களால் அருச்சித்து, நறுமணம்வீசும் திருநீற்றுமடக்கை அவர் திருமுன்னே காட்டி, திருவமுது செய்தருளும்படிப் பிரார்த்திக்க அதற்கு வாகீசமுனிவர்உடன்பட்டருளினர்.

(இன்னும் வரும்.)

---

## சமயம்.

### 11 - ம் பக்கத் தொடர்ச்சி.

இதுவரையில் உலகத்தில் எப்படி இத்தனை சமயங்களுண்டாயின வென்பதை விளக்கினோம். இனி இச்சமயங்களியாவும் தம்முள் சமத்துவமுடையனவா, அன்றி ஏற்றத்தாழ்வுகளுடையனவா என்பதை விளக்குவாம்.

உலகத்தில் கல்வியறிவு எல்லோர்க்கும் பொதுவாயிருந்தாலும், கல்வியறிவு உடையவர்களெல்லாம் ஒரேயளவும் ஒரேவகையுமான கல்வியறி வுடையவர்களாயில்லை. ஒரேயளவும் ஒரேவகையுமான அனுபவ வுணர்ச்சி யுடையவர்களாகவுமில்லை. ஒருவரினொருவர் வெவ்வேறு அளவினவும் வெவ்வேறு வகைப்பட்டனவுமான கல்வியறிவும் அனுபவவுணர்ச்சியு முடையவர்களாயிருக்கிறார்கள். முற்று முணர்ந்தவரில்லை. ஆதலால், மனிதர்கள் தங்கள் அறிவையும் அனுபவத்தையுங்கொண்டு நிறுவிய சமயங்களியாவும் அவைகளை நிறுவினவர்களின் அறிவனுபவங்கட்கேற்ப ஒன்றினொன்று உயர்ந்தும் தாழ்ந்தும் இருக்கும். இதுபற்றியே மதங்கள் பலவும் புறப்புறச்சமயங்களெனவும், புறச்சமயங்களெனவும், அகப்புறச்சமயங்களெனவும், அகச்சமயங்களெனவும் வகுக்கப்பட்டன.

அன்றியும், "ஈசாநஸ் ஸர்வவித்யாநாம்" என்னும் வேதவசனத்தின்படி, எல்லாவித்தைகளுஞ் சேர்ந்து கடவுளின் சொரூபமாகும். ஆதலால் எல்லாவித்தைகளையும் ஒருங்குணர்ந்தவர்கள் இருந்தால் அவர்களே கடவுளை யுணர்ந்தவராவார்கள். அவர்கள் நிறுவிய சமயமே உண்மைச் சமயமாகும். கடவுள் ஒருவரே முற்று முணர்ந்தவர். ஆதலால், கடவுளாலருளிச்செய்யப்பட்ட நூல்களும் சமயமும் எவையோ, அவையே உண்மை நூல்களும் உண்மைச் சமயமுமாகும். அச்சமயநூல்களே வேதசிவாகமங்களும் அச்சமயமே சைவசமயமுமாம். மற்ற நூல்களெல்லாம் சீவர்களால் பசு ஞானத்தைக்கொண்டு செய்யப்பட்டவழி நூல்களும், சார்புநூல்களும், பூர்வயக்கநூல்களுமாம்.

சிவஞானசித்தியார்.

வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.

(இ-ள்.) வேதம் சிவாகமம் என்னும் இரண்டே அநாதிமல முத்தராகிய முழுமுதற்கடவுளால் அருளிச்செய்யப்பட்ட முதனூல்களாம். இவைகளுக்கு வேறாய் தேவர்களாலும் இருடியர்களாலும் சொல்லப்பட்ட நூல்களெல்லாம் வழிநூல்களும், சார்புநூல்களும்,

பூர்வபக்கநூல்களுமாம். வேதம் சிவாகமம் என்னு மிரண்டினுள், வேதமானது உலகத்தாருய்தற்பொருட்டு, ஆன்மாக்களின் பல வகைப்பட்ட பக்குவங்களுக்கேற்ப, பொருள் பலபடத்தோன்றும் சூத்திரம்போலவும், ஆகமமானது சத்திநிபாதமுடைய உத்தமபரி பாகிகளுய் தற்பொருட்டு, அச்சூத்திரப்பொருளைத் தெளிவாயுரைக் கும் பாடியம்போலவும் அருளிச்செய்யப்பட்டனவாம். ஆதலால் வேதம் பொது நூல் எனவும், சிவாகமம் சிறப்பு நூல் எனவுஞ் சொல் லப்படும். அனாதியாயுள்ளவேதத்தில் விளங்கக் கூறப்படாதனவும் வேதத்திற் கூறுங் கருமகாண்டப்பொருள்களுக்கு இன்றியமை யாது வேண்டப்படுவனவுமாயுள்ள பொருள்களையும், வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக் கொண்டு இனிது விளக்குவது சிவாகமமாகலான், இதனின் வேறாய் வேதத்தின் பூர்வபக்கப்பொருள்களைச்சொல்லும் ஏனைநூல்களெல் லாம் பூர்வபக்கநூலெனவும் அதின் சித்தாந்தப்பொருளைச் சொல்லு வதாகிய சிவாகமம் சித்தாந்த நூலெனவுஞ் சொல்லப்படும். எ - று.

வேதமும் சிவாகமும் தம்முள் அபேதமுடைய முதனூல்கள் என்பதனை மற்றொருவியாசமுகத்தால் விளக்குவோம்.

சிவஞானங் கைவரப்பெற்ற ஞானசிரியர் உத்தமோத்தம பரி பாகமுடைய சீடர்களுக்குத் தாமே நேரில் உபதேசித்து, ஏனையோ ருக்கு அவரவர்களின் பக்குவங்களுக்கேற்பப் பலதிறத்தரான ஆசிரி யர்களைக்கொண்டு உபதேசஞ்செய்விப்பதுபோல், "திருமால் இந்தி ரன்உபமனியன் தபனன் நந்திசெவ்வேளாதி, தருமமுதுகுரவருக்குந் தனதருளாலாசிரியத்தன்மை நல்கி, வருமெவர்க்கும் முதற்குருவாய்" இருக்குஞ் சிவபெருமானர், தாமே வேதசிவாகமங்களை யருளிச் செய்ததுமன்றி, பலதிறத்தரான ஆசிரியர்களைத் தோற்றுவித்துப் பலவகையான சமயநூல்களைச் சொல்லுவித்தனர். இன்னுஞ் சொல் லுவிக்கின்றனர். ஆதலால் உலகத்திலுள்ள சமயங்கள் பலவும் சைவ சமயத்திற்குச் சோபானங்கள் என்று சொல்லப்படும்.

வேதசிவாகமங்கள் கடவுளாலருளிச் செய்யப்பட்ட முதனூல்க ளென்பது முன்னமே பலபெரியோர்களால் பல பிரபலபிரமாணங் களைக்கொண்டு நிலைநாட்டப்பட்டிருந்தும், அதை யறியாதார் சிலர், அவைகள் மனிதராற் செய்யப்பட்டன வென்று எண்ணி இடர்ப்படு வர். குடிகளைப்பாதுகாக்கும் அரசனுவான் அவர்களுக்கு விதிவிலக் குகளை யறிவிக்கும் நூல்களைக்கூறுதல் எப்படி யவசியமோ, அப் படியே சர்வலோக நாயகராகிய இறைவனும் உயிர்கள் இதாகிதங்

களை யறிந்து தம்மை வழிபட்டு உச்சீவித்தற்கு வேதாகமங்களை யருளிச்செய்தலும் அவசியமாம். அன்றியும், அஞ்ஞானமயமாயிருந்து துன்பப்பட்டுக்கொண்டிருக்கும் உயிர்களுக்கிரங்கி, அவைகளுக்கு மெய்ஞ்ஞானம் உண்டாகவேண்டியே பஞ்சகிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்கும் பரங்கருணைத் தடங்கடலாகிய இறைவனார், அவர்கள் பொருட்டு அறிதற்கருவியாகிய வேதாகமங்களை யருளிச்செய்யா தொழிவரோ! சர்வஞ்ஞராகிய அவரே யருளிச்செய்யாவிட்டால் அவைகளைச் சொல்லக்கூடிய சர்வஞ்ஞர் வேறுயாருளர்! அவர் செய்யும் பஞ்சகிருத்தியங்களாலியாது பயனுண்டாம்! ஆதலால், வேதாகமங்களைக் கடவுளாலருளிச்செய்யப்பட்ட முதனூல்களென்று கொள்வதே அறிவுடையார் கொள்கையாம்.

(இன்னும் வரும்.)

---

## சிவ புண்ணியம்.

சிவபுண்ணியம் பொது வென்றும் சிறப்பு என்றும் இருவகைப்படும். இவற்றுள் பொது வெனப்படுவது சிவபுண்ணியத்திற்கு அங்கமாகிய சிவதீக்கையின்றிச் செய்யப்படுவது. சிறப்பாவது சிவதீக்கைபெற்றுச் செய்வது. இவை யொவ்வொன்றும் பத்திகாரணமாக உண்மையாற் செய்யப்படுவதும், புகழ்முதலிய உலகப்பயனை நோக்கிச்செய்யப்படுவதுமென இருவகைப்படும். சிறப்புச் சிவபுண்ணியம் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு வகைப்படும். இவை நான்கும், சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் எனவும், கிரியையிற் சரியை, கிரியையிற்கிரியை, கிரியையில் யோகம் கிரியையில் ஞானம் எனவும், யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் எனவும், ஞானத்திற் சரியை, ஞானத்திற்கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் எனவும் பதினாறு வகைப்படும்.

### சரியை.

திருக்கோயில் அலகிடல், மெழுகல் முதலியன சரியையிற் சரியை. சந்திரசேகரர் உமாமகேசுரர் முதலிய இருபத்தைந்து மூர்த்திகளையும் விநாயகக்கடவுள் முதலிய பரிவாரமூர்த்திகளையும் பூசித்தல் சரியையிற் கிரியை. நெஞ்சின் கண் உருத்திரக்கடவுளைத் தியானஞ்செய்தல் சரியையில் யோகம். அந்தத்தியானபாவனையின் முதிர்ச்சியால் ஓர் அநுபவவுணர்வு உண்டாதல் சரியையில் ஞானம்.

### கிரியை.

சிவபூசைக்கு வேண்டிய உபகரணங்களைச் செய்துகொள்ளுதல் கிரியையிற் சரியை. சிவாகம விதிப்படி ஐவகைச் சுத்தியுடன் சிவ

லிங்கவடிவிற் செய்யும் பூசை கிரியையிற் கிரியை. அகத்தில் பூசை ஓமம் தியானம் ஆகிய மூன்றினுக்கும் இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றிடங்களை வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகம் கிரியையில் யோகம். அவ்வந்தரியாக உறைப்பினால் உண்டாகும் அனுபவ வுணர்வு கிரியையில் ஞானம்.

## யோகம்.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்கும் யோகத்திற் சரியை. பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதி யோகத்தில் ஞானம். (இதனை இவ்விடத்தில் விரிக்கிற்பெருகுமாதலால் இதின் விரிவு வேறேயொரு வியாசத்தில் விளக்கப்படும்.)

## ஞானம்.

ஞானநூல்களை ஞானாசிரியன்பால் கேட்டல் ஞானத்திற் சரியை. அவ்வாறு கேட்ட ஞானப்பொருள்களைச் சிந்தித்தல் ஞானத்திற் கிரியை. அதனைத் தெளிதல் ஞானத்தில் யோகம். ஞானநிட்டைகூடுதல் ஞானத்தில் ஞானம்.

## சரியையாதிகளின் பயன்.

உபாயச்சரியையிற் சரியை முதல் உபாய ஞானத்தின் ஞானமீறாகிய பதினாறுவகையினின்றும் பலவேறு வகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன், அவ்வவற்றிற் கேற்ப காலாக்கினியுருத்திரர் முதல் குணதத்துவமத்தகத்திற் சீகண்டபுவனத்தின் கீழுள்ள உருத்திரரீறான அவ்வப்புவனபதிகளுலகத்தில் சாலோகம் முதலியவற்றைப் பெறுதலாம். உண்மைச்சரியையிற் சரியைமுதல் உண்மை யோகத்தின் ஞானமீறாகிய பன்னிருவகையினின்றும் பலவேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன், அவ்வவற்றிற்கேற்பச் சீகண்டபுவனமுதல் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவனபதிகளுடைய சிவலோகத்துச் சாலோகம் முதலிய பதமுத்திகளைப் பெறுதலாம். உண்மை ஞானத்திற் சரியைமுதலிய மூவகையினின்றும் பலவேறு வகைப்பட்டு விரியும் சிவபுண்ணியங்கட்கெல்லாம் பயன், அவ்வவற்றிற்கேற்ப சுத்தவித்தைமுதலிய அதிகாரதத்துவம் போகதத்துவங்களில் வைகும் மந்திரர் மந்திரமகேசர் முதலியோர் புவனத்துச் சாலோகமுதலிய அபரமுத்தியைப் பெறுதலாம். பலவேறுவகைப் பட்டுவிரியும் ஞானத்தின் ஞானங்களுள் முடிவாகிய ஞானத்திற்குப் பரமுத்தியே பயன். ஏனையவற்றிற்கு இலயதத்துவத்தில் பலவேறுவகைப்பட்ட அபரமுத்திபயன் எனக்கொள்க.

---

## சிவலிங்க வழிபாடு.

சிவபெருமான், புறத்தே சிவலிங்கமுதலிய திருமேனிகளுங் குருவுஞ்சங்கமமும் ஆதாரமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயிர் இடமாகக்கொண்டு நின்றும், ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டைக் கொண்டருளுவர். ஆதலால், ஆன்மாக்கள் அவரை வழிபடும் இடங்கள் இவைகளேயாம். சிவத்துக்குப் பெயராகிய இலிங்கம் என்னும்பதம், உபசாரத்தால், அச்சிவம் விளங்கப்பெறும் ஆதாரமாகிய சைலமுதலியவற்றிற்கும் வழங்கும். (சைலம் - சிலையாலாகியது.) சிவபெருமான், எங்கும் வியாபகமாய் நிற்பினும், இவ்விடங்களில் மாத்திரமே தயிரில் நெய்போல் விளங்கிநிற்பர்; மற்றை இடங்களிலெல்லாம் பாலில் நெய்போல் வெளிப்படாது நிற்பர்.

சிவலிங்கம், பரார்த்தலிங்கம் எனவும் இட்டலிங்கம் எனவும் இருவகைப்படும்.

பரார்த்தலிங்கமாவது, சிவபெருமான் சங்காரகாலம்வரையுஞ் சாந்நித்தியராய் இருந்து ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்கப்பெறும் இலிங்கமாம். இது தாவரலிங்கம் எனவும், திரலிங்கம் எனவும் பெயர்பெறும். (சாந்நித்தியம்—அண்மை, அடுத்தல், வெளிப்படுதல். தாவரம் எனினும், திரம் எனினும், நிலையியற்பொருள் எனினும் பொருந்தும்.)

பரார்த்தலிங்கமாவது, சுயம்புலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மானுடலிங்கம் என ஐவகைப்படும். இவைகளுள்ளே, சுயம்புலிங்கமாவது தானே தோன்றியது. காணலிங்கமாவது விநாயகர் சுப்பிரமணியர் முதலிய கணர்களாலே தாபிக்கப்பட்டது. தைவிகலிங்கமாவது விஷ்ணுமுதலிய தேவர்களாலே தாபிக்கப்பட்டது. ஆரிடலிங்கமாவது இருடிகளால் தாபிக்கப்பட்டது. அசுரர் இராக்கதர் முதலாயினரால் தாபிக்கப்பட்டதும் அது. மானுடலிங்கமாவது மனிதரால் தாபிக்கப்பட்டது. மானுடலிங்கத்தின் உயர்ந்தது ஆரிடலிங்கம்; அதனின் உயர்ந்தது தைவிகலிங்கம்; அதனின் உயர்ந்தது காணலிங்கம்; அதனின் உயர்ந்தது சுயம்புலிங்கம்.

ஆதிசைவர்களுள்ளே, சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை ஆசாரியாபிஷேகம் என்னும் நான்கும் பெற்றவர்களாய்ச் சைவாகமங்களிலே மகாபாண்டித்தியமுள்ளவர்களே பரார்த்தலிங்கப்பிரதிட்டை, பரார்த்தபூசை, உற்சவம் முதலியவை செய்தற்கு அதிகாரிகளாவர்.

திருக்கோயிலுள்ளிருக்குஞ் சிவலிங்கமுதலிய திருமேனிகள் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்குமார்க்கத்தாலும் வழிபடற்பாலனவாம்; ஆயினும், அவ்வழிபாடு அவரவர் கருத்து

வகையால் வேறுபடும். படவே, அவருக்குச் சிவபெருமான் அருள் செய்யும் முறைமையும் வேறுபடும்.

சரியையாளர்கள் பகுத்தறிவில்லாது சிவலிங்கமுதலிய திருமேனியே சிவமெனக்கண்டு வழிபடுவார்கள். அவர்களுக்குச் சிவபெருமான் அங்கே வெளிப்படாது நின்று அருள் செய்வர்.

கிரியையாளர்கள் அருவப்பொருளாகிய சிவபிரான் ஈசான முதலிய மந்திரங்களினாலே சிவலிங்கமுதலிய திருவுருக்கொண்டார் என்று தெளிந்து, மந்திரநியாசத்தினால் வழிபடுவார்கள்; அவர்களுக்குச் சிவபெருமான், கடைந்தபொழுது தோன்றும் அக்கினி போல, அவ்வம் மந்திரங்களினால் அவ்வவர் விரும்பியவடிவமாய், அவ்வத்திருமேனிகளில் அவ்வப்பொழுது தோன்றிநின்று, அருள் செய்வர்.

யோகிகள் யோகிகளுடைய இருதயமெங்கும் இருக்குஞ் சிவபெருமான் இந்தத் திருமேனியிலும் இருந்து பூசைகொண்டருளுவர் என்று தெளிந்து, சாத்தியமந்திரங்களினால் வழிபடுவார்கள். அவர்களுக்குச் சிவபெருமான் கறந்தபொழுது தோன்றும் பால் போல, அவ்வம் மந்திரங்களினால் அவ்வவர் விரும்பிய வடிவமாய், அவ்வத்திருமேனிகளில் அவ்வப்பொழுது தோன்றிநின்று அருள் செய்வர்.

ஞானிகள் மேலே சொல்லப்பட்ட மூத்திறத்தாரும்போல் ஓரிடமாகக்குறியாது அன்புமாத்திரத்தால் அங்கே வழிபடுவார்கள்; அவர்களுக்குச் சிவபெருமான், கன்றை நினைத்த தலையீற்றுப்பசுவின் முலைப்பால் போலக்கருணை மிகுதியினால் அவ்வன்பே தாமாகி, எப்பொழுதும் வெளிப்பட்டு நின்று, அங்கே அருள் செய்வர்.

சிவபெருமானுக்கு வாச்சியமந்திரமாகிய சிவசத்தியே உண்மை வடிவம்; அச்சிவசத்தி கரியினிடத்தே அக்கினிபோல வாசகமந்திரத்தினிடத்தே நின்று சாதகருக்குப்பயன் கொடுக்கும். ஆதலினாலே, சிவபெருமானுக்குச் சிவசத்தியினால் வாசகமந்திரத்தோடு சம்பந்தம் உண்டு. அச்சம்பந்தம்பற்றி வாசகமந்திரஞ் சிவபெருமானுக்கு உபசாரவடிவமாம்.

மந்திரநியாசமாவது, வாச்சியமந்திரங்களாகிய சிவசத்திபேதங்களை உள்ளத்திலே சிந்தித்து, அவைகளை யறிவிக்கும் வாசகமந்திரங்களை உச்சரித்துச் சிவலிங்கமுதலிய திருமேனியிலே நியசித்துச் சிவபெருமானுக்கு உபசாரவடிவத்தை அம்மந்திரங்களினாலே சிரமுதலாக அமைத்தலாம். நியசித்தல்—வைத்தல், பதித்தல்.

யா. ந. ஆறுமுக நாவலரவர்கள்.

(இன்னும் வரும்.)

---

## கடிதம்.

சிவபத்தியும் அடியார் பத்தியும் சைவாபிமானமும் நிறைந்த ஸ்ரீமான் ஈரோட்டு, E. S. அர்த்தநாரி யாச்சாரியவர்கள் 1915ஞு டிசம்பர்மீ 20வ பத்திரிகாசிரியருக்கு எழுதிய கடிதம் :—

ஐயா அவர்கட்கு வந்தனம்,

I. ஈசனருளையும் குருசுவாமிகளின் கடாட்சத்தையும் முன்னிட்டுத் துவக்கிய சைவம் என்னும் மகுட நாமம் புனைந்த பத்திரிகையொன்று அடியேன்பால் சென்ற ஏப்ரல்மீ வி. பி. யில் வரவிடுத்ததையும், அதன்பிறகு காலந்தவறாது அனுப்பிய பத்திரிகைகளையும் பெற்று, அதில் வெளியிட்டுள்ள விஷயங்களையெல்லாம் மனதிற்கொண்டு அதனாலடையக்கூடிய பெரும்பயன்களையும், அதில் தக்க பிரமாணங்களோடு விஷயங்கள் எழுதி வெளியிடப்படுவதையும் உணர்ந்து பரவசமானேன். இப்பத்திரிகையின் அருமை பெருமைகளை இதையாதரித்துவரும் பத்திமான்கள் மனமார அறிவார்கள். ஆதலால் அவைகளை விரித்தெழுத பத்திரிகை யிடந்தராதென்று அஞ்சிநிற்கின்றேன்.

II. அருமை வாய்ந்த இப்பத்திரிகையின் சந்தாவோ, "ஆண்டளவும் அணுபன்னிரண்டே" என்றால் "கைம்மாறு கருதா ஈசனருள்போலன்றோ"

III. சென்னை ராஜதானியில் தமிழ் நாட்டிலிருக்கும் தமிழர்கள் 170லக்ஷம். தமிழ்ப் பத்திரிகை 67. அவைகளை வாசிப்போர்74,436. 67பத்திரிகைகளில், சிவாகமமாதியான நூல்களையும், சமயாசாரியர் முதலியவர்களின் திவ்விய சரித்திரங்களையும், சித்தாந்த உண்மைகளையும் விளக்கி, அரியபெரிய விஷயங்களை உலகானுபவங்களோடு சுயநலங்கருதாது சிவநேசம்பூண்டு அமுதளிக்கும் பத்திரிகையும் அதனையாதரிப்போரும் மிகச் சுலபமேயாகும். அவைகளைக் குறிக்காமல் விசனத்துடன் விடுக்கலாயிற்று.

170லக்ஷம் தமிழருள், தமிழ்ப்பத்திரிகைகளை வாசிப்போர் 74,436பேர். இவர்களுள், 10000பேர் இப்பத்திரிகையின் சந்தாதாரர்களாகச் சேர்வார்களாயின் வருடம் ஒன்றுக்கு 7500ரூபா கிடைக்கும். இத்தொகையைக்கொண்டு இப்பத்திரிகையை மேலுமேலும் அபிவிருத்தி செய்யக்கூடும். இதைப் பேரறிவாளர்களியாவரும் சிந்தித்து இப்பத்திரிகையை யாதரித்து அபிவிருத்தி செய்விப்பரென்று முழுநம்பிக்கையுடன் ஈசனைப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,
அடியார்க்கடியேன்,
E. S. அர்த்தநாரி யாசாரி.

ஈரோடு,
20-12-15.

குகமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவசமயிகளுக்கு விக்கியாபனம்.

**சிவஞானச்செல்வர்களே!**

சிலகாலத்துக்கு முன்னர் வெளிவந்த "சங்கராசாரிய நீலகண்டாசாரிய சம்வாதம்" எனப் பெயரிய புத்தகத்தையும், சிவதூஷணம் சிவாசாரியதூஷணம் சிவனடியார்தூஷணங்கள் முதலியனவே பொதிந்து பிரமாணவரம்பு கடந்து மனஞ் சென்றவாறு எழுதிச் சிவத்துவேஷிகள் அச்சிட்டு வெளிப்படுத்திய "அத்துவைதார்த்தப்பிரகாசிகை" எனப் பெயரிய புத்தகத்தையும் யாம் கண்ணுற்றபோது, நமது சைவசமயிகள் அவற்றை மெய்யெனக் கருதி மயங்கிச் சிவப்பற்றொழியவுங்கூடுங்கொல்லென உளங்கொண்டமையால், அங்ஙனம் நிகழவொட்டாது அவர்கட்குச் சிவபத்தியை நிலைநிறுவுதற்பொருட்டு, பிரமஸ்ரீலஸ்ரீ காசிவாசி - செந்திநாதையரவர்களிடம் அவற்றிற்கோர் அதிபிரபலப்பிரமாண நியாயகண்டனம் எழுதித்தரும்படி வேணவாவுடனே கேட்டுக்கொண்டோம். அவர்கள் அதற்குடன்பட்டு, வேத வேதாந்த ஆகமமாதி அதிபிரபலப் பிரமாணங்கொண்டு எடுத்தவிஷயங்களை, அக்கினிமுகத்தழியாத தங்கம்போலவும், வாயுமுகத்தசையாத வச்சிரமலைபோலவும் நிறுவி மகத்தாகிய கண்டனம் ஒன்று எழுதி அதற்கு "மகாவுக்கிரவீரபத்திராஸ்திரம்" எனப் பெயரிட்டு உபகாரமாக உதவினார்கள். அவ்வரிய பெரிய நூல் இப்பொழுது அச்சிடப்பட்டுப் பூர்த்தியாயிற்று. அத்தகைய நூல் நஞ் சைவசமயிகள் ஒவ்வொருவர்கையிலும் அவர்தஞ் சிவபத்தியாதிப் பாதுகாப்பினிமித்தம் இருக்கவேண்டுமென்பது அதனை வாசிக்கும் அவர்தாமே தெற்றெனவுணர்வராகலான் ஈண்டு அதுபற்றி விரிக்காதுவிடுத்தனம். சிவபத்திவாய்ந்த சைவசமயிகளெல்லாரும் அப்புத்தகத்தில் ஒவ்வொன்று தப்பாது விலைக்கு வாங்கி இதுபோன்ற மற்றொரு சிவபுண்ணியஞ்செய்ய உத்தேசித்திருக்கும் எம்மை ஊக்கிவிடுவார்கள் என்று நம்பி எதிர்பார்க்கின்றோம். அந்நூல் எம்மிடத்திலும் இதன்கீழ்ச் சுட்டப்பட்டவர்களிடத்திலும் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம். புத்தகம் 1-க்கு அணா. **8**

இங்ஙனம்: ஏழகரைநாட்டுநம்பி,

சதாசிவபண்டிதசிவாசாரியர்,

மடாதிபதி - திருச்செங்கோடு.

---

புத்தகம் வைத்திருப்போர் விலாசம்:—

சென்னைச் சிந்தாத்திரிப்பேட்டை, சாமிநாய்க்கன் தெரு, 44-நெ. வீடு, ம-ா-ா-ஸ்ரீ, ஏகாம்பரமுதலியாரவர்கள்.

திருப்பரங்குன்றம், பிரமஸ்ரீ - சிவசம்புநாதையரவர்கள்.

# குசேலோபாக்கியாநம்

## மூலமும், அரும்பதவுரையும், வசனமும்.

இதில் புறநானூறு, கலித்தொகை, புறப்பொருள்வெண்பாமாலை, சீவக சிந்தாமணி, திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களின் சொற்றொடர்ப்பிர யோகமும், சிவதருமோத்தர முதலிய சாஸ்திரங்களின் கருத்துக்களும் ஆங் காங்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலாராய்ச்சியால் எவ்வளவு வறுமை வந்தகாலத்தும் மனைவி தன் கணவனை வெறுத்தல் கூடாதென்பதும், தரித் திரத்தின் கொடுமை யின்னதென்பதும், செல்வம்வந்துற்றபோது கடவு ளிடத்து அன்புண்டாதல் அரிதினுமரிதாமென்பதும், அவ்வாறு அன்பில்லா தொழுகும் நாள் நன்னாளாகாதென்பதும், பயனைவிரும்பாது செய்யும் பக் தியே முத்திக்கு வித்தாகுமென்பதும், உருவத்தில் அழகில்லாதவர் எவ்வளவு அறிவுடையராயினும் அவருக்கு உலகத்தில் மதிப்புண்டாதல் அரிதாமென்ப தும், பெருஞ்செல்வராயிருப்பினும் நல்லறிவாளர் தமது நிலையினின்றும் பிறழாரென்பதும், பிறவும் செவ்வனே அறிந்துகொள்ளலாம். இந்நூல் வைணவ நூலாயினும், நூலாசிரியர் சைவப்பற்றுடையாரென விளங்குகிறது. அன்றியும் சைவர்களிற் பெரும்பாலோர் இதை அன்புடன் கற்றும் வருகி ன்றார்களென்பது வெளிப்படை.

இத்தகைய சிறப்புவாய்ந்த இந்நூலுக்குச் சில வுரைகள் வெளிவந்திருக் கின்றனவாயினும் அதிக விலைகொடுத்து வாங்க எல்லோர்க்கும் இயலாதா கையால், பெரும்பாலும் எல்லாக் கடினமான பதங்கட்கும் உரை யெழுதி "செந்தமிழ்ச்சிந்தாமணி" என்னும் சஞ்சிகையின்மூலமாக உயர்ந்த கடிதத் தில் முத்துக்கள்போன்ற எழுத்தில் அச்சிட்டு வெளிப்படுத்திப் பூர்த்திசெய் துள்ளேன். இதன் விலை அணா 12.

திரு. வி. உலகநாத முதலியார்,
"செந்தமிழ்ச்சிந்தாமணி" ஆபீஸ், இராயப்பேட்டை, சென்னை.

---

# ஸ்ரீ சிவகீதை.

பக்தி ஞான மோக்ஷங்களை நல்லாசிரியனைப்போல் போதிப்பது.

பரமேஸ்வரன் ஸ்ரீராமருக்கு உபதேசித்த கீதா ரத்தினமாகிய இவ் வரிய நூல் விரஜாதீக்ஷை, பாசுபதவிரதம், சிவபிரான் ராமருக்கு ஞானக்கண்ணைக் கொடுத்துத் தமது விஸ்வரூபத்தைத் தரிசிப்பித்தல், பஞ்சபூதவடிவமான சரீ ரத்தின் உற்பத்தி, அண்டசம், சராயுசம் முதலிய ஐவகைத்தோற்றம், பிறவி நோய்க்கு சிவனையொழிய வேறு மருந்தில்லையென்பது, தேகத்தின் இயல்பு, சரீ ரத்தில் ஜீவன் நிற்குமிடம் உண்டாகுமிடம், ஜீவனது சொரூபம், தேகமழிந்த பின் ஜீவன் போகுமிடம், பின் சரீரத்தைஅடையும்விதம், ஆன்மாவினுடைய ஜீவகதி, பரலோககதி, கருமஞானபலன்கள், உபாஸனாவிதி, முத்திலட்சணம் முதலிய இன்னும்பல அரியவிஷயங்கள்அடங்கியுள்ளன. இதை மருவூர்-கண பதிசாஸ்திரியார், பதவுரை பொழிப்புரையுடன் ஆங்காங்கு வேத உபநிடதமுத லிய பல சாஸ்திரபிரமாணங்களுடன் தமிழில்மொழிபெயர்த்துத்தர சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை-கலியாணசுந்தர யதீந்திரர் அவர்களால் பரிசோ தித்துஉயர்ந்தகடிதத்தில்அச்சிட்டு தங்கவிலிட்டு பைண்டுசெய்யப்பட்டுள்ளது.

"நற்காரியத்துக்குப் பல இடையூறுன கஷ்டம்" என்றபடி, சென்ற 10-வருடங்களாக இந்நூல்சம்பந்தமாய் உழைத்த பேர்உழைப்பு, அதிக பொருள்நஷ்டம், கடன்பாதை முதலியதுன்பங்களே அதிகம். அவற்றைக் கேட்போர் ஆச்சரியமுற்றுக் கருங்கல்லானமனமும் கரைந்து துக்கசாகரத் தில் அழுந்துவர்.—"ஊழிற் பெருவலி யாவுள"—இந்நூல் அனேகம் பழு தாய்விட்டதுபோக இருப்பு 150-காப்பிகளே. இதை அபிமானித்து வாங்கு வார் இல்லை. சமயாபிமானிகள் அன்புகூர்ந்து வாங்குவார்களென வந்தனத் துடன் கோருகிறேன்.—இதன் விலை ரூபா 2.

கா. ஜம்புலிங்க முதலியார்,
நெ. 36, இருளப்பன் வீதி, சௌகார்பேட்டை, சென்னை.

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் மாதாந்தப் பத்திரிகை.

மலர் 2.] இராக்ஷசஞு பங்குனிமீ -1916ஞு மார்ச்மீ [இதழ் 3.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

*(Retired Accountant, Military Accts. Department.)*

சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணு 12.

(தபாற்செலவுட்பட.)

அப்போது அவர்கள் புதல்வருள் ஒருவர் பிதாவைப்பார்த்து "அப்பா, இவரைப் பார்க்கப்பார்க்க என்மனம் பரவசமாகிறது. நெஞ்சம் நெக்குநெக்குருகுகின்றது. இவரை எத்தனைமுறை வணங்கினாலும் ஆசை தீரவில்லை" என்றார். மற்றொரு புதல்வர் தாயைப் பார்த்து "அன்னாய் சாமியார் பசித்திருப்பார். அவருக்குவிரைந்து திருவமுதுபடைத்தல்வேண்டும்" என்றார். மற்றொரு புதல்வர் "அம்மா சாமியாருக்கு நல்ல நல்ல பலகாரம்பாயசம் முதலியவற்றோடு அமுது படைத்தல்வேண்டும்" என்றார். இவ்வாறு இவர்கள் யாவரும் எல்லையற்றகளிப்பினால் தம்மைமறந்து பல பல சொல்லிக்கொண்டு, பரிசனங்களையும் வேலைசெய்யவிடாமல், தாங்களே எல்லா வேலைகளையுஞ் செய்யத் தொடங்கித் திருவமுது சமைக்கலுற்றார்கள். திருநாவுக்கரசுநாயனார், அப்பூதியடிகளார்மாத்திரமன்றி அவர்பத்தினியாரும் புதல்வர்களுங் கூடச்சிவனடியார்களிடத்தில் வைத்திருந்த அன்பின் பெருக்கத்தைத் தமதுஅருட்கண்ணால்நோக்கி அகமகிழ்ந்திருந்தனர். திருவமுதுசமைத்து முடிந்தவுடன், நாயனாரும் அவர் பத்தினியாரும், தமக்கு எப்போது ஏவவிடுவார்களென்று ஆவலோடு எதிர்பார்த்திருந்த தங்கள் சேட்டபுத்திரை நோக்கி "அப்பா, மூத்த திருநாவுக்கரசே காலந் தாழ்க்கின்றது; நாயனாருக்கு அமுதுபடைத்தற்கு நல்ல வாழைக்குருத்தொன்று விரைந்து அறுத்துக்கொண்டுவா" என்றேவினார்கள். அச்செல்வப்புதல்வர் தமது தாய் தந்தையர் அத்திருப்பணியைத்தமக்குக் கொடுத்ததற்காக மிகமகிழ்ந்து அவர்களைப்புகழ்ந்து வணங்கி, உடனே தோட்டத்திற்கு ஓடிச்சென்று அங்குள்ள வாழைகளை ஒவ்வொன்றாகச் சுற்றிப்பார்த்து ஒருவாழையில் மிகவும் நல்லகுருத்திருக்கக்கண்டார். அதில் ஒருசர்ப்பம் இருந்தது. அவர் மனமெல்லாம் திருநாவுக்கரசுநாயனார் திருவடிகளிடத்திலும் அவர் திருவமுது செய்தற்குவேண்டிய குருத்திலுமே இருந்தமையாலும், அப்பூதியடிகளுடையனாரால் மெய்யன்பெனப்படுவது இத்தன்மைத்தென உலகினரறிந்து உச்சீவிக்கவேண்டிய நிமித்தத்தாலும், அவ்வரவம் அவர் கண்ணுக்குப்புலப்படவில்லை. ஆதலால், அவர் அதைப்பாராமல் விரைந்து அக்குருத்தையரிதலும் அந்நாகம் அவர் கையிற்கடித்துவிட்டது. அப்போது அச்செல்வப்புதல்வர் தம்மைப் பாம்புகடித்ததனால் உண்டான வருத்தத்தையும், அதனால் தமக்கு மாணம் நேரிடுமென்பதையும் சிறிதும் எண்ணாமல், திருநாவுக்கரசுநாயனார் திருவமுதுசெய்தருளுதற்குத் தம்மால் இடையூறு நேரிடுமென்று உள்ளம்பதைத்து, "நான் என்னைச் சர்ப்பந்தீண்டியதை ஒருவருக்குஞ் சொல்லாமல் இக்குருத்தைக் கொண்டுபோய்க் கொடுப்பேன்" என்று மனத்தில் நினைத்துக்கொண்டு விடவேகமும் பின்னிடும்படி ஓடிச்சென்று, அக்கதலிக்குருத்தைத்

தமது தாயார்கையிற்கொடுத்தார். உடனே விடவேகம் தலைக்கேறி விட்டமையால் அவர் அறிவிழந்து தாயார்முன் நிலத்தில்வீழ்ந்து உயிர் துறந்தார். அதைத்தாய்தந்தையர்கண்டு, அவர் அவ்வாறு திடீரென வீழ்ந்திறந்தமைக்குக்காரணம் தெரியாமல் மனம் பதைத்து, பின்பு அவரிடத்தில் தோன்றிய குறிகளால் அவர் அரவம் தீண்டியிறந்தாரென்றறிந்து, தங்கள் பெறலரும்புதல்வர் இறந்தமையைக்குறித்து ஒருசிறிதும் வருத்தமுறாது "ஐயையோ! கைக்கெட்டிய தேவாமிர்தம் வாய்க்கெட்டாதவாறுபோல, நாயனார் நமது வீட்டுக்குத் தாமே வலிய எழுந்தருளியும், அவர் திருவமுதுசெய்தற்கு இவனால் இடையூறு விளைந்ததே" என்று இறந்த புதல்வரை நொந்துவருந்தினார்கள்.

பின்பு அம்மையார் தமதுகணவனாரைப்பார்த்து "நாயகரே இனி நாம் இதனை நினைந்து நினைந்து வருத்தப்படுவதிற் பிரயோசனமில்லை. நான் ஒரு உபாயஞ்சொல்லுகிறேன். அவ்வாறுசெய்தால், நம்முடைய மனவிருப்பம் நிறைவேறும்" என்றனர். நாயனார் "பெண்ணே அதென்ன உபாயம்" என்றார். அம்மையார் "இவன் இறந்தது வேறொருவருக்கும் தெரியாதபடி, இச்சவத்தை மறைத்துவைத்துச் சுவாமிகளுக்கு அமுதுபடைப்போம்" என்றனர். நாயனார் "ஆம் ஆம், இது நல்ல உபாயம், அப்படியே செய்வோம்" என்றனர். உடனே பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்களாகிய அவ்விருவரும், தம்பெறலரும் புதல்வரைப் பாயிற்சுருட்டி மூடிப் புறக்கடையிற்கொண்டுபோய் மறைத்துவைத்து, காலந்தாழ்க்கின்றதென்றுவருந்தி, பரிசுத்தமாகிய கோமய நீரினால் தரையைமெழுகி, கோலமிட்டு, திருவிளக்கேற்றி, ஆசனமிட்டு, பலவகைப் பட்டசித்திரான்னங்கள், பலகாரங்கள், கறியமுது முதலானவைகளை யெல்லாம், வெவ்வேறு பாத்திரங்களில் வரிசை வரிசையாகவைத்துத் திருநாவுக்கரசுநாயனாரிடம் முகமலர்ச்சியோடு சென்று, அவர் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து "எம்மேழேழ்சுற்ற முராணுறு நரகிடை யாழாமே யருளரசே காலந்தாழ்த்தமைக்கு மன்னித்துத் திருவமுதுசெய்ய எழுந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

அவ்வேண்டுகோளின்படி வாகீசமுனிவர் எழுந்தருளுதலும் அவ்விருவரும் அவருடைய திருவடித்தாமரைகளை நீரினால் விளக்கித் திருவமுது செய்தற்கமைத்த ஆசனத்தில் அமர்வித்தார்கள். வாகீசமுனிவர் திருநீறுதரித்துக்கொண்டு, அவ்விருவருக்கும் திருநீறுகொடுத்தருளி, புதல்வர்களுக்கும் கொடுத்தருளும்போது மூத்தபுதல்வரைக்காணாமையால் அப்பூதியடிகணாயனாரைப்பார்த்து "ஐயரே, உமது மூத்தபுதல்வனையும் இங்கேயழையும். அவனுக்கும் திருநீறு அளிப்போம்" என்

றனர். அதைக்கேட்டமாத்திரத்தில் அப்பூதியடிகளுயைனுர் மனந்திடுக்கிட்டு இன்னது செய்வதென்றுதெரியாமல் தேவியார் முகத்தைப்பார்த்தனர். தேவியாரும் இன்னது சொல்வதென்றுதெரியாமலும் தமது கணவனுர் முகவாட்டத்தைப்பார்த்தும் மனங்கலங்கிநின்ருர். இவர்கள் பிறந்து பொய்சொல்லியறியாதவர்களாகையால் "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்னும் வேதவசனத்தின்படியேனும் ஏதேனும் ஒரு பொய் சொல்லவும் நாவெழவில்லை. நடந்ததைச்சொல்லவும் மனம்வரவில்லை. இதனுல் அப்பூதியடிகளுயனுர் மனந்தடுமாறி, "இறந்தபுதல்வன் நல்ல தருணத்தில் நமக்கு உதவுதலின்றி இடையூறு செய்தான்" என்று நினைத்து, அவரை நொந்து, திருநாவுக்கரசுநாயனுரைப்பார்த்து, "சுவாமீ அவன் இப்போது இங்கே உதவமாட்டான். அவனுக்காகக் காலந்தாழ்க்காது திருவமுது செய்தருளல்வேண்டும்" என்று இறைஞ்சி நின்ருர்.

உலகெங்குந் தெய்வத்திருநீற்றுநெறி தழைத்தோங்கத் திருவவதாரஞ் செய்தருளிய திருநாவுக்கரசுநாயனுர், அப்பூதியடிகளுயனுரின் உள்ளத்திலிருந்த தடுமாற்றத்தைத் திருவருட்குறிப்பாலுணர்ந்து, அவரைநோக்கி, "ஐயரே, தாம் இவ்வாறுசொல்வது நன்ருயில்லை. அவன் யாதுசெய்தான், அவனுக்குயாதுநேரிட்டது. உண்மையை மறைக்காமற் சொல்லும். கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம், எற்றுக்கோ அஞ்சுவது. என்றனர்.

முத்தமிழ்க்கரசராகிய திருநாவுக்கரசுநாயனுர் இவ்வாறு அருளிச்செய்தலும், அவர் முத்தொழிற்கும் ஈசர் என்பதையுணர்ந்த அப்பூதியடிகளுயனுர், அவரால் தமது புதல்வர் உயிர்பெற்றெழுவாரென்றெண்ணிச் சந்தோஷிப்பதைவிட்டு, திருநாவுக்கரசுநாயனுர் திருவமுதுசெய்தருளுதற்கு இடையூருயிற்றே என்று மனம் வருந்தி அவர் கட்டளையைமீறி நடக்கமாட்டாமல் தமது குமாரருக்குற்றதுரைத்தனர். அதைத் திருநாவுக்கரசுநாயனுர்கேட்டு அப்பூதியடிகளுயனுருடைய உழுவலன்பை வியந்துநோக்கி "ஐயரே, தமது புதல்வர் திடீரென்று பாம்புகடித்திறந்துவிடவும், அதனுல் மனங்கலங்காமல் அதை மறைத்து, அவன் உதவமாட்டான் என்றுசொல்லி எமக்கு அமுது படைக்க ஆவல்கொண்டீரே! ஆ! ஆ! இது மிக நன்ருயிருக்கிறது! உலகில் உம்மைப்போல் இப்படிப் பத்தி செய்தவர் யாவர்! 'புத்திர சோகம் யாரே பொறுப்பவர் புவியி லம்மா'. 'கடந்தஞானிகளுங் கடப்பரோ மக்கண் மேற் காதல்'. ஆதலால் தாமே ஞானிகளும் வணங்கும் மகாஞானி" என்றுகூறியருளி, சவத்தைத் திருக்கோயிலின்

முன் கொணர்வித்து, ''ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை'' என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப்பாடவாரம்பித்து, ''பத்துக்கொ லாமடியார்செய்கை தானே'' என்று முடித்து, தமது திருவுள்ளக்கருத்தை இறைவனுக்கு விண்ணப்பித்தலும், அவரது திருவருளால் நித்திரைவிட்டெழுந்தவரைப்போல் அப்புதல்வர் உயிர்பெற்றெழுந்து திருநாவுக்கரசு நாயனார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். திருநாவுக்கரசுநாயனார் தாம் விரும்பியவாறே அவருக்குத் திருநீறு கொடுத்தருளினர். இவ்வற்புதத்தைக்கண்ட சிவனடியார்கள் கடலொலியும் பின்னிடும்படி ஹரஹரவென்று செய்தார்கள். சைவசமயமே சமயம், சைவசமயமே சமயம், என்றும் சிவனடியார் பெருமையே பெருமை, சிவனடியார் பெருமையே பெருமை என்றும் கூறி ஆகாயத்தில் உத்தரீயம்வீசி ஆனந்தக் கூத்தாடினர்கள்.

இறந்தபிள்ளை உயிர்பெற்றெழுந்தானென்று உலகினர்யாவரும் களிகூர்ந்துகொண்டாட, அதுகண்டும் அத்தாய்தந்தையர்கள் களிப்பிலாராய் முகவாட்டத்தோடு தெரிவரும்பெருமைத் திருநாவுக்கரசுநாயனார் திருவமுது செய்தற்கு அப்பிள்ளை இடையூறுசெய்ததே என்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அதனைத் திருநாவுக்கரசுநாயனார் அறிந்து அவர்கள் திருமாளிகைக்கெழுந்தருளுதலும், அவ்விருவரும் மனக்களிப்பெய்தி உடன்போந்து மீண்டும் திருவமுதுசெய்யுமிடத்தைத் திருவலகிட்டுக்கோமயத்தால் மெழுகி, வெண்சுண்ணத்தாற்கோலமிட்டு, திருவிளக்கேற்றி, ஆசனமிட்டு, மூத்த திருநாவுக்கரசுகொண்டுவந்த பரிகலக்குருத்தைச் சுத்தஞ்செய்து விதிப்படியிட்டு, திருநாவுக்கரசுநாயனார் திருக்கரங்களைச் சுத்தஞ்செய்தற்கு மலர்மணங்கமழும் நீரைக்கொடுத்தார்கள். அப்போது திருநாவுக்கரசுநாயனார் அப்பூதியடிகணாயனாரைப் பார்த்து ''ஐயரே, நீங்களனைவரும் பசித்திருக்க நாம்மாத்திரம் புசித்தற்கு நம்மனம் ஒருப்பட்டிலது; தாமும் தமது புத்திரர்களும் எம்முடன்கூடவே திருவமுது செய்தல்வேண்டும்'' என்றருளிச்செய்தனர். வேதியர்பெருமான் ''இப்பெரியோர் திருவமுதுசெய்து தெருக்கடையெறிந்த பரிகலமுண்ணுதற்கும் அருகனல்லாதனாயினேன் உடனிருந்து உண்ணுதற்கும் அருகனாவனோ'' என்று தமக்குள்ளே சிந்தித்துக்கொண்டு, அவர் கட்டளையைக் கடக்கமாட்டாதவராய்த் தாமும் தம்முடைய புத்திரர்களும் உடனிருந்து திருவமுது செய்யவும், அம்மையார் திருவமுதுபடைக்கவும் வாகீசமுனிவர் அடியார்களோடு திருவமுது செய்தருளினர். அன்றுமுதல் திருநாவுக்கரசுநாயனார் அவரைத்தமது அன்பிற்குரியராகக்கொண்டு அவர் திருமாளிகையில் அவரோடு பலநாள் அளவளாவியிருந்தருளினர்.

பின்பு சமீபத்துள்ள திருப்பழனம் என்னும் சிவஸ்தலத்திற்கு எழுந்தருளி "சொன்மாலை பயில்கின்ற" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப்பாடும்போது, அதன் இறுதியில் "அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி, குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கொடியையே" என்று அப்பூதியடிகளுயனாரின் திருத்தொண்டைச் சிறப்பித்தருளினர். அவ்வாறு தமிழ்வேதத்திலே திருநாவுக்கரசுநாயனாரால் சிறப்பித்துரைக்கப்பெற்ற அப்பூதியடிகளுயனார் நெடுங்காலம் திருநாவுக்கரசுநாயனார் திருவடித்தியானத்தையே தெப்பமாகவும், அவர் திருநாமஸ்மரணையையே கோலாகவுங்கொண்டு பிறவிப்பெருங்கடலைக் கடந்து முத்தியங்கரையாம் தில்லைமன்றுடைய் எல்லையிலின்பத் திறையடித் தலஞ்சேர்ந்தனர்.

### நால்வர் நான்மணிமாலை.

உற்று னலன்றவந் தீயினின் றுனல னூண்புனலா
அற்று னலனுகர் வுந்திரு நாவுக் கரசேனுமோர்
சோற்று னெழுதியுங் கூறியு மேயேன்றுந் துன்பில்பதம்
பெற்று ஞெருநம்பி யப்பூதி யேன்னும் பெருந்தகையே.

---

## உலகெங்குஞ்சைவந்தழைத்தற்கு இலேசானவழி.

பலர் தனவான்களே சமயபரிபாலனஞ் செய்தற்குரியாரென்று எண்ணி அவர்கள் சமயபரிபாலனஞ்செய்ய முன்வரவில்லையென்று அவர்களைக் குறைகூறுகின்றார்கள். தனவான்கள் மாத்திரமன்றிப் பொருள் சிறிதுமில்லாதவர்களும் உலகெங்குஞ் சைவசமயந் தழைக்கச்செய்யலாம். எப்படியெனில், இதுபோன்றபத்திரிகையை வாசிக்கும் ஒவ்வொரு சிவநேயரும் மாதந்தோறும் இரண்டு மூன்று சிவநேயர்களை இதற்குச் சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டுவந்தால் பதினாயிரக்கணக்காகச் சந்தாதாரர்கள் சேர்ந்துவிடுவார்கள். எண்ணிறந்தோர் இப்பத்திரிகையினால் சைவசமய உண்மைகளை எளிதில் உணர்ந்துகொள்வார்கள். அஃதன்றிப் பெருந்தொகைப்பொருள் சேர்ந்துவிடும். அது இப்பத்திரிகையைப் பல இடங்களிலும் விருத்திசெய்தற்கும், சைவசமயபரிபாலனத்திற்கு இன்றியமையாதனவாய வேறு பல காரியங்களைச்செய்தற்கும் ஏதுவாகும். ஒருகாசும் செலவில்லாமல் இவ்வளவு சுலபமாக ஒவ்வொருவரும் சமயபரிபாலனஞ் செய்யக்கூடியவர்களாயிருக்க, இவ்வாறு செய்யமுன்வராதவர் பணக்காரர்களைமாத்திரம் ஏன் நோவவேண்டும்!

## சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின்
## பதினேழாவதுவருட மகாஜனக்கூட்டம்.

சென்னைச் சிவனடியார்திருக்கூட்டத்தின் பதினேழாவது வருட மகாஜனக்கூட்டம் நிகழும் 1916ஞு பிப்ரவரிமீ 20உ இதின் சபா மண்டபத்தில், ம-௱-௱-ஸ்ரீ சதுரை. இராஜாக்கண்ணுமுதலியார், பி. ஏ. அவர்கள் அக்கிராசனத்தின்கிழ்க்கூடியது.

அச்சமயத்தில் இச்சபையின் 1915ஞு சபாக்கிரந்தமும் வரவு செலவு கணக்கும் வாசித்து அங்கீகரிக்கப்பட்டன.

இதனடியிற் குறித்த கனவான்கள் இச்சபையின் நிர்வாக சபையினராக நியமிக்கப்பெற்றூர்கள்.

### சபைத்தலைவர்.

ம-௱-௱-ஸ்ரீ ச. இராஜாக்கண்ணுமுதலியாரவர்கள். பி. ஏ.

### உதவிச்சபைத்தலைவர்.

ம-௱-௱-ஸ்ரீ தி. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள். பி. ஏ.

### காரியதரிசி.

ம-௱-௱-ஸ்ரீ இ. ஆதிமூலமுதலியாரவர்கள்.

### உதவிக்காரியதரிசி (பொக்கிஷகாரர்).

ம-௱-௱-ஸ்ரீ பி. வி. சமரபுரிமுதலியாரவர்கள்.

### சைவப்பிரசங்கவிசாரணைக்கர்த்தர்.

ம-௱-௱-ஸ்ரீ மணிமங்கலம். திருநாவுக்கரசுமுதலியாரவர்கள்.

### அத்தியட்சர்.

ம-௱-௱-ஸ்ரீ எஸ். விநாயகமுதலியாரவர்கள், பி. ஏ.
,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்.
,, இ. சுப்பிரமணியமுதலியாரவர்கள்.
,, வா. தி. கோவிந்தராஜமுதலியாரவர்கள்.
,, ஆர். துரைசாமிமுதலியாரவர்கள்.
,, பி. வி. சமரபுரிமுதலியாரவர்கள்.
,, பா. கண்ணப்பமுதலியாரவர்கள்.

### கணிதபரிசோதகர்.

ம-௱-௱-ஸ்ரீ சு. சபாபதிமுதலியாரவர்கள்.

---

# சென்னைச்சிவனடியார் திருக்கூட்டத்தின் 17-வது (1915ஞு) வருடசபாக்கிரந்தம்.



இச்சபை 1898ஞு டிசம்பர்மீ 25உ தாபிக்கப்பெற்று, 1860-வது வருடத்து 21-வது சட்டத்தின்படி அரசாங்கத்தினால் ரிஜிஸ்ட்டர் செய்யப்பெற்றுள்ளது.

இதின் இருப்பிடம், சென்னை தங்கசாலைவீதியில் 180-வது எண்ணுள்ள ஸ்ரீகற்பகவிநாயகராலயத்தையடுத்த "சென்னைச் சிவனடியார் திருக்கூட்டச் சபாமண்டபம்." இது சுமார் 3000 ரூபாவரையில் செலவிட்டு இச்சபையாரால் 1905-ம்ஞு கட்டப்பெற்றது.

இச்சபையின் நோக்கமாவது, சிவஸ்தலயாத்திரைசெய்தல், சைவப்பிரசங்கஞ் செய்தல், பாடசாலைகள்வைத்துச் சிறுவர்களுக்குச் சமய போதனைசெய்தல், பத்திரிகைவெளியிடுதல், புத்தகசாலைவைத்துப் புத்தகங்களைச் சேகரித்துப் பரிபாலித்தல், சிவாலயவழிபாடுசெய்தல் முதலியவற்றால் சைவசமய ப்ரிபாலனஞ்செய்தலாம்.

இச்சபையார் இதுவரையில் சுமார் 200 சிவஸ்தலங்களுக்கு யாத்திரை செய்து சிவாலயவழிபாடு சைவப்பிரசங்கம் தமிழ்வேதபாராயணம் முதலியனசெய்தார்கள். சபாமண்டபத்தில் சிவஞானமுனிவர்பேரால் புத்தகசாலை வைத்திருக்கிறார்கள். அடிக்கடி துண்டுப்பத்திரிகைகளும் திருமுறைத்திரட்டுமுதலிய நூல்களும் வெளியிட்டார்கள். சைவசமயத்தின் தற்காலநிலைமையையும் அதைப்பரிபாலிக்கும் வழிகளையும் செவ்வனே விளக்கிச் "சைவசமயிகளின் கடமை" என்னும் நூலைவெளியிட்டார்கள். இன்னும் பல அரிய காரியங்களைச் செய்தார்கள். அவைகளை விரிக்கிற் பெருகும். அவை அவ்வப்போது வெளியிட்டுவந்த வருடாந்தச் சபாக்கிரந்தங்களில் விளக்கப்பட்டன.

## முன்வருடமகாஜனக்கூட்டம்.

இச்சபையின் 16-வது வருடாந்த மகாஜனக்கூட்டம், 1915-ம்ஞு மார்ச்மீ 7உ இதன் சபாமண்டபத்தில் கூடியது. அதன் விருத்தாந்தம் 1915-ம்ஞு ஏப்ரல்மீ வெளிவந்த நமது "சைவம்" என்னும் பத்திரிகையில் வெளியிடப்பட்டது.

## அங்கத்தினர்.

| | |
|---|---|
| 1915-ம் வூ ஆரம்பத்தில் இருந்த அங்கத்தினர்கள் | 66 |
| ,, முடிவிலிருந்தவர்கள். | 60 |

இவர்கள் பெயர்முதலியன இதின் அனுபந்தத்திற்காண்க. இவர்களுள், இச்சபையின் போஷகருள் ஒருவராயிருந்து, நெடுங்காலமாக மாதந்தோறும் பேரன்போடு, அகமுமுகமும் மலர்ந்து இவ்விரண்டு ரூபா சந்தா உபகரித்துவந்த ஸ்ரீமான் மயிலே. கதிர்வேல்முதலியாரவர்களும், இதின் அங்கத்தினருள் ஒருவராயிருந்து அவ்வாறே எவ்வெட்டணு உபகரித்துவந்த ஜவளி பொடிவியாபாரம் ஸ்ரீமான் சி. பா. சண்முகமுதலியாரவர்களும், வெளியூர் அங்கத்தினராயிருந்த ஸ்ரீமான் கோ. சங்கிலி மேஸ்திரியவர்களும் சிவபதமடைந்தமைக்கு நிர்வாகசபையார் மிகவும் விசனமடைவாராயினர்.

## சைவபாடசாலை.

| | | |
|---|---|---|
| இப்பாடசாலையில் 1915–ம் வூ ஆரம்பத்தில் வாசித்திருந்த சிறுவர்கள் | | 54 |
| ,, முடிவில் ,, | | 65 |
| இதற்கு 1914–ம் வூ கிடைத்த அரசாங்க உதவி | ரூபா. | 105 |
| ,, 1915–ம் வூ ,, ,, | | 158 |

இதனால் இப்பாடசாலை சென்றவருடத்தில் அதற்குமுன் வருடத்தைக்காட்டிலும் அபிவிருத்தியடைந்ததென்பது விளங்கும்.

## சைவப்பத்திரிகை.

இப்பத்திரிகை சென்ற 1915–ம் வூ ஜனவரிமீ முதல், மாத மாதம் கிரமமாய் முதல் வாரத்தில் வெளிவந்தது. இப்பத்திரிகையை மூன்று பாரமுள்ளதாக அச்சிடவிருப்பமிருந்தும் காகிதம் அதிகமாக விலையேறிவிட்டமையாலும், போதுமான சந்தா தாரர்கள் சேரவில்லையாகையாலும், அவ்விருப்பம் இன்னும் நிறைவேறவில்லை. சைவாபிமான சீலர்கள் யாரேனும் 7 ரூபா நன்கொடையளிப்பரேல் அவர்கள் உதவி புரியும் மாதத்தில் ஒருபாரம் அதிகமாக அச்சிடப்படுமென விளம்பரஞ் செய்திருந்தோம். அவ்விளம்பரத்தின்படி தஞ்சைஜில்லா ரெண்டாங் கட்டளைவாசியாகிய பிரமஸ்ரீ ஆர். எஸ். கங்காஜடேசசர்மா அவர்களும், திருவல்லிக்கேணி பைக்ராப்ட்ரோட்டில் மளிகைவர்த்தகஞ் செய்யும்

ஸ்ரீமான் குமாரசாமிச்செட்டியாரவர்களும் எவ்வேழுரூபா நன்கொடையளித்தார்கள். ஆதலால் 1915-ம் ஏப்ரல், ஜூன்மாதங்களில் இப்பத்திரிகை மும்மூன்றுபாரமாக வெளிவந்தது.

இப்பத்திரிகையைத் தமிழ்நாடெங்குமுள்ள அறிஞர் பலரும் பெரிதும் நன்குபாராட்டி, இது எங்கும் பரவுமாறுசெய்து வருகிறார்கள். இப்பத்திரிகையின் அபிவிருத்தியைநாடிச் சந்தாதாரர்களைச் சேர்த்து உபகரித்த பெரியோர்களின் பெயர் முதலியன இதின் அனுபந்தத்திற் காண்க. இவர்கள் வெறும் அன்புகாரணமாகச்செய்துவரும் இப்பேருபகாரத்திற்கு வையகமும் வானகமுமாற்றலரிது. இப்பத்திரிகை நடைபெற்றுவருவதற்கு இவர்கள் செய்யும் உபகாரங்களே காரணமெனத்தகும். இன்னும் இவர்கள் முயற்சிகளினாலே இப்பத்திரிகை மேலும் மேலும் அபிவிருத்தியடையுமென்பதும் திண்ணம். இவர்கள் செய்த முயற்சிகளால் சென்றவருடம் 520 சந்தாதாரர்கள் சேர்ந்தார்கள்.

சென்றவருடம் இப்பத்திரிகையின் பொருட்டுச்செலவான தொகை, தபாற்செலவு உட்பட. ரூபா 344

பத்திரிகை சந்தாவரவு (வி. பி. செலவுட்பட) ரூபா 378

விஷயங்களை எழுதுவதுமுதல் எல்லாவேலைகளையும் பத்திராசிரியரே செய்துவருவதனால் இவ்வளவு குறைந்தசெலவில் சென்றவருடம் இப்பத்திரிகை நடைபெற்றது.

## சிவஸ்தலயாத்திரைமுதலியன.

இச்சபையார் இராக்ஷஸ வைகாசிமீ பூசநட்சத்திரத்தில் திருக்குன்றத்தூரில் ஸ்ரீ சேக்கிழார்நாயனார் திருநட்சத்திர மகோற்சவதரிசனஞ்செய்து அடுத்ததினம் திருநாகேச்சரத்தில் அதிகாரநந்திமகோற்சவ தரிசனஞ்செய்தார்கள். அச்சமயத்தில் இவர்களுக்கு திருநாகேச்சரச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் மாகேசுரபூசை முதலிய உபசாரங்களைச் செய்தார்கள்.

ஐப்பசிமீ 14உ ஆதிவாரம், சென்னை முத்தியாலுப்பேட்டை உமாமகேசுவரர் தமிழ்வேதபாராயண பக்தஜனசபையாருடன்கூடி திருமுறை மகோற்சவம் நடாத்தி திருவண்ணாமலை ஞானதீபக்குடையாராதனை செய்தார்கள். அச்சமயத்தில் கௌணியன் அச்சுக்கூடத்தலைவர் ஸ்ரீமான் கா. முருகேசச்செட்டியாரவர்கள் சிவநேயர்களுக்கு மாகேசுரபூசை செய்வித்தார்கள்.

வழக்கப்படி சபாமண்டபத்தில் தமிழ்வேதபாராயணமும் சைவப்பிரசங்கமும் நடைபெற்றன.

ஸ்ரீலஸ்ரீ ம. தி. பானுகவிசுவாமிகள் அவர்களால் திருஞானசம்பந்தப்பெருமானார் திருமுலைப்பாலுண்டருளிய திவ்விய சரித்திர மகோபந்நியாசம் நடைபெற்றது.

சபாமண்டபத்தைச்சார்ந்த திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கற்பகவிநாயகக்கடவுளுக்கு விநாயக சதுர்த்திமகோற்சவதினத்தில் பத்து ரூபாவரையில் செலவிட்டு மகாபிஷேகஞ் செய்வித்தார்கள்.

## நிர்வாகசபை.

சென்றவருடத்தில் நிர்வாகசபையார் 9 முறைகூடினார்கள்.

## வரவுசெலவுக்கணக்கு.

1915-ம் வரு வரவு செலவுக்கணக்கு, இச்சபையின் அங்கத்தினருள் ஒருவராகிய ஸ்ரீமான் சு. சபாபதிமுதலியாரவர்களால் அவ்வப்போது பரிசோதிக்கப்பெற்றும், நிர்வாகசபையாரால் அங்கீகரிக்கப்பெற்றும் இதின் அநுபந்தத்தில் வெளியிடப்பட்டது.

## பொருள்நிலைமை.

இச்சபையார் மூலதனமின்றியே பலவருடங்களாகக் கடன்பட்டும் சைவசமயபரிபாலனஞ் செய்துவருகின்றார்கள். இதனால் இச்சபைக்குச்

| | | |
|---|---|---|
| சென்ற 1914-ம் வரு முடிவிலிருந்தகடன் | ரூபா. | 537. |
| 1915-ம் வரு முடிவிலிருந்தகடன் | ரூபா. | 404. |

இந்தக்கடன் இச்சபையார் சபாமண்டபத்தின் விஷயமாகவும் இதைச்சார்ந்த ஸ்ரீ கற்பகவிநாயகர்கோவில் விஷயமாகவும் ஹைகோர்ட்டில் நடத்திய வியாச்சியத்தால் நேரிட்டது.

இச்சபையும் இச்சபையை யாதரித்துவரும் புண்ணியவான்களும் நீடித்தவாயுளும் நோயற்றவாழ்வும் குறைவற்றசெல்வமும் பெற்றுவாழ்கவெனத் திருவருளைச்சிந்திக்கின்றோம்.

சென்னை
20-2-16.

இ. ஆதிமூலமுதலியார்,
காரியதரிசி.

---

## சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் 1915–ம்௵ வரவு செலவுக் கணக்கு.

| வரவு. | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| 1915–ம்௵ ஜனவரிமீ 1௳ இருப்பு. | 2 | 11 | 8 |
| சாமாசிகர் உபகரித்த மாதாந்தரச்சந்தா | 291 | 0 | 0 |
| சைவப்பத்திரிகை வருடாந்தச்சந்தா (வி. பி. செலவு உட்பட) | 377 | 14 | 3 |
| நன்கொடை | 28 | 4 | 0 |
| சைவபாடசாலைக்கு அரசாங்கத்தினர் செய்த உதவி | 158 | 0 | 0 |
| ஷை பாடசாலை மாணாக்கர்கள் சம்பளம் | 164 | 2 | 0 |
| சுப்பிரமணியம் பாடசாலையில் சமயபோதனை செய்த தற்கு வேதனம் | 12 | 0 | 0 |
| புத்தகவிற்பனையும் வட்டியும் | 1 | 2 | 9 |
| மொத்த வரவு— | 1035 | 2 | 8 |

| செலவு. | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| சைவபாடசாலை உபாத்தியாயர் சம்பளம் | 234 | 15 | 3 |
| ஷை குடிக்கூலி | 120 | 0 | 0 |
| ஷை வேலையாட்கள் ரிஜிஸ்டர் முதலியன | 16 | 12 | 3 |
| ஸ்ரீ கற்பகவிநாயகர் மகாசதுர்த்தி அபிஷேகம் | 10 | 0 | 0 |
| சைவப்பத்திரிகை (காகிதம் - அச்சுக்கூலி, தபால் முதலியன) | 344 | 1 | 7 |
| ஸ்ரீ கற்பகவிநாயகருக்கு குடிக்கூலி | 5 | 0 | 0 |
| சபையில் பாராயணம் முதலியன | 16 | 9 | 0 |
| கடன் | 133 | 0 | 0 |
| வட்டி | 26 | 10 | 4 |
| தண்டற்காரர் | 46 | 14 | 6 |
| காகிதம் வண்டிமுதலிய சில்லரைசெலவுகள் | 6 | 13 | 0 |
| ஆகமொத்த செலவு— | 960 | 11 | 11 |
| 1915–ம்௵ டிசம்பர்மீ 31௳ இருப்பு | 74 | 6 | 9 |
| | 1035 | 2 | 8 |

சு. சபாபதிமுதலியார்,
கணிதபரிசோதகர்.

இ. ஆதிமூலமுதலியார்,
காரியதரிசி.

## சந்தாதாரரைச்சேர்க்கின்ற கனவான்கள்.

சென்ற 1915–ம்ஞ "சைவம்" என்னும் பத்திரிகைக்குப் பலர் சந்தாதாரர்களைச்சேர்த்து உபகரித்தார்கள். இவர்களுள் சிலரைச் சேர்த்தவர்கள் பலர். பலரைச்சேர்த்தவர்கள் சிலர். இவர்களெல்லோருக்கும் இச்சபையார் மிகவும் நன்றிபாராட்டி வந்தனமளிக்கின்றார்கள்.

இப்பத்திரிகையின் அபிவிருத்தியைக்கருதி அடிக்கடி பலரைச் சேர்த்து உதவிசெய்து வருங் கனவான்கள்.

1. தேவகோட்டை வைசியசிவானந்த சபையின் உதவி காரிய தரிசியவர்கள் ஸ்ரீமான் பள. வெ. சு. இலட்சுமணன்செட்டியாரவர்கள்.

2. கூடலூர் தொண்டமாநத்தம் பு. ர. நடனசபாபதிப்பிள்ளையவர்கள்.

3. தஞ்சை ரெண்டாங்கட்டளை பிரமஸ்ரீ கங்காஜடேசசர்மா அவர்கள்.

4. பூவாளூர் சைவசித்தாந்தசபையின் காரியதரிசியவர்கள் முதலாயினோர்.

5. வாலாஜாபாத் பாடசாலை உபாத்தியாயர் ஸ்ரீமான் ம. தி. மாசிலாமணிமுதலியாரவர்கள்.

6. செட்டிணை ஸ்ரீ ஏகாம்பரேச விலாச லைப்ரெரி அதிபர் ஸ்ரீமான் ஆர். வி. சுப்பராயலுசெட்டியாரவர்கள்.

7. ராயவரம் ஸ்ரீமான் வெ. அ. சு. அழகப்பசெட்டியாரவர்கள்.

8. தூத்துக்குடி சைவசித்தாந்தசபை ஸ்ரீமான் எ. எஸ். தெய்வநாயகம்பிள்ளையவர்கள், மதுராகம்பெனி.

9. தூத்துக்குடி ஷை சபை ஸ்ரீமான் ஏ. ஆர். சிதம்பரம்பிள்ளையவர்கள். மதராஸ் பாங்க்.

10. ஷை சபை ஸ்ரீமான் தெ. ச. சுப்பிரமணியப்பிள்ளையவர்கள்.

11. ஷை சபை ஸ்ரீமான் யன். சிவகுருநாதப்பிள்ளையவர்கள்.

12. ஷை சபை தெ. சு. ச. சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள்.

13. திருநெல்வேலி புதுக்குடி ஸ்ரீமான் எஸ். ஏ. காசிவிசுவநாதஞ்செட்டியாரவர்கள்.

14. முத்துப்பட்டணம் காரைக்குடி ஸ்ரீமான் ராம. அரு. ராம சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள்.

15. தெ. பழ. சித. சதாசிவஞ்செட்டியாரவர்கள்.

16. ரங்கூன் பேப்பர்கரன்சி ஆபீஸ் ஸ்ரீமான் சோ. சிவஅருண கிரிமுதலியாரவர்கள்.

17. திருவோத்தூர் ஸ்ரீலஸ்ரீ ம. தி. பாநுகவிசுவாமிகள்.

18. சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை ஸ்ரீமான் திரு. வி. உலகநாதமுதலியாரவர்களி.

---

## சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தில்

1915-ம்ஞு போஷகர்களாகவும் சாமாசிகர்களாகவும் இருந்த கனவான்கள்.

### போஷகர்கள்.

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கன்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர் கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்.
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, எஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷி, மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, மயிலை. கதிர்வேல்முதலியாரவர்கள்
சிந்தாதிரிப்பேட்டை வர்த்தகர்.

,, சி. வெங்குபிள்ளையவர்கள், ரிடைர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. முத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி சென்னை.

,, ஆர் காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர் சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடைர்ட் சப் இன்ஜினீர் தங்கசாலைவீதி.

### சாமாசிகர் (அங்கத்தினர்.)

,, சதுரை. ராஜாகண்ணுமுதலியாரவர்கள் பி. ஏ.
சூபரிண்டென்டெண்டு அக்கவுண்டண்டு ஜெனரல் ஆபீஸ்.

,, தி. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் பி. ஏ.
மதராஸ் கிரிஸ்டியன்காலேஜ் சுதேசபாஷை போதகாதிபர்.

,, வி. யென். சரவணமுதலியாரவர்கள் பி. ஏ.
கவர்ன்மெண்டு தமிழ் ட்ரான்ஸிலேட்டர் ஆபீஸ்.

ஸ்ரீமான், எஸ். விநாயகமுதலியாரவர்கள் பி. ஏ. சூபரிண்டெண்டெண்டு,
அக்கவுண்டண்டு ஜெனரல் ஆபீஸ்.
,, இ. ஆதிமூலமுதலியாரவர்கள் கவர்ன்மெண்டு பென்ஷனர்.
,, வே. மீனாட்சிசுந்தரமுதலியாரவர்கள்
ஸர்வேயர் அண்டு ட்ராப்ட்ஸ்மென் கார்பொரேஷன்.
,, பி. வி. சமரபுரிமுதலியாரவர்கள், கிளர்க்
யம். அண்டு யெஸ். யெம். ரெயில்வே இன்ஜினீர் ஆபீஸ்
,, வா. தி. கோவிந்தராஜமுதலியாரவர்கள், கிளர்க்,
கொ ஆபரேட்டிவ் க்ரெடிட் சொசைட்டி ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்.
,, த. அப்பாகண்ணுமுதலியாரவர்கள், கிளர்க்,
பேபர் கரென்ஸி ஆபீஸ்.
,, சி. கெ. பழனிவேல்முதலியாரவர்கள் கிளர்க்
பேபர் கரென்ஸி ஆபீஸ்.
,, ஏ. துரைசாமிமுதலியாரவர்கள், ஸ்டோர்கீப்பர்
யெம். அண்டு யெஸ். யெம். ரெயில்வே கோ ஆபரேட்டிவ் ஸ்டோர்ஸ்.
,, சு. சபாபதிமுதலியாரவர்கள், க்ளியரிங் ஏஜண்டு.
ஸ்ரீமதி, பெங்களூர். நாகரத்தினம் அம்மாள் அவர்கள், சங்கீதபண்டிதை.
,, ம. சி. மனோன்மணியம்மாள் அவர்கள், சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் அத்தியட்சர்களுள் ஒருவராயிருந்தசைவாபிமானி ஸ்ரீ ம. சின்னையாபிள்ளையவர்களின் மனைவியார்.
ஸ்ரீமான், யெஸ். சமரபுரிசெட்டியாரவர்கள், மானேஜர்
பெஸ்டு அண்டுகோ ஆயில்மில்.
,, மி. பார்த்தசாரதிநாயுடு அவர்கள் ஜெயராமமுதலியரவர்கள்
வாழைப்பழக்கிடங்கு.
,, கா. ரா. நமசிவாயமுதலியாரவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
,, ம. இரத்தினசபாபதிமுதலியாரவர்கள்.
கிளர்க் பெஸ்ட் அண்டுகோ
,, தி. முருகேசமுதலியாரவர்கள், பென்ஷனர் மதராஸ் பாங்கு.
,, பி. லோகநாதமுதலியாரவர்கள், கண்ட்ராக்டர்.
,, பு. துளசிங்கமுதலியாரவர்கள்
ப்ரொப்ரைட்டர் பாலநாசு ரைஸ்பௌண்டரி.

ஸ்ரீமான் மயிலை முருகேசமுதலியாரவர்கள், கவர்ன்மெண்டு பென்ஷனர்.

,, பெ. சபாபதிமுதலியாரவர்கள், மணிலாகிடங்கு.

,, தொ. ஞானசம்பந்தமுதலியாரவர்கள், கவர்ன்மெண்டு பென்ஷனர்.

,, கே. சிவசங்கரமுதலியாரவர்கள், டெலிகிராப் ஆபீஸ்.

,, எஸ். டி. சமரபுரிமுதலியாரவர்கள், ஷிப்பிங் அண்டு க்ளியரிங் ஏஜெண்டு.

,, ஆர். விசுவநாதம்செட்டியாரவர்கள், வர்த்தகர்.

,, கு. அ. ற. சுப்பராயசெட்டியாரவர்கள், ஒற்றைவாடை அரிசிமண்டி

,, கோ. சங்கிலிமேஸ்திரியவர்கள், நீலகிரி கோடப்பமந்து காப்பிவர்த்தகர்

,, கோ. ஆறுமுகமேஸ்திரியவர்கள், ஷை

,, கோ. சக்கிரபாணிமுதலியாரவர்கள், அப்பா அண்டு கோ.

,, க. தே. சபாபதிசெட்டியாரவர்கள்; ஒற்றைவாடை அரிசிமண்டி.

,, பொன்னேரி. அரங்கநாதமுதலியாரவர்கள், ஹெட்கிளார்க் ஹோ அண்டுகோ.

,, தி. சுப்பராயநாயகரவர்கள், வர்த்தகர் திருவல்லிக்கேணி.

,, அ. சிங்காரவேலுசெட்டியாரவர்கள், திருவல்லிக்கேணி அரிசிமண்டி.

,, ஆறுமுகநாயகரவர்கள், திருவல்லிக்கேணி அரிசிமண்டி.

,, அ. ப. கோவிந்தசாமிசெட்டியாரவர்கள், திருவல்லிக்கேணி ஷாப்.

,, சு. முருகேசச்செட்டியாரவர்கள், சிந்தாதிரிப்பேட்டை எண்ணெய்மண்டி.

,, ரா. குமாரசாமிசெட்டியாரவர்கள், திருவல்லிக்கேணி மளிகைவர்த்தகர்.

,, ம. மு. கோவிந்தராஜசெட்டியாரவர்கள், திருவல்லிக்கேணி அரிசிமண்டி.

,, வி. கிருஷ்ணசாமிப்பிள்ளையவர்கள், காஷியர் கிங் அண்டு பார்ட்ரிட்ஜ்.

ஸ்ரீமான் பி. சிங்காரமுதலியாரவர்கள், கிருஷ்ணப்பநாய்க்கன் குளத்துவீதி, சென்னை.

,, வி. எஸ். தெய்வசிகாமணிமுதலியாரவர்கள், கிளார்க், எம். அண்டு எஸ். எம். ரெயில்வே இராயபுரம்

,, பார்த்தசாரதிமுதலியாரவர்கள், வெற்றிலை வர்த்தகர்.

,, ஆர். பி. துரைச்சாமிமுதலியாரவர்கள், கவர்ன்மெண்டு பென்ஷனர்.

,, சி. பா. சண்முகமுதலியாரவர்கள், ஜவளி பொடிவியாபாரம்.

,, வீ. சோமசுந்தரமுதலியாரவர்கள், விறகுத்தொட்டி.

,, பி. யெம். முருகேசமுதலியாரவர்கள், காக்ஸ்டன் அச்சுக்கூடம்.

,, கூ. சிவவாசுதேவமுதலியாரவர்கள் அக்கவுன்டன்டு, யெம் அண்டு யெஸ் யெம் ரெயில்வே.

,, சி. கன்னையநாயுடுஅவர்கள், காக்ஸ்டன் அச்சுக்கூட அதிபர்.

,, யெம். நடேசமுதலியாரவர்கள் கார்பொரேஷன் ஓவர்சீயர்.

,, ஜி. முருகேசமுதலியாரவர்கள், கிளார்க், மெக்டாவல் கம்பெனி.

,, எம். இராமலிங்கமுதலியாரவர்கள் வர்த்தகர் கொண்டித்தோப்பு.

,, டி. வி. குப்புச்சாமிமுதலியாரவர்கள், ஷராப், தாலுக்கா ஆபீசு.

,, சி. சுப்பராயப்பிள்ளையவர்கள் கவர்ன்மெண்டு பென்ஷனர்.

,, சி. அம்பலவாணமுதலியாரவர்கள், கிளார்க், க்ராம்டன் கம்பெனி.

,, சி. இராஜரத்தினமுதலியாரவர்கள், கிளார்க், அக்கவுன்டன்டு ஜெனரல் ஆபீஸ்.

,, ஏ. ஆர். சிங்காரமுதலியாரவர்கள், துவிபாஷிகர், கார்டன் உட்ராப் கம்பெனி.

,, இ. சுப்பிரமணியமுதலியாரவர்கள், தொண்டைமண்டலப் பாடசாலை உபாத்தியாயர்.

,, கே. லோகநாதமுதலியாரவர்கள், அச்சுக்கூடத்தலைவர் வைத்தியநாதமுதலிவீதி.

,, வி. கிருஷ்ணசாமிமுதலியாரவர்கள் கார்பொரேஷன் கணிதர்.

,, எம். எம். இராமலிங்கசெட்டியாரவர்கள் பி. ஏ. 249 லிங்க செட்டிவீதி சென்னை.

,, டி. எஸ். நீலகண்டமுதலியாரவர்கள், கிளார்க், மூர்த்திகம்பெனி.

---

## சிவலிங்கவழிபாடு.

(31-வது பக்கத்தொடர்ச்சி.)

இட்டலிங்கமாவது, ஆசாரியர் விசேஷதீக்ஷைபண்ணிச் சீடனைப்பார்த்து "நீ உள்ளளவுங் கைவிடாது இவரை நாடோறும் பூசி" என்று அநுமதிசெய்து, "அடியேன் இச்சரீரம் உள்ளவரையுஞ் சிவபூசை செய்தன்றி ஒன்றும் உட்கொள்ளேன்" என்று பிரதிஞ்ஞை செய்வித்துக்கொண்டுகொடுக்க அவன்வாங்கிப் பூசிக்கும் இலிங்கமாம். இது ஆன்மார்த்தலிங்கம் எனவும் சலலிங்கம் எனவும் பெயர்பெற்று, வாணலிங்கம், படிகலிங்கம், இரத்தினலிங்கம், லோகஜலிங்கம். சைலலிங்கம், க்ஷணிகலிங்கம் எனப் பலவகைப்படும்.

பிராமணர்முதலிய நான்கு வருணத்தாரும் அநுலோமர் அறுவருமாகிய பத்துச்சாதியாருள்ளும், அங்கஹீனரல்லாதவர்கள் இட்டலிங்கபூசைக்கு அதிகாரிகளாவர்; இவர்களுள்ளும், பிணியில்லாதவராய், இடம்பொருளேவல்கள் உடையவராய், சிவபூசாவிதி பிராயச்சித்தவிதி மார்கழிமாசத்துக் கிருதாபிஷேகமுதலாகப் பன்னிரண்டுமாசமுஞ் செய்யப்படும் மாசபூசாவிதி, * சாம்வற்சரிகப்பிராயச்சித்தமாகச் சாத்தப்படும் பவித்திரவிதி முதலியவைகளை நன்குயறிந்தவராய், அறிந்தபடியே அநுட்டிக்கவல்லவராய் உள்ளவர் மாத்திரமே வாணமுதலிய சிவலிங்கப் பிரதிட்டைசெய்வித்துக்கொண்டு பூசைபண்ணலாம். மற்றவரெல்லாரும் க்ஷணிகலிங்கபூசையே பண்ணக்கடவர். அவர், குளிக்கப்புகுந்து சேறு பூசிக்கொள்வதுபோலச் சிவலிங்கப்பிரதிட்டை செய்வித்துக்கொள்ளப் புகுந்து பாவந்தேடிக்கொள்வது புத்தியன்று.

சிவாகம விதிவிலக்குக்களை ஆராய்ந்து, சிவலிங்கங்களைப் பரீக்ஷை செய்து, யாதொரு குற்றமும் இல்லாததாய் நல்லிலக்கணங்கள் அமையப்பெற்றதாய் உள்ள சிவலிங்கத்தையே பிரதிட்டை செய்வித்துக் கொள்ளல்வேண்டும்.

க்ஷணிகலிங்கமாவது பூசித்தவுடன் விடப்படும் இலிங்கமாம். இது மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், உருத்திராக்ஷம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை, சருக்கரை, மா எனப் பன்னிரண்டுவகைப்படும்.

---

* சாம்வற்சரிகம்-வருஷத்திற்செய்யப்படுவது.

# சிவக்ஷேத்திராலய மகோற்சவ உண்மைவிளக்கம்.

இந்நூல் சிவவிளக்கம், க்ஷேத்திராலயவிளக்கம், மகோற்சவவிளக்கம் என முப்பாகங்களையுடையது.

சிவவிளக்கத்திலே, சைவசித்தாந்தசமய சாத்திர பிரபாவம், பதி பசு பாச உண்மை "சிவ" என்னும் வாக்கிய விசேடம், அதில் ஒவ்வோர் தாதுக்களினின் றுந் தோன்றும் அர்த்தங்கள், அவ்வாக்கியம் பதிக்காகுந் தன்மை, சிவ சொரூப பேதங்களின் தெளிவு, அவரது திருமுக முதலிய அங்கபிரத்தியங்கங்களின் உண் மைகள், அவர் சிகை, உபவீதம், சந்திரன், இடபம், ஸ்திரீபுஞ்ச நபுஞ்சக வடி வம், திரிநேத்திரம், அட்டமூர்த்தம், மான், மழு, சூலம், வாள், வச்சிரம், பாசம், தமருகம் முதலிய சாங்க உபாயங்களைக்கொண்ட காரணம், அவற்றின் ஞானார்த் தங்களாதியவும்;

க்ஷேத்திராலயவிளக்கத்திலே, சரியை, கிரியை, யோக, ஞான சாதன உண்மை, க்ஷேத்திராலய மகிமை, அந்தரியாக பூசாவிசேடம், சரீர அண்ட சம வுண்மை, க்ஷேத்திர உண்மை, கைலாசம் சிவசாலோகாதி முத்திகள், தீர்த்தங் கள் என்பவற்றின் உண்மைகள், ஆலயகர்ப்பக்கிருகம், மண்டபங்கள், கதவு, சபைகள், தூபி, துவசத்தம்பம், தேவமூர்த்தங்கள், சிவலிங்கம், நந்தி, பலிபீடம், திருவாசி, திரைச்சீலை யாதியவற்றுண்மைகளும்;

மகோற்சவவிளக்கத்திலே, பிரதக்ஷிணம், சிவதரிசனம், அபிடேகம், திருப்பள்ளித்தாமம், முரசு முதலிய வாத்தியங்களிசைத்தல், கீதம்பாடல், சோடசோபசாரம், பஞ்சோபசாரம், யாகம், கும்பம், என்பவற்றின் ஞானார்த்தங் களும், அயனம், சங்கிராந்தி, விஷு, கிரகணம், அமாவாசி, பௌர்ணமி என்னுங் காலங்களைத் தேகத்திற்றெறியும் உண்மை, துவசாரோகண மாகாத்மியம், க0-கக, உக என்னுந் தினங்களிற் செய்யப்படும் மகோற்சவங்களின் காரணங்கள், விருக்ஷ த்தடிச் சேவை, சூரிய சந்திர பிரபாகாரம், நந்திவாகனம், பூதவாகனம், பல்லக்குச் சேவை, நாகவாகனம், இலிங்காகாரம், இடபவாகனம், யானைவாகனம், இரதம், அசுவவாகனம், என்பவற்றின் ஆரோகண வுண்மை, பிக்ஷாடனமூர்த்தம், திருநட னம்முதலிய திருக்காட்சிகளின் உண்மைகளும் ப்றபல அரிய நூற் பிரமாணங்க ளோடு தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

இதன் விலை அணா 8.

திரு. வி. உலகநாதமுதலியார்,

"செந்தமிழ்ச்சிந்தாமணி" ஆபீஸ், இராயப்பேட்டை, சென்னை.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளி னுடைய உபத்திரவம் பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதுறக்கா முதலிய எவ்வித, விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0-8-0. டசன் 1-க்கு ரூ. 5-0-0.

விலாசம்:—
வி. எ. எஸ். பாணி,
நே. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

பித்தவாயுலேகியம்.

இதுவே அநுபவப்பிரசித்தமான தாதுபுஷ்டிலேகியம்.

20 வேளைக்குச்சாப்பிடக்கூடிய டப்பி ஒன்று விலை ரூபா 1.
வி. பி. செலவு அணா 3.

இ. கண்ணப்பமுதலியார்,
43, பாலையப்பன்வீதி சென்னை.

112

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்
மாதாந்தப் பத்திரிகை.

மலர் ௨.] நளஹு ஆடிமீ - 1916ஹு ஜூலைமீ [இதழ் 7.

உள்ளுறை. பக்கம்.



இது
திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்
சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்
இருக்கம் - ஆதிமூலமுதலியார்
*(Retired Accountant, Military Accts. Department.)*

சென்னை
சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.
1916
வருடச்சந்தா அணா 12.
(தபாற்செலவுட்பட.)

சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் போஷகர்கள்:

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கன்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர், கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்.
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, எஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷிகர், மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, சி. வெங்குபிள்ளையவர்கள்
ரிடைர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. முத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி, சென்னை.

,, ஆர். காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர், சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடைர்ட் சப் இன்ஜினீர், தங்கசாலைவீதி.

,, ராய் பஹதூர், சிவரம், சுப்பராயமுதலியாரவர்கள்.

---

# ஆயுள்சந்தாதாரர்கள்.

சென்ற மேமீ பத்திரிகையில் வெளியிட்ட விண்ணப்பத்தின்படி (26–6–16) இதுவரையில் 21 கனவான்கள் இப்பத்திரிகைக்கு ஆயுள் சந்தாதாரர்களாயிருக்கச் சம்மதித்தார்கள். கீழ்க்குறித்த கனவான்கள் தங்கள் ஆயுள்சந்தாத்தொகைகளை உடனே மணியார்டர் மூலமாய்ச் செலுத்தி உபகரித்தார்கள். மற்றுமுள்ள கனவான்களும் விரைவில் ஆயுள்சந்தாதாரர்களாய்ச்சேர்ந்து உபகரிக்குமாறு பிரார்த்திக்கின்றோம்.

ஸ்ரீமான் தே-பழ-சித-சதாசிவஞ்சேட்டியாரவர்கள்–கோத்தமங்கலம்.
,, சி-ராம-அ-இலக்குமணச்சேட்டியாரவர்கள் ,,

ப–ர்.

---

## திருவிடைமருதூர்

### மஹாகும்பாபிஷேக மஹோத்ஸவம்.

நளஸு ஆனிமீ 27உ—1916ஸு ஜூலைமீ 10உ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நள௵ ஆடிமீ —1916௵ ஜூலைமீ || [இதழ் 7

அரியோடு நான்முகத்தோ னாதிசுரர்க் கெல்லாந்
தெரியாமை செந்தழலாய் நின்ற—வொருவன்சீர்
தன்றலையின் மேற்றரித்த சம்பந்தன் றாளிணைக
ளென்றலையின் மேலிருக்க வென்று.

## சிவஞானபோதம்.

சிவஞானபோதம் என்பது பதி பசு பாசங்களின் இலக்கணங்களை யெல்லாம், பெரியமலையின் உருவத்தை ஒரு சிறிய கண்ணாடியானது தன்னுள் அடக்கிக்காட்டுவதுபோல், பன்னிரண்டு சூத்திர ரூபமாயிருக்கும் தன்னிடத்தில் அடக்கிக்கூறுவதும், சகலவேதாகமசாரமாயிருப்பதும், எல்லாஞானநூல்களுக்கும் தாய்நூலாயிருப்பதுமான ஒப்பற்ற ஞானசாஸ்திரமாம்.

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்.

இந்நூல் வடமொழி தென்மொழி இரண்டிலும் உள்ளது. வடமொழிச் சிவஞானபோதம் சிவபெருமானால் ஆகமத்தில் அருளிச்செய்யப்பட்டது. தமிழ்ச் சிவஞானபோதம் உலகமுய்ய பூர்வஞானத்தோடே திருவெண்ணெய் நல்லூரில் திருவவதாரஞ்செய்து, குழந்தைப்பருவத்திலேயே கைலாசவாசியாகிய பரஞ்சோதிமாமுனிவரால் ஞானோபதேசஞ்செய்யப்பெற்று, அத்தலத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் சுயம்பு மூர்த்தியாகிய பொல்லாப்பிள்ளையா

என்னும் விநாயகக்கடவுளிடம் சகலவேதாகமங்களையுங்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடியிருந்த மெய்கண்டதேவரால் அருளிச்செய்யப்பட்டது.

அளவிடற்கரிய வேதாகம உண்மைகளை இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கிக்கூறுமாயின் இதின்பெருமையையும், வடமொழி தென்மொழிகளின் பெருமையையும், இதைச்செய்தவர் பெருமையையும் அளவுபடுத்திக்கூற யாவராலாகும்!. சகலவேதாகம உண்மைகளையும், வடமொழியில் எல்லாம்வல்ல இறைவனுர் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கியருளியதுபோலவே, தமிழ்மொழியில் நமது மெய்கண்டதேவரும் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கிக் கூறியருளினர் எனில், மெய்கண்டதேவரை அவ்விறைவரேயென்று கூறுவதன்றி வேறு யாரென்று கூறுவது?.

## திருக்களிற்றுப்படியார்.

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க் கவன்.

இந்நூலுக்குப் பெரியோர்கள் பலர் உரைசெய்தார்கள். மெய்கண்டதேவரே தமக்குப் பொல்லாப்பிள்ளையார் அருளிச்செய்த சூர்ணிகைக்கிணங்க வார்த்திகம் என்னும் பொழிப்புரை யருளிச்செய்தனர். (சூர்ணிகை என்பது சூத்திரமுதலியவற்றின் பொருளை இலேசாக சுருங்கிய வசனரூபமாயுரைப்பது.) சிவஞானமுனிவர் சூத்திர வார்த்திகங்கட்கும் உதாரணச்செய்யுட்களுக்கும் சிற்றுரையும், மாபாடியம் என்னும் பேருரையுஞ் செய்தருளினர். பாண்டிப்பெருமாள் என்பவர் பதவுரையும் விருத்தியுரையும் செய்துபகரித்தனர். நவீனமாக சாம்பவ ஸ்ரீ காசிவாசி செந்திநாதையரவர்கள் சிவஞானபோதவசனலங்காரதீபம் என்னும் நூல்செய்தனர். இவையாவும் சிவஞானபோதத்திலுள்ள சித்தாந்த உண்மைகளைப் பலரும் எளிதில் உணரவேண்டி இயற்றப்பட்டனவெனினும், தமிழ்ப்பாஷையில் என்னினுங்குறைந்த ஆராய்ச்சியுடையார் இலேசாக அறிந்துகொள்ளக்கூடியனவாயில்லை. ஆதலால், சைவசமயத்திற் பிறந்தும் பலர், நெல்லைக்குற்றி யுண்ணாது உமியைக்குற்றிக் கைவருந்துவார்போல், தங்களுக்குப் பிதுரார்ஜிதமாகவுள்ள பரமஞான பொக்கிஷமாகிய இந்நூலைக் கற்காது, கற்பதற்கும் குதர்க்கஞ்செய்வதற்கும் எளியனவாகிய புறச்சமயநூல்களை ஞானநூல்

களென்று மயங்கிப் படித்து, தங்களை ஞானிகளென்றும் வேதாந்திக ளென்றும் சொல்லிக்கொண்டு, உயிர்க்குறுதிபயக்கும் சிவபூசை, சிவ னடியார்பூசை, பஸ்மருத்திராக்கதாரணம் முதலிய சைவதவ வொழுக் கங்களைக் கைவிட்டு அவமே காலங்கழிக்கின்றார்கள். ஆதலால் சிவ ஞானபோதத்தைக் கையினாற்பரிசித்தற்கும் அருகனல்லாத யானும், உண்மைச்சிவனடியார்களின் திருவடிகளைத் தியானித்து, சாட்டையிற் பம்பரசாலம்போல் எல்லாவற்றையும் ஆட்டும் இறைவனாது திருவரு ளைச் சிந்தித்து, இதுவரையில் வெளிவந்துள்ள உரைகளை ஆதாரவாக் கொண்டு, சிவஞானபோதம் என்னும் மகுடத்தின் கீழ் இந்நூலிற் பொதிந்துள்ள சித்தாந்த உண்மைகளை என்னாலியன்றவரையில் யாவ ரும் எளிதில் உணருமாறு விளக்குவான் தொடங்கலுற்றேன்.

## சிவஞானபோதம்

### முதற்சூத்திரம்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

(இ-ள்.) அவன் அவள் அது எனும் அவை=அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் சுட்டியுணரப்படும் பிரபஞ்சத்தொ குதி—மூவினைமையின்=(தோற்றம் நிலை இறுதி என்னும்) முத்தொழி லையுடைமையால்—தோற்றிய திதியே=ஒருவனால் தோற்றப்பட்ட உள் பொருளேயாம்—ஒடுங்கி மலத்து உளதாம்=அது தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாய்நின்ற கடவுளினின்றும், சகசமலம் நீங்காமை யால், அது நீங்கும்பொருட்டு மீளத்தோன்றுவதாம்—அந்தம் ஆதி= ஆதலால் சங்காரத்தொழில் செய்யுங்கடவுளே உலகத்திற்கு முதற்கட வுள்—என்மனார் புலவர்=என்று அளவை நூலுணர்ந்தோர் கூறுவர்.

பிரபஞ்சம் பலவகையாய்ச் சுட்டியுணரப்படுதலால் அதைப்படைத் துக்காத்தழித்தற்குச் சுட்டுணர்விறந்த கடவுள் ஒருவர் வேண்டும் என் பார் பிரபஞ்சத்தை "அவனவ ளதுவெனு மவை" என்றனர். பிரபஞ்சம் தோன்றி நின்று அழியுந்தன்மையுடையதாதலினால் அதைத்தோற்றி, நிறுத்தி, அழித்தற்கு, தோற்றமு மீறுமில்லாத கடவுள் ஒருவர் வேண் டும் என்பார் "மூவினைமையின்" என்றனர். உலகம் தானே தோன் றாமல் கடவுளால் தோற்றுவிக்கப்பட்டமையால் தோன்றிய என்னாது "தோற்றிய" என்றனர். பிரபஞ்சமானது சிலமதவாதிகள் கூறுவது போல், முயற்கொம்புபோன்ற இல்பொருளன்று, உள்பொருளே என்

பார் "திதியே" என்றனர். (திதிப்படும் உலகத்தை "திதி" என்றது உபசாரம்.) பிரபஞ்சம் மலபரிபாகம் உண்டாதற்பொருட்டுக் கடவுளிடம் ஒடுங்கி மீளவும் தோன்றுவதனால் "ஒடுங்கி மலத்துளதாம்" என்றனர். (ஒடுங்கிமலத்துளதாம்=ஒடுங்கின மலத்தான் உளதாம்.) சங்காரகாரணனாகிய சிவபெருமானையே இவ்வுலகம் முதலாக உடையது என்பார் "அந்தமாதி" என்றனர். (அந்தம்=அந்தத்தைச் செய்யுங்கடவுள்=சங்காரகர்த்தா.)

இச்சூத்திரம் அநுமானப்பிரமாணமாகிய அளவையால் இவ்வுலகம் கடவுளை முதலாக உடையது என்பதை விளக்கவந்தமையால், "என்மனார் புலவர்" என்பதற்கு அளவை நூலுணர்ந்தோர் கூறுவர் என்று பொருளுரைக்கப்பட்டது.

## பிரமாணம்.

பிரமாணம், காண்டல் கருதல் உரை என, மூன்று வகைப்படும். இவற்றுள், காண்டல் பிரத்தியக்ஷப் பிரமாணமும், கருதல் அநுமானப் பிரமாணமும், உரை ஆகமப்பிரமாணமுமாம். மற்றெல்லாப்பிரமாணங்களும் இம் மூன்றினுள் அடங்கும்.

பிரத்தியக்ஷப்பிரமாணமாவது, கண், செவி, வாய், மூக்கு, மெய் இவ்வைந்திந்திரியங்களாலும் முறையே உருவம், சத்தம், இரதம், கந்தம், பரிசம், என்பவைகளை யறிதலாம். (பிரத்தியக்ஷம்=இந்திரிய விஷயம். அக்ஷம்=இந்திரியம். பிரதி=விஷயம். அக்ஷம் என்பது கண் எனவும், பிரதி என்பது அது காண்கிற ஒளி எனவும் பொருள்படும்.

அநுமானப்பிரமாணமாவது அநுமானத்தாலே தோன்றும் அநுமேயத்தையறிதல். உதாரணம்—காணப்பட்ட புகையைக்கொண்டு காணப்படாத (மறைந்துள்ள) நெருப்பையறிதல்.

ஆகமப்பிரமாணமாவது நூல்களைக்கொண்டறிதல்.

சித்துப்பொருளாகிய கடவுளை சடப்பொருள்களாகிய இந்திரியங்களால் அறிதல்கூடாது. அசித்துப்பொருள்களாகிய இந்திரியங்களால் அறியப்படுவனவெல்லாம் அசித்துப்பொருள்களாகவேயிருக்கும். ஆதலால் பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் சச்சிதானந்தப்பொருளாகிய கடவுளை அறியலாகாது. அவரை ஆகமப்பிரமாணத்தையும் அநுமானப்

பிரமாணத்தையுமேகொண்டு அறிதல்வேண்டும். ஆனல், நூல்கள் கடவுள் மனம் வாக்குக்காயங்களால் அறியப்படாதவர் என்கின்றனவே, இதன்கருத்துயாது எனில், கூறுவாம். கடவுள் மனம்வாக்குக்காயங்களால் எட்டப்படாதவர் என்பது உண்மையே. சிவஞானசித்தியாரிலும்,

மறையினு லயனன்மாலான் மனத்தினன் வாக்சான்மற்றுங்
குறைவிலா வளவினலுங் கூருெணு தாகிநின்ற
விறைவஞர் கமலபாத மின்றியா னியம்புமாசை
நிறையினர் குணத்தோர்க்கெல்லா நகையினை நிறுத்துமன்றே.

என்னுஞ் செய்யுளில், கடவுள் மனம்வாக்குக்காயங்களால் மாத்திரமன்றி, வேதங்களாலும் பிரம விஷ்ணுக்களாலும் அளவைகளாலும் ஓதுதற்கரியவர் என்று அருளிச்செய்யப்பட்டது. ஆனல், அவர் எவராலும் எதனலும் அறியப்படாதவராயிருந்தால், அவர் இல்பொருளாயிருக்கவேண்டும். அவரால் யாதொரு பிரயோசனமுமின்ருய் விடும். ஆதலால், கடவுள் எதனலும் எவராலும் அறியப்படாதவர் என்றது, அவாருளைக்கொண்டன்றி ஆன்ம வறிவினல் சுட்டியறியப்படாதவர் என்று நூல்கள் கூறியவாறும். இதுபற்றியே, அச்சித்தியாரிலேயே,

அருளினு லாகமத்தே யறியலா மளவினலுந்
தெருளலாஞ் சிவனைஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே
மருளெலா நீங்கக்கண்டு வாழலாம் பிறவிமாயா
விருளெலா மிரிக்கலாகு மடியரோ டிருக்கலாமே.

என்றும் அருளிச்செய்யப்பட்டது. இவற்ருல் அருளில்லாதவர்களுக்கு ஆகமப்பிரமாணங்களும் அநுமானப்பிரமாணங்களும் எவ்வளவுதான் எடுத்துக்காட்டினலும் பயன்படா வென்பதும், அருளுடையார்க்கே அவைபயன்படும் என்பதும் விளக்கியவாறும்.

## திருக்குறுந்தொகை.

குறிகளு மடையாளமுங் கோயிலும்
நெறிகளு மவர்நின்றதோர் நேர்மையும்
அறியவாயிர மாரண மோதினும்
பொறியிலீர் மனமென்கொல் புகாததே.

## திருத்தாண்டகம்.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சிமயானத்தான்
 வார்சடையா னென்னினல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
 னோரூரனல்ல னோருவமனில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே
 கண்ணாகக் காணினல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ
 னென்றெழுதிக் காட்டொணாதே.

## கந்தரநுபூதி.

முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

கடவுளின் அருளிருந்தால் சகல ஞானங்களும் தாமே உண்டாகும். ஆதலால், அவரருளுடையோர்க்கு ஆகமப்பிரமாணங்களும் அளவைப்பிரமாணங்களும் எற்றுக்கு எனின், கூறுவாம். அவரருளைப்பெற்றால் சகல ஞானங்களும் தாமே உண்டாம் என்பதும் உண்மையே. இதனை,

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

என்னும் திருவருட்பயனாலும், அருட்சத்தியாகிய உமாதேவியாருடைய திருமுலைப்பாலை உண்டமாத்திரத்திலேயே ஆளுடைய பிள்ளையார் ஞானசம்பந்தராய் விளங்கின சரித்திரத்தாலும் உணரலாகும். ஆனால், ஆன்மாக்கள் பலவகைப்பட்ட பக்குவமுடையவர்களாயிருத்தலினால், அவரருளும் அவ்வவர்பக்குவத்திற்கேற்பப் பலபடியாக உபகரிக்குமேயன்றி எல்லாருக்கும் ஒரே அளவாகவும் ஒரே தன்மையாகவும் உபகரிக்காது. மனிதர்கள் சாமுசித்தர், வைநயிகர், ப்ராகிருதர் என மூன்று றப்படுவர் இவர்களுள், சாமுசித்தராவார் முற்பிறவிகளில் சரியை கிரியை யோகங்களைச்செலுத்தி, அத் தவவிசேடத்தால் பூர்வஞானத்தோடே பிறந்து, மோட்சம் ஒன்றையே அபேட்சித்திருப்பவர்கள். இவர்களுக்குச் சிவபெருமான் தாமே நேரில் அநுக்கிரகஞ்செய்வர். ஆதலால் இவர்களுக்கு ஞானநூல்கள் வேண்டுவதின்றாம். வைநயிகர் எனப்படுவார் முற்போந்த சனனங்களில் புறச்சமயங்களை யநுட்டித்

துப்பெற்ற புண்ணியபரிபாக விசேடத்தால் சைவசமயத்திற் பிறந்து வேதசிவாகமங்களாகிய முதனூல்களையும் அவற்றின் புடைநூல் சார்பு நூல்களையும் ஓதி, அவற்றில் விதித்தவாறொழுகி முத்திபெற முயலு வோர். ப்ராகிருதர் எனப்படுவோர் உலகவாழ்க்கையையே சாஸ்வதம் என்று மதித்து, மோட்சாபேட்சையின்றி, கடவுள் வழிபாட்டைக் கைவிட்டு, மிருகங்களைப்போல் உண்டு உறங்கிச் சுகித்திருப்பவர்கள். இம்மூவருள் உத்தமராகிய சாமுசித்தருக்கும் அதமராகிய பிராகிருத ருக்கும் ஞானநூல்கள் வேண்டுவதில்லை. மத்திமராகிய வைநயிகருக்கே அவைவேண்டும்.

## சிவஞானசித்தியார்.

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணும்
தொண்டரைத் தானேதூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதிவீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள்சேரும் பரிசினைப் புகல லுற்றாம்.

(இ-ள்.) பண்டை நல் தவத்தால்=முன்செய்த நல்ல சைவதவ விசேடத்தால்—தோன்றி=(சாம்சித்தராய்) பிறந்து—பரமனை=முதல் வனிடத்தில் — பத்திபண்ணும் = (முத்திவிரும்பி) பத்திசெய்கின்ற— தொண்டரை=சிவபத்தரை—தானே=(நூல்வழியாலன்றி அம்முதல் வன்) தானே—தூயகதியினில் தொகுப்பன்=பரிசுத்தமாகிய சிவகதி யில் சேர்ப்பன். (ஆகலால் அவர்களுக்கு நூல்வேண்டுவதில்லை) மார்க் கர் கண்டநூல் ஓதி வீடு காதலிப்பவர்கட்கு=சிவஞானிகள் பிரமாண மென்றறிந்து கைக்கொண்ட நூல் ஓதி அதன்வழியாய் முத்திபெற விரும்பும் வைநயிகராயினோர்க்கு—ஈசன் புண்டரிகத் தாள்சேரும் பரி சினை புகலலுற்றாம்=சிவனுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளைக் கூடும் முறைமையினை வகுத்துக்கூறுகின்றோம். (எ-று.)

காணப்பட்ட பிரபஞ்சத்தைக்கொண்டு காணப்படாதகடவுள் ஒரு வர் உண்டென்று அநுமானப்பிரமாணத்தாலும் ஆகமப்பிரமாணத்தா லும் நம்பி, அவரை மெய்யன்போடு வழிபடுவார்க்கே அவரருளுண்டா கும். அவ்வாறு வழிபடாதவர்க்கு அது உண்டாகாது. இதனை "ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங் காலமே" என்னுந் திருவாசகத்தாலும் உணரலாம். ஆகலால் சிவஞானபோதத்தின் இம் முதற்சூத்திரமானது உலகிற்கு முதற்கடவுள் சிறப்புவகையால் உண் டென்னும் ஆகமப்பிரமாணத்தை அநுமானப்பிரமாணத்தால் வலியு றுத்துகின்றது.

(தொடரும்.)

## வரகுணதேவர்சரித்திரம்.

பாண்டிமாநாட்டிலே, மதுரைமாநகரத்திலே, வரகுணதேவர் என்னும் அரசர் ஒருவர் இருந்தனர். அவர் சிவபத்தி சிவனடியார் பத்திகளிற் சிறந்து, மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் பாதுகாத்து மநுநீதி வழாமல் செங்கோல்செலுத்திவருநாளில், ஒருநாள், துட்டமிருகங்களால் தன்குடிகளுக்குத் துன்பம் நேரிடாமலிருக்கவேண்டி, காட்டிற் சென்று வேட்டையாடிக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில், தற்செயலாய், அவர் ஏறிச்செலுத்திய குதிரை ஓர் ஆலமரநீழலில் அயர்ந்து நித்திரைசெய்துகொண்டிருந்த அந்தணன் ஒருவனை மிதித்தலும், அவன் உடனே உயிர் நீங்கினான். வரகுணதேவர் அதையறியாமலே தாமேறிய குதிரையோடு அக்கானகத்தைவிட்டு நீங்கித் தமது கடிமனைபுகுந்திருந்தனர். அம்மறையவனுறவினர் அதையறிந்து அக்கோமானிடம் சென்று முறையிடுதலும், அவர் மிகவும் மனம்வருந்தி, அவர்களுக்கு வேண்டும்பொருள் கொடுத்தனுப்பினார். பிராமணன் தன்னால் இறந்தமைக்கு மிகவும் துயர்கூர்ந்திருந்த அவ்வரசர் பெருமானைப் பிரமகத்திப்பற்றி வருத்தத்தொடங்கியது. அதனால் அவர் நாளுக்குநாள் பொலிவிழந்து, துன்பக்கடலில்மூழ்கி, அது தீர்தற்பொருட்டு எண்ணிறந்த பிராயச்சித்தங்களைச் செய்தனர். செய்தும், அது தீராமையால், கடைசியாக, சர்வபாவங்களையும் சாம்பராக்கவல்லது சிவவழிபாடே என்றுணர்ந்து, திருவாலவாயிலுள்ள பொற்றாமரைத் தீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானஞ்செய்து சோமசுந்தரக்கடவுளையும் அங்கயற்கணம்மையாரையும் ஆயிரத்தெட்டுமுறை வலம்வந்து, வாயாரப்பாடி வணங்கி, "எம்பெருமானே, இந்திரன் விருத்திராசுரனைக்கொன்றதனாலடைந்த பிரமகத்தியையும், தாயைக்கூடித் தந்தையைக்கொன்ற மாபாவியின் பாதகத்தையும், அவர்களறிந்து செய்தும், போக்கியருளினீர். அடியேன் அபுத்திபூர்வமாகச்செய்த இந்த அத்தியையும் போக்கியருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அப்போது சோமசுந்தரக்கடவுளின் அருளால், "அரசனே, பொன்னிநாட்டரசனாகிய விக்கிரமச்சோழன் உன்னோடு போர்செய்யவருவான். அப்போது, நீ நமதருளால் அவனை வென்று துரத்திக்கொண்டு செல்லுகையில், நம்மை நாமே அருச்சித்து வழிபட்டுக்காட்டிய திருவிடைமருதூர் என்னுந் திருப்பதியை யடைவாய். அவ்விடத்தில் உன்னைப் பிடித்திருக்கும் பிரமகத்தி நீங்கிவிடும்" என்னும் அசரீரிவாக்கு உண்டாயிற்று. அதைக்கேட்டு, வரகுணதேவர் அளவிலா மகிழ்ச்சியடைந்து, சோமசுந்தரக் கடவுளைப் பலமுறை வீழ்ந்து வணங்கி மீண்டு தமதரண்மனையடைந்தனர். சிலநாளானபின், விக்

கிரமச்சோழன் தம்மிடம் வந்து போர்செய்ய, வரகுணதேவர் அவனே வென்று துரத்திச்செல்லுகையில், திருவிடைமருதூரையடைதலும், இறைவர் திருவருளால், மருதவாணரை வணங்கும் விருப்பம்மேலிட, அவர் பகைவனைத் துரத்திச்செல்வதைமறந்து, காவிரிநதியில் ஸ்நானஞ் செய்து, மருதவிருக்ஷ நீழலில் வீற்றிருக்கும் இறைவனுரைத் தொழ வேண்டி, கீழைக்கோபுரவாயிலைக்கடந்து, திருக்கோயிலுட்புகுந்தமாத்தி ரத்தில், பிரமச்சாயை அவரோடு செல்லமாட்டாமல் புறத்தே நின்றது. அதையுணர்ந்து வரகுணதேவர் இன்பவாரிதியில் மூழ்கினவராய், என்பு நெக்குருகவும், கண்கள் ஆனந்தவருவிசொரியவும், மருதப்பிரானுரை வலம்வந்து, தோத்திரம்செய்து பணிந்து, தம்மையிடர்தீர்த்தாட்கொ ண்டருளிய மருதிடங்கொண்ட மாணிக்கத்தை விட்டுப்பிரிய மனமில் லாதவராய், திருவிடைமருதூரிலேயே வசித்துக்கொண்டு, அப்பெரு ருமானே இடையறுத உழுவலன்போடு தினந்தோறும் வழிபட்டுக் கொண்டிருந்தனர்.

அவ்வழிபாட்டின் சிறப்பால் நாளுக்குநாள் அவருடைய கரணங்க ளெல்லாம் சிவகரணங்களாய் மாறுவனவாயின. காமுகனுக்கு அவனல் விரும்பப்பட்ட காமக்கிழத்தியின் ஆடையாபரணங்களும் அக்காமக் கிழத்தியின் வடிவமாகத் தோன்றுவதுபோல், வரகுணதேவருக்குச் சிவசம்பந்தமுடைய பொருள்களெல்லாம் சிவபெருமானுடைய அருட் டிருமேனியாகத்தோன்றின. ஆதலால், அவர் சிவவேடந்தரித்தவர் யாவராயிருப்பினும், அவர்களைச் சிவபெருமானுகவே மதித்தொழுகும் ஒழுக்கத்திற்சிறந்து விளங்குவாராயினர். அவர் அவ்வாறு அளவுகடந்த சிவபத்திசெய்து வரும்நாளில், ஒருநாள், ஒரு கள்வன் அவருடைய அரண்மனையிற்புகுந்து களவாடி வெளியேவருங்கால், காவலாளர்கள் அவனைப்பிடித்துக்கட்டி இழுத்துக்கொண்டுபோய் அவர்முன்விட்டார் கள். அவர் அக்கள்வன் சரீரத்தில் விபூதியிருக்கக்கண்டு, அவன் கள் வன் என்பதை முற்றிலும்மறந்து, "இச்சிவனடியார் சிவபுண்ணியஞ் செய்தற்பொருட்டுப் பொருள்வேண்டி இவ்விடம்வந்து களவாடியிருத் தல்வேண்டும்" என்றுசொல்லி உடனே அவன் கட்டவிழ்ப்பித்து, அவ னுக்கு இன்னும் அதிகபொருளைக்கொடுத்து உபசரித்தனுப்பினர்.

ஒரு மழைக்காலத்தில் காட்டில் நரிகள் ஊளையிடுவது அவர்செவி க்கு அவைகள் "சம்போ, சம்போ" என்பதுபோலிருந்தது. அதனுல் அவர், "இவைகள் எம்பெருமானைச் சம்போ சம்போ வென்று துதிப் பதனுல் இவைகளுக்குச் சம்புவென்னும் பெயர் உண்டாயிற்று போலும். உயிர்களுக்குத் துக்கநிவர்த்திசெய்து சுகத்தைக்கொடுப்பவன் என்னும்

பொருளைத்தரும் சம்பு என்னும் திருநாமத்தால் இவைகள் எம்பெருமானை யழைப்பதைநோக்கின், இவைகள் குளிரினால் தங்கட்குண்டாகிய துன்பத்தைப்போக்கவேண்டி அவரை அத்திருநாமத்தால் தோத்திரஞ்செய்கின்றனபோலும்" என்றுசொல்லி அவைகள் குளிரினால் வருத்தமுறாவண்ணம் அவை வசிக்கும் கானகமெங்கும் கூடாரங்களடித்து வைத்தனர்.

மற்றொருதினம் தவளைகள் கத்திய சத்தமானது, அவர் செவிக்கு அர அர என்பதுபோலிருந்தது. அதனால், அவர் "இவை பசியால் வருந்தி உயிர்களின் துக்கத்தை அரித்தலால் அரன் என்னும் திருநாமத்தையுடைய நம்பெருமானை அர அர வென்று துதிக்கின்றனபோலும்" என்றுசொல்லி அவை வசிக்கும் நீர் நிலைகளையடைந்து அவற்றில் பொன் மணலையும், இரத்தினங்களையும் அரிசி முதலியவற்றோடு கலந்து சொரிந்தனர்.

மற்றொரு வைகல், சிவநேயரொருவர் மருதவாணருக்குத் திருமஞ்சனத்தின்பொருட்டு எண்ணெயாட்டவேண்டி, எள்ளை வெயிலிற் காயவைத்திருந்தனர். அவ்வழியே சென்றவனொருவன் அவ்வெள்ளில் ஒருபிடி எடுத்துத் தன் வாயிலிட்டு உண்ணத்தொடங்கினான். அச்சிவனடியார் அதைக்கண்டு, அவனைப்பிடித்துக்கொண்டுபோய் வரகுணதேவர் முன்விட்டுப் பிரியாது செய்தனர். வரகுணதேவர் பிரதிவாதியைப்பார்த்து "நீ ஏன் எள்ளைத்தின்றாய்?" என்றனர். அவன் "மகாராசாவே, இச் சிவனடியார் சிவபெருமானுக்குத் திருமஞ்சனத்தின்பொருட்டு எள்ளைக்கொடுத்து அவருக் காட்படுகின்றார். அவரைப்போல் நானும் ஆட்படுவதற்கு இந்தச் சனனத்தில் எனக்குப் புண்ணியமில்லாமையால், இவ்வெள்ளைத் திருடித்தின்றால் மறுபிறப்பில் மாடாகப்பிறந்து இறைவருக்கு எண்ணெயாட்டும் செக்கையிழுத்து ஆட்படும் புண்ணியம் உண்டாகும் என்று நினைத்துத்தின்றேன்" என்றான். அதைக்கேட்ட அரசர் பெருமான் திடீரென்று சிங்காதனத்தினின்றும் கீழே இறங்கி, அவனை வணங்கி, சுவாமி, அச்செக்கையிழுப்பதற்கு ஒருமாடுபோதாது. இரண்டுமாடுகள்வேண்டும். தாங்கள் ஒருமாடானால் நான்மற்றொரு மாடாகும்வண்ணம் எனக்கும் அவ்வெள்ளில் ஒருசிறிது தாரும்" என்று சொல்லி அவன் எச்சிலோடுகூடிய எள்ளைவாங்கிப் புசித்தனர்.

மற்றொருநாள், வரகுணதேவர் மருதப்பருடைய சந்நிதியின் வெளிமாடவீதியில் பிரதக்ஷிணம் வருகையில், இறந்தமனிதனுடைய மாமிசமில்லாத தலையொன்றிருக்கக்கண்டு, அதைக்கையிலேந்தி, "சுவாமி, தேவரீர் எம்பெருமானுடைய திருக்கோயிலை வலம்வந்து வந்து; உடல்

முழுமையும் தேய்ந்தும், இன்னமும் உம்முடைய தலையானது எம்பெருமான் திருமாடவீதியிலிருக்கும் புண்ணியத்தைப்பெற்றீர். அடியேனுடைய தலையும் இவ்வாறே கிடக்க அடியேனை யாசீர்வதித்தருளும்" என்று கூறி அத்தலையைப் பலமுறைவணங்கிப் பிரார்த்தித்தனர்.

அவர் மற்றொருநாள் மருதப்பர் திருக்கோயிலை வலம்வரத்தொடங்கியபோது, கோயில்முற்றத்தில் நாய்மலம் இருக்கக்கண்டு மனம்வருந்தி, "நான் முதற்பிரதக்ஷிணஞ் செய்துவருவதற்குள் இம்மலத்தை யெடுப்பவர்க்கு என் நாட்டில் காற்கூறு தருவேன்" என்று சங்கற்பஞ்செய்துகொண்டு முதல்வலம் வந்தனர். அதை ஒருவரும் எடுக்காமையால் "நான் இரண்டாவது பிரதக்ஷிணம் வருவதற்குள் இதையெடுப்பவர்க்கு என் தேசத்தில் அரைக்கூறு அளிப்பேன்" என்று சங்கற்பித்துக்கொண்டு இரண்டாவது பிரதக்ஷிணஞ்செய்தனர். அப்போதும் அது எடாமலிருக்கக்கண்டு, "நான் மூன்றாவது பிரதக்ஷிணம் வருமுன் இதை எடுப்பவர்க்குஎன் இராச்சியத்தில் முக்காற்கூறு தருவேன்" என்று சங்கற்பித்து மூன்றாவது பிரதக்ஷிணஞ்செய்தனர். அப்போதும் அம்மலத்தையாரும் எடுக்காமையால், "என்தேயத்தை நானேயுடையேன், இத்தொண்டு நானே செய்யப்பெற்றேன்" என்றுசொல்லி அதைத்தாமே தமது கையாலெடுத்து அகற்றினர்.

மற்றொருநாள் அவர் ஆலயத்திற்குச் செல்லும்வழியில் விழுந்துகிடந்த வேப்பங்கனியைக் கண்டபோது, அது அவருக்குச் சிவலிங்கத்தின் திருவுருவமாகத் தோன்றுதலும, அதை இருகரங்களாலும் எடுத்துக்கண்களிலும் மார்பிலும் சிரசிலும்வைத்து ஆனந்தக்கூத்தாடி திருவிடைமருதூரிலுள்ள வேப்பமரங்கள் வெயிலினால் வருந்தாதவண்ணம் பந்தரிடுவித்தனர்.

வரகுணதேவருக்குத் தோற்றோடிப்போன விக்கிரமச் சோழன், அவருடைய குணாதிசயங்களைக்கேட்டு, மிகவும் ஆச்சரியமும் பயமுமடைந்து, தேவமாதரும் மையல் கொள்ளும் பேரழகுவாய்ந்த தனது குமாரத்தியை அவருக்குத் திருமணஞ்செய்வித்தனன். வரகுணதேவர் விவாகமான அன்றிரவில் பள்ளியறையிற்சென்று சிவசிந்தனையோடு சயனித்திருந்தனர். மணமகளை தோழியர் வெண்மையான உயர்ந்த பட்டாடைகளாலும், நவரத்தினாபரணங்களாலும் அலங்கரித்து, களபகஸ்தூரி முதலிய வாசங்களைப்பூசி, பள்ளியறையுட் கொண்டுபோய் விடுத்தனர். வரகுணதேவர் அவருடைய சௌந்தரியத்தைக்கண்டு அதிசயங்கொண்டு, "இவள் எம்பெருமானுக்கே உரியவள்" என்று சிந்தித்து, வணங்கி, அவள் கரத்தைப்பற்றிக் காவலரறியாவண்ணம் வெளியிற்போய், மருத

ப்பர் சந்நிதியையடைந்து, திருக்கதவைத்தொட்டு, "மருதநாயக"என்றழைத்தனர். மருதவாணரும் "வரகுண வருக" என்றழைத்துக் கதவைத்திறந்தனர். வரகுணதேவர் மருதப்பர் திருமுன்னர் நின்று, "எம்பெருமானே, இவள் தேவரீருக்கே உரியவள். ஆகையால், இவளைத் தேவரீர் அங்கீகரித்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து அவளைச் சந்நிதியில் விட்டு, வெளியேவந்துவிட்டனர். உடனே திருக்கதவு முன்போலவே திருக்காப்புக்கொண்டது. இது யாருக்குந்தெரியாதபடி வரகுணதேவர் தமது அரண்மனையை யடைந்து பள்ளிகொண்டனர். சூரியோதயமாதலும், கோயில் அர்ச்சகர் திருப்பள்ளியெழுச்சிக்காக உட்சென்றபோது, சிவலிங்கப்பெருமானுக்கு ஓர் புறத்தினின்றும் ஒரு பெண்ணின் கை தொங்கக்கண்டு, பயந்து, வரகுணதேவருக்குத் தெரிவித்தனர். வரகுணதேவர் அதைக்கேட்டு, ஆலயத்திற்கோடி, இலிங்கத்தினின்றும் தொங்குகின்ற கரத்தைக்கண்டு, மிகவும் மனம் வருந்தி, தமது வலக்காத்தைப்பார்த்து, "ஏ கரமே, எனதாண்டவருக்குப் பிரீதியாகிய பொருளை நீ முன்பின் யோசியாதபடி ஏன் தொட்டனை, நீதொட்டதனாலன்றோ, அவர் அதைமாத்திரம் வெளியில் வைத்திருக்கின்றார்" என்று கோபித்து, இடக்காத்தில் வாளைவாங்கித் தன்வலக்காத்தை வெட்டும்படி ஓச்சினர். அப்போது சிவபெருமான் அசரீரியாய், யாவரும் கேட்கும்படி, "அன்பனே, உன் அன்பை உலகினரறிந்து உய்யும் வண்ணம் இக்காத்தை மாத்திரம் வெளியிற்காட்டினோம், நீ கவலையுறாதே" என்று கூறியருளி யாவருங்காண அக்காத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டனர். அப்போது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். அந்தரதுந்துபிமுழங்கின. சிவனடியார்கள் கடலொலியும் பின்னிடும்படி அரவொலி செய்தார்கள். வரகுணதேவர் மெய்ம்மறந்து ஆனந்தக்கூத்தாடினர். சிவபெருமான் வரகுணதேவர் கேட்கும்படி "அரசனே சோழனுக்கு இவ்வளநாட்டைக் கொடுத்து, நீ நமது மதுரைக்குச்செல்வாய்" என்று கட்டளையிட்டனர். அவ்வாறே வரகுணதேவர் விக்கிரமச்சோழனுக்குக் காவிரிநாட்டை மீட்டுங்கொடுத்துத் திருவிடைமருதூரை விட்டுப்பிரிய மனம்வராமல் மருதவாணரைப் பலமுறை வணங்கி அரிதில் நீங்கி, பல சிவதலங்களைத் தரிசித்துக்கொண்டு மதுரைமாநகரமடைந்து, சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கணம்மையாரையும் இடையறாமல் வணங்கிக்கொண்டு, அரசுபுரிந்துகொண்டிருந்தனர். அப்போது அவருக்குச் சிவலோகத்தில் சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைத் தரிசிக்கவேண்டும் என்னும் விருப்பம் உண்டாயிற்று. அவ்விருப்பத்தை அவர் சொக்கலிங்கப்பெருமானிடம் சொல்லிக் குறையிரத்தலும், பெருமானர் அவருக்கு அவ்விடத்திலேயே

சிவலோகக்காட்சிதந்தருளினர். வேதாகமங்கள் வடிவுகொண்டு இருபுடைநின்று வாழ்த்தவும், தும்புருநாரதர்கள் கைகளில் யாழேந்திப் பாடவும், அரம்பைமாதர் நடிக்கவும், தேவர்கள் இடங்கிடைக்காமல் ஒதுங்கியிருக்கவும், விநாயகக்கடவுளும், முருகக்கடவுளும் வீரபத்திரக் கடவுளும் ஏவின பணிசெய்து நிற்கவும், பிரமவிஷ்ணுக்கள் வாய்பொத்தி, துசொடுக்கி, ஒருபுறம் ஒதுங்கிநின்று தங்கள் குறைகளைச் சாற்றவும், நந்திதேவரின் ஆக்கினையின்படி சிவகணத்தலைவர்கள் வாயில்களோறுங் காவற்செய்யவும், சித்தர், கின்னரர், கிம்புருடர், விச்சாதரர் முதலிய தேவகணங்கள் பரவாநிற்கவும், முனிவர்கள் ஆனந்தக்கூத்தாடி வேதகீதம்பாடி வணங்கவும், அவரவர்கட்குவேண்டிய வரங்களை வழங்கி, உமாதேவியார் இடப்பாகத்திலமர்ந்து புன்முறுவல்செய்ய, ஆயிரஞ்சூரியர்களென ஒளிவீசும் சிங்காதனத்தில் எழுந்தருளியிருந்த வண்ணமாகச் சிவபரஞ்சுடரை வரகுணதேவர் தரிசித்து, உரைதடுமாறவும், உரோமஞ்சிலிர்ப்பவும், பரவசத்தராய் கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சிந்த, இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி வணங்கி, பலவாறுகத் தோத்திரஞ் செய்து நிற்ப, சிவலோகக்காட்சிமறைந்து, முன்பிருந்தவாறு, பிராட்டியுந்தாமுமாகச் சொக்கலிங்கப்பெருமான் வீற்றிருந்தனர். வரகுணதேவர் தமக்குச் சிவலோகக் காட்சிதந்தருளிய இறைவனை மீட்டும் பலவாறுகப்பாடி வணங்கி, மீண்டு தமதரண்மனையையடைந்தனர். பின்னர், பலதிருப்பணிகள் செய்துகொண்டிருந்து சிவபெருமானுடைய திருவடி நீழலையடைந்தனர்.

## தேவாலயதரிசனம்.

யாவரும் நாடோறும் திருக்கோயிலிற் சென்று, சிரத்தையோடு விதிப்படி கடவுளைத் தரிசனஞ்செய்தல் வேண்டும். தேவாலயதரிசனம் நாடோறுஞ் செய்தற்கு இயலாதாயின், புண்ணியகாலங்களிலேனும் தவறுமற் செய்தல்வேண்டும்.

ஆலயதரிசனஞ் செய்ய விரும்புவோர் ஆலயத்துக்குச் சமீபத்தில் உள்ள புண்ணியதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்து, அநுஷ்டானம் முடித்துக்கொண்டு, ஆலயத்துக்குப் போதல் வேண்டும்.

ஆலயத்துக்குப் போம்பொழுது, ஒரு பாத்திரத்திலே தேங்காய் பழம் பாக்கு வெற்றிலை முதலியவை வைத்து, அரைக்குக் கீழ்ப்படாது மேலே உயர்த்தப்பட்ட கையில் ஏந்திக்கொண்டு, போதல்வேண்டும். இவைகளுக்குப் பொருளில்லாதவர் பத்திரபுஷ்பங்களேனும் கொண்டு, போய்க் கொடுத்து வணங்கல்வேண்டும். அதுவுங் கூடாதவர் சந்நிதியிலுள்ள செத்தை முதலியவற்றைப் போக்கியேனும் வணங்கல் வேண்டும்.

திருக்கோயிலுக்குச் சமீபித்தவுடனே, திருக்கோபுரத்தை வணங்கி, இரண்டுகைகளையுஞ் சிரசிலே குவித்துக்கொண்டு உள்ளே பிரவேசித்து, பலிபீடத்துக்கு இப்பால் நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்கநமஸ்காரமும், பண்ணல்வேண்டும். திரயாங்கநமஸ்காரம் இவ்விருவருக்கும்பொது.

அட்டாங்க நமஸ்காரமாவது தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல். பஞ்சாங்க நமஸ்காரமாவது தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்துறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல். திரயாங்க நமஸ்காரமாவது சிரசிலே இரண்டுகைகளையும் குவித்தல்.

நமஸ்காரம், மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பன்னிரண்டுதரமாயினும், பண்ணல்வேண்டும். ஒருதரம் இருதரம் பண்ணுதல் குற்றம்.

நமஸ்காரம் பண்ணுமிடத்து, மேற்கேயாயினும் தெற்கேயாயினும் கால் நீட்டல் வேண்டும். கிழக்கேயாயினும் வடக்கேயாயினும் கால் நீட்டலாகாது.

கிழக்கேயாயினும் வடக்கேயாயினும் சிரசைவைத்து, மார்பு பூமியிலே படும்படி வலக்கையை முன்னும் இடக்கையைப் பின்னும் நேரே நீட்டிப் பின் அம்முறையேமடக்கி வலப்புயமும் இடப்புயமும் மண்ணிலேபொருந்தும்படி கைகளை அரையை நோக்கநீட்டி, வலக்காதை முன்னும் இடக்காதைப் பின்னும் மண்ணிலே பொருந்தச்செய்து, நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

நமஸ்கரித்து எழுந்து கும்பிட்டு, கடவுளை மறவாத சிந்தையோடு இரண்டுகைகளையும் இருதயத்திலே குவித்துக்கொண்டு, கால்களை மெல்லவைத்துப் பிரதக்ஷிணம் பண்ணல்வேண்டும்.

சிவபெருமானை மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பதினைந்துதரமாயினும், இருபத்தொருதரமாயினும் பிரதக்ஷிணம் பண்ணல்வேண்டும்.

விநாயகரை ஒருதரமும், சூரியனை இரண்டுதரமும், பார்வதிதேவியாரையும் விட்டுணுவையும் நந்நான்குதரமும் பிரதக்ஷிணம் பண்ணல்வேண்டும்.

பிரதக்ஷிணம்பண்ணும் ஆவரணத்திலே தூபிநிழலேனும் துசத்தம்பநிழலேனும் இருந்தால், அந்த நிழலில் மூன்றுகூறு நீக்கி எஞ்சிய இரண்டுகூற்றினுள்ளே செல்லல்வேண்டும். கடவுள் உற்சவங்கொண்டருளும்பொழுது அந்தநிழல் இருப்பினும், நீக்காது செல்லலாம்.

அபிஷேககாலத்தில் உட்பிராகாரத்திலே பிரதக்ஷிணம் நமஸ்கார முதலானவை பண்ணலாகாது.

பிரதக்ஷிணம்பண்ணிச் சந்நிதானத்திலே நமஸ்காரஞ்செய்து, எழுந்து கும்பிட்டுக்கொண்டு உள்ளேபோய், கடவுளைத் தரிசித்து, மனசிலே தியானித்து, சிரசிலும் இருதயத்திலும் அஞ்சலி செய்து, மனங்கசிந்துருக, உரோமஞ்சிலிர்ப்ப, ஆனந்தவருவி சொரிய இராகத்துடனே தோத்திரங்களைச் சொல்லல்வேண்டும்.

அருச்சகரைக்கொண்டு கடவுளுக்கு அருச்சனைசெய்வித்து, தேங்காய் பழமுதலியவற்றை நிவேதிப்பித்து, கர்ப்பூராராத்திரிகம் பணிமாறப்பண்ணுவித்து, அருச்சகருக்கு இயன்ற தக்ஷிணை கொடுத்தல் வேண்டும்.

கடவுளைத் தரிசனஞ்செய்துகொண்டு, அவருக்குப் புறங்காட்டாது பலிபீடத்துக்கு இப்பால் வந்து, மூன்றுதரம் நமஸ்கரித்து, எழுந்து, வடக்கு நோக்கி இருந்து, கடவுளைத் தியானித்துக்கொண்டு, அவருடைய மந்திரத்தில் இயன்ற உருச்செபித்து, எழுந்து வீட்டுக்குப் போதல் வேண்டும்.

திருக்கோயிலிலே செய்யலாகாத குற்றங்களாவன—ஆசாரமில்லாது போதல், கால் கழுவாது போதல், சனனசௌச மரணசௌசத்தோடு போதல், எச்சிலுமிழ்தல், மலசலங்கழித்தல், மூக்குநீர்சிந்துதல், அபான வாயு விடுதல், பாக்குவெற்றிலையுண்டல், தம்பலமுமிழ்தல், போசனபானம்பண்ணுதல், நித்திரை செய்தல், மயிர்கோதிமுடித்தல், சூதாடல், சிரசிலே வேட்டி கட்டிக்கொள்ளுதல், தோளிலே உத்தரீயமிட்டுக்கொள்ளுதல், போர்த்துக்கொள்ளுதல், சட்டையிட்டுக்கொள்ளுதல், வாகனமேறிச்செல்லுதல், குடைபிடித்துக்கொள்ளுதல், பாதரக்ஷையிட்டுக்கொள்ளுதல், உயர்ந்த தானத்திருத்தல், ஆசனத்திருத்தல், தூபிதுசத்தம்பம் பலிபீடம் விக்கிரகம் என்னும் இவைகளின் சாயையை மிதித்தல், விக்கிரகத்தையும் நிர்மாலியத்தையும் தீண்டுதல், பெண்களைத் தீண்டல், பெண்களை இச்சித்துப் பார்த்தல், ஒருதரம் இருதரம் நமஸ்கரித்தல், ஒருதரம் இருதரம் வலம் வருதல், ஓடி வலம் வருதல், கடவுளுக்கும் பலிபீடத்துக்கும் குறுக்கேபோதல், அகாலத்திலே தரிசித்தல், வீண்வார்த்தைபேசுதல், சிரித்தல், வீண்கீதம்பாடல், வீண்கீதம்கேட்டல், திருவிளக்கவியக்கண்டும் தூண்டாதொழிதல், திருவிளக்கில்லாதபோது வணங்குதல், உற்சவங்கொண்டருளும்பொழுது அங்கேயன்றி உள்ளேபோய் வணங்குதல் முதலானவைகளாம். இக்குற்றங்களுள் ஒன்றை அறியாது செய்தவர் கடவுளுடைய மந்திரத்தைச் செபிக்கின், அக்குற்றம் நீங்கும். இக்குற்றங்களை அறிந்து செய்தவர் நரகத்தில் விழுந்து வருந்துவர்; அவருக்குப் பிராயச்சித்தமில்லை.

திருக்கோயிலினுள்ளே போதற்கு யோக்கியர்களல்லாத சாதியார்கள் திருக்கோயிற் புறத்திலே பிரதக்ஷிணம்பண்ணித் திருக்கோபுரத்தை நமஸ்கரித்துக் கடவுளைத் தோத்திரஞ் செய்யக்கடவர்கள்.

ஸ்ரீலஸ்ரீ யா. ந. ஆறுமுகநாவலரவர்கள்.

## நாத்திகன்கர்வபங்கம்.

சிலநாட்களுக்குமுன் சென்னைமாநகரில் வசித்துக்கொண்டிருந்த நாத்திகன் (கடவுள் இல்லையென்பவன்) ஒருவன், கடவுள்பத்திசெய்வோர்களைக் காணும்போதெல்லாம் வலிய வாதுக்கிழுத்து, கடவுளைக் காட்டச்சொல்லிப் பரிகாசஞ்செய்துகொண்டிருந்தான். அவன்செய்து கொண்டிருந்த குதர்க்கத்திற்கும் தெய்வதூஷணைக்கும் அஞ்சி, கல்விமான்கள் பலர் அவனையணுகாமல், "வம்பு செறி தீங்கினர்தங் கண்ணிற றெரியாத தூரத்தே நீங்குவது நல்லோர்நெறி" என்பதற்கிணங்க, மறைந்து செல்வாராயினர். அதனால் அவன் அவர்கள் தன்னுடன் வாது செய்யச் சத்தியற்று அவ்வாறு செல்வதாகத் தன்னுள் எண்ணிக்கொண்டு, மிகவும் இறுமாப்படைந்திருந்தான். ஒருநாள், நூலாராய்ச்சியொருசிறிதுமில்லாத ஆத்திகன் (கடவுள் உண்டு என்போன்) ஒருவன் கோயிலுக்குப் போவதைக் கண்டு, அவனை வழிமறித்து, கடவுளைக் காட்டச்சொல்லி வாதாடினான். அவ்வாத்திகன் அவனைப்பார்த்து "ஐயா, நீர் தயைசெய்து எனக்கு உம்முடைய வீட்டை முன்னே காட்டும். நான் பிறகு உமக்குக் கடவுளைக்காட்டுகின்றேன்" என்றான். நாத்திகன் "அப்படியா; மெத்தச்சந்தோஷம்; வாரும்," என்றுசொல்லி அவனைத் தன் வீட்டுக்கு அழைத்துச்சென்று "இதுதான்என்வீடு" என்று காட்டினான். ஆத்திகன் அவ்வீட்டிலிருந்தவர்களைச்சுட்டி, "இவர்கள்யாவர்?" என்றான். நாத்திகன் அவர்களை ஒவ்வொருவராகச் சுட்டிக்காட்டி, இவர் என்பிதா, இவள் என்மனைவி, இவர்கள் என் குழந்தைகள்" என்றான். ஆத்திகன் "ஐயா, இவர் உம்முடைய பிதாவென்றும், இவர்கள் உம்முடைய குழந்தைகள் என்றும் எப்படி யறிந்துகொண்டீர்? உம்முடைய தாய் இவருக்கே உம்மைப்பெற்றாள் என்றும், உம்முடைய மனைவி உமக்கே இக்குழந்தைகளை ஈன்றாள் எனவும் நீர் எப்படி அறிந்துகொண்டீர். இவ்விரகசியத்தை நீர் அறிந்துகொண்ட விதத்தை எனக்குத் தயைசெய்து தெரிவியும்" என்றான். நாத்திகன் யாதொருபதிலும் சொல்லமாட்டாமல், வெட்கமடைந்து மௌனமாய் நின்றான். அதை ஆத்திகன் அறிந்து, "ஐயா, இவ்வொருசனனத்தில் பெற்ற பிதாவை யறியமாட்டாத நீர், பலசனனங்களில் பலகோடி உயிர்களுக்குத் தாயுந் தந்தையுமாயிருக்குங் கடவுளை எவ்வாறு அறிவீர்?" என்றான். அதுமுதல் நாத்திகன் குதர்க்கமும் தெய்வதூஷணமும் செய்வதை யொழித்துவிட்டான்.

# பித்தவாயு லேக்கியம்.

## இதுவே கைகண்ட தாதுபுஷ்டிலேக்கியம்.

இதைக் காலைமாலை சிறு கெச்சைக்காயளவு 5-நாள் சாப்பிட, பித்தவாயுவினால் உண்டாகும் நெஞ்செரிவு, மார்புநோய், புளியேப்பம், கொட்டாவி, அஜீரணம், விக்கல், அசதி, பசியின்மை முதலிய பலவகைப்பட்ட நோய்களைநீக்கி, பசிதீபனத்தை யுண்டாக்கிப் பூரணசுகத்தைக்கொடுக்கிறது. இதனால் சாதாரண சுரம், முதலியவைகளும் குணமாகும். இதை இரண்டு நாள் சாப்பிட்டமாத்திரத்திலேயே இதின் குணம் அதிசயமாகத்தோன்றும். இது இஞ்சி, புதியனா, புளியாரை, எலுமிச்சை, கரும்பு இவற்றின் சாற்றாலும், நெய், தேன், சர்க்கரை, சுக்கு, மிளகு, திப்பிலி, தாளிச்சபத்திரி, ஏலம், இலவங்கம் முதலிய 20 கடைச்சரக்குகளாலும், நெடுநாளைய அனுபவ முறைப்படி செய்யப் படுகிறது. இதையாரும் நிர்ப்பயமாய்ச் சாப்பிடலாம். இது கைகண்ட அமிழ்தம். பத்தியம் இல்லை. அவசியமானால் போஜனத்திற்குப் பிறகும் சாப்பிடலாம். இதைச் சாப்பிடுந்தினங்களில் நல்லெண்ணெய், கடுகு, அகத்திக்கீரை, பாகற்காய், பூசினிக்காய் இவைகளைச் சாப்பிடாதிருந்தால் பின்னும் உத்தமம்.

20 வேளை சாப்பிடக்கூடிய லேக்கியம் அடங்கிய டப்பி ஒன்றுக்கு விலை ரூபா 1. வி. பி. மூலமாய் பெற்றுக்கொண்டால் ரூபா 1—3—0 ஆகும். வேண்டுவோர் சென்னை ஏழுகிணற்றையடுத்த பாளையப்பன்வீதி 43-வது வீட்டில் சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின காரியதரிசியும், "சைவம்" பத்திரிகாசிரியருமான இ. ஆதிமூலமுதலியாரிடமேனும் மேற்படி வீட்டில் இ. கண்ணப்பமுதலியாரிடமேனும் பெற்றுக்கொள்ளலாம்.

# சிவகீதை.

இந்நூல் பத்திமோக்ஷ ஞானங்களை நல்லாசிரியனைப்போல் போதிப்பது. ஒவ்வொருவரும் வாசித்தற்குரியது.

இதின் விலை ரூபா 2.

இந்நூல் வேண்டுவோர் சென்னை சௌகார்பேட்டை, இருளப்பன் வீதி 36-வது நெம்பர் வீட்டில் கா. ஜம்புலிங்கமுதலியாரிடம் பெற்றுக் கொள்க.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

## கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
## விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
## குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளி னுடைய உபத்திரவம் பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின இடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதுறக்கா முதலிய எவ்வித, விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனெனில் ஒருவனுக்கு ஒரு நாள் இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அவனெவ்வளவோ அவஸ்தைபபட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0–8–0. டசன் 1-க்கு ரூ. 5–0–0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி,
நெ. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

## திருவிடைமருதூர்

மஹாகும்பாபிஷேக மஹோத்ஸவம்.

நளஸு ஆனிமீ 27உ—1916ஸு ஜூலைமீ 10உ.

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் மாதாந்தப் பத்திரிகை.

மலர் ௨.] நளஹூ ஆவணிமீ –1916ஹூ ஆகஸ்டுமீ [இதழ் ௪.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---


பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

(*Retired Accountant, Military Accts. Department.*)



சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணா 12.

(தபாற்செலவுட்பட.)

## சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் போஷகர்கள்.

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கண்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர், கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்.
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, ஏஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷிகர், மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, சி. வெங்குபிள்ளையவர்கள்
ரிடைர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. முத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி, சென்னை.

,, ஆர். காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர், சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடைர்ட் சப் இன்ஜினீர், தங்கசாலைவீதி.

,, ராய் பஹதூர், சீவரம், சுப்பராயமுதலியாரவர்கள்.

---

## ஆயுள்சந்தாதாரர்கள்.

சென்ற ஜூலைமீ செங்கல்பட்டையடுத்த திருவடிசூலம் என வழங்கும் திருவிடைச் சுரத்தில் திருத்தொண்டு செய்துகொண்டிருக்கு கவர்ன்மெண்டு பென்ஷனர் ஸ்ரீமான் வே—இரத்தினவேல்முதலியாரவர்கள் பத்து ரூபா ஆயுள்சந்தா அனுப்பினார்கள்.

இரங்கூனில் வசிக்கும் ஸ்ரீமான் மெ—சு—மெ—மெ—இராமநாதன் செட்டியாரவர்கள் 25 சைவாபிமான சிலர்கள் அன்புகூர்ந்து முன்வந்து, ஒவ்வொருவரும் பத்து ஆயுள்சந்தாதாரர்கள் வீதம் சேர்த்தால், நம்முடைய உத்தேசம் எளிதில் நிறைவேறுமென்றும், அவ்வாறு உபகரிப்பவர்களுள் தாமும் ஒருவராயிருக்கக்கூடுமென்றும் அன்புடன் எழுதி தெரிவித்தார்கள். இது மிகவும் நல்லபிரேரேபணை. ஒவ்வொருவரும் பத்துப்பேருக்குப்பதிலாக ஐந்துபேர்களைச் சேர்த்தாலும் போதுமானது. மீதிதொகையைச் சபையின் அத்தியட்சர்கள் சேகரித்துக்கொள்ளக்கூடும். இதை யாவரும் அன்புகூர்ந்து கவனிக்கப் பிரார்த்திக்கின்றோம்.

தென் ஆப்பிரிக்கா, புலேவேயோவிலிருக்கும் ஸ்ரீமான் பா—பால சுப்பிரமணியப்பிள்ளையவர்கள் இப்பத்திரிகையின் பொருட்டும் பாடசாலையின்பொருட்டும் மாதமாதம் 3 ரூபா அனுப்பிக்கொண்டுவருவதாக அன்புகூர்ந்துத் தெரிவித்தார்கள்.

பத்திரிகாசிரியர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நளஹூ ஆவணிமீ —1916ஹூ ஆகஸ்டுமீ || [இதழ் 8

ஊனடைந்த உடம்பின் பிறவியே
தானடைந்த வுறுதியைச் சாருமால்
தேனடைந்த மலர்ப்பொழிற் றில்லையுள்
மானடஞ்செய் வரதர்பொற் றடொழ.

---

## சிவஞானபோதம்.

முதற்சூத்திரம் (107–வது பக்கத்தொடர்ச்சி.)

சிவஞானபோதச் சூத்திரம் ஒவ்வொன்றும் அதிற்கூறப்பட்ட விஷயங்களுக்கேற்ப அதிகரணங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

"தன்னாற்கூறப்படும்பொருள், அதன்கண் ஐயப்பாடு, அதற்குப் பிறர்கூறும்பக்கம், அதனைமறுத்துரைக்கும் சித்தாந்தத்துணிபு, இயைபு, ஆகிய இவ்வைந்தின் நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும்." இவற்றுள் "தன்னாற்கூறப்படும் பொருள்" என்பது அதிகரணத்தில் சொல்லப்பட்ட விஷயம். "அதன்கண் ஐயப்பாடு" என்பது அவ்விஷயத்தில் தோன்றும் சந்தேகம். "அதற்குப் பிறர்கூறும்பக்கம்" என்பது அச்சந்தேகத்தால் பிறசமயிகள் கூறும் ஆட்சேபனைகள். "அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத்துணிபு" என்பது பிறசமயிகள் செய்யும் ஆட்சேபனைகளிலுள்ள குற்றங்களை யெடுத்துக்காட்டி அவைகளை மறுத்து சித்தாந்தப்படுத்திய துணிபு. "இயைபு" என்பது சித்தாந்தப்படுத்திக்காட்டிய துணிபுகளை பிரமாணங்களாலும் திட்டாந்தங்களாலும் வலியுறுத்துதல்.

அதிகரணம் ஒவ்வொன்றுக்கும், சூர்ணிகை என்னுங் கருத்துரையையும், வார்த்திகம் என்னும் பொழிப்புரையையும், உதாரண வெண்பாக்களையும் கொண்டு பொருள் உரைக்கப்படும்.

முதற்சூத்திரம் மூன்று அதிகரணங்களை யுடையது. அவை வருமாறு.—

க-வது.—அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின.

உ-வது.—தோற்றிய திதியே யொடுங்கி மலத் துளதாம்.

ஈ-வது.—அந்த மாதி யென்மனார் புலவர்.

இவை மூன்றும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் வருதலால் ஒருசூத்திரத்தாற் கூறப்பட்டன.

---

### முதற்சூத்திரத்தின் சூர்ணிகை.

க-வது.—சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.

உ-வது.—அது அரனுலேயுடையது.

ஈ-வது.—மற்றிருவரு முத்தொழிற்படுவர்.

---

### முதற்சூத்திரத்தின் வார்த்திகம்.

க-வது—ஈண்டுத் தோற்றமும் ஈறும் உள்ள தன்பாலே கிடத்தலின் உளதாய் ஒருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி, திதி, நாசமுடைத்தென்றது.

உ-வது.—இனி இல்லதற்குத் தோற்றமின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின், ஒடுங்கின சங்காரத்தின் வழியல்லது உற்பத்தியில்லை யென்றது.

ஈ-வது.—இனிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான் சங்காரமே முதலென்றது.

---

இம்முதற் சூத்திரத்திற்குரிய உதாரண வெண்பாக்கள் ஐந்து.

இனி, முதற் சூத்திரத்தின் முதலதிகரணத்தின் பொருளை, அதற்குரிய சூர்ணிகை வார்த்திகங்களோடும் உதாரண வெண்பாவோடும் சேர்த்து விளக்குவாம்.

### முதலதிகரணம்.

அவனவளது வெனுமவை மூவினைமையின்.

(இ-ள்.) அவன் அவள் அது என்று சுட்டி யுணரப்படும் பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் என்னும் முத்தொழிலை உடையதாயிருத்தலினால்.

இவ் வதிகாரணத்தில் ''தன்னாற் கூறப்படும் பொருள்'' முதலிய ஐந்தும் வருமாறு:—

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்.—பிரவஞ்சம் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத்தொழிலையுடையது.

உ-வது—ஐயப்பாடு—பிரபஞ்சம் முத்தொழிலையுடையதோ? அன்றோ?

ங-வது—பிறர்கூறும் பக்கம்—பிரத்தியட்சப் பிரமாணத்தால் அறியப் படாதனவெல்லாம் அங்கீகரிக்கப்படுவனவன்று. ஆதலால், இவ் வுலகம் ஒருகாலத்தில் தோன்றியதென்பதும், இனியொருகாலத் தில் அழியுமென்பதும் ஒப்புக்கொள்ளப்படுவனவன்று. பிரபஞ்சம் தோற்றமும் ஈறுமின்றி நித்தமாயிருப்பது என்பதே நிச்சயம். (இவ்வாறுகூறுவோர் காட்சிப்பிரமாணம் ஒன்றையே ஒப்புக்கொள் ளும் உலோகாயதரும் மீமாஞ்சகரும்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.—'தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின், (அதாவது உற்பத்தியும் நாசமும் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக்கிடத்தலின்) ஒருவன் ஒரு த்தியென்று சுட்டப்பட்ட பிரவஞ்சம் உற்பத்தி திதி நாசமுடை த்து.' அதாவது, காட்சிப் பிரமாண மொன்றையே ஒப்புக்கொள் ளும் உலோகாயதருக்கும், மீமாஞ்சகருக்கும், அப்பிரமாணத்தைக் கொண்டே பிரவஞ்சம் தோன்றிநின்றழிதலை விளக்கவேண்டி பிர வஞ்சம் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டுணரப்படும் பொரு ள்களின் தொகுதியாகையாலும், அவ்வாறு சுட்டி யறியப்படும் பொருள்கள் ஒவ்வொன்றும் தோன்றிநின்று அழிதலைப் பிரத்தி யட்சமாகக் காண்பதனாலும், அவற்றின் தொகுதியாகிய பிரவஞ் சமும் அவ்வாறே தோன்றிநின்று அழியும் தன்மைத்து என்று சித்தாந்தப்படுத்தியதாம்.

ரு-வது—இயைபு—உதாரண வெண்பா.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

(இ-ள்.) பேதாய்=காட்சியளவையாலும் அறியமாட்டாதமட வோனே—பூதாதி=பூதம் முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு—திதி=நீ அங்கீகரிக்கும் திதி—ஈறும் முதலும் துணை ஆக ஆகும்=நாச மும் உற்பத்தியுந் தனக்குத்துணைக்காரணமாகக்கொண்டே நிகழும்.

(அதாவது உற்பத்தியும் நாசமும் இன்றி வெறுந் திதிமாத்திரம் இராது. ஆனால் உலகத்திலுள்ள பொருள்கள் ஒன்று தோன்றவும் ஒன்று நிற்கவும் ஒன்று அழியவும் காண்கின்றோமேயன்றி எல்லாம் ஒருங்கேதோன்றி ஒருங்கேநின்று, ஒருங்கே அழியக்காண்கிலோம் எனில்.)—ஒன்று ஒன்றின்பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும்=ஒவ்வொரு கால விசேடத்திற் சாதிபற்றி ஒருங்கேதோன்றி, ஒருங்கேநின்று, ஒருங்கே அழிவதனைக்கண்டு வைத்தும், (அதாவது கால விசேஷத்தால், ஒவ்வோர் சாதிச்செந்துக்கள் செடிகள் முதலியன ஒருங்கேதோன்றி, ஒருங்கேநின்று, ஒருங்கேயழிதலாலும், பூகம்பம், எரிமலை, ஜலப்பிரவாகம் யுத்தம் முதலியவற்றால் பலபொருள்களும் ஒருங்கே யழிவது பிரத்தியட்சமாயிருத்தலாலும்)—என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ—என்றாயினும் அதற்குரிய காலம்வருமென்று உலகத்திற்கும் அவ்வாறுதல் உண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந்துசொல்லார்களோ, உன்னைப்போலும் மடமையில்லாதோர். (அதாவது, உலகத்திற்கும் அதற்குரிய காலம்வந்தால் அவ்வாறுதல் கூடுமென்று அக்காட்சிப் பிரமாணத்தைக்கொண்டே அறிவுடையோர் ஆராய்ந்து சொல்வர் என்பதாம்.)

(இன்னும்வரும்.)

# விநாயக சதுர்த்தி விரதம்.

மருப்பையொரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை யடிபோற்றத் துணிந்தா—னெருப்பை
யருந்த வெண்ணுகின்ற வெறும்பன்றே யவரை
வருந்த வெண்ணுகின்ற மலம்.

இவ்விரதம் வருடந்தோறும், ஆவணிமாதம், அமாவாசைகழிந்த வளர்பிறைச் சதுர்த்தி உச்சிப்போது வரையிலுள்ள தினத்தில் செய்யத்தக்கது.

இவ்விரதத்தை மலையரையன் திருமகளாயவதரித்த உமாதேவியார், முருகக்கடவுள், சோமகாந்தன், வேதவியாசர், விஷ்ணு, பிரமன், தக்கன், வல்லாளன், வீமன், உருக்குமாங்கதன், இந்திரன், கிருச்சமதன், திரிபுரன், இந்திராதி தேவர்கள், நளன், சந்திராங்கதன், மன்மதன், உருக்குமணி, ஆதிசேடன், மாபலி, பரசிராமன், இராவணன், அகத்தியர், காசிபர்முதலிய பலர் அநுட்டித்து விரும்பியவரங்களைப் பெற்றதாக நூல்கள் கூறுகின்றன.

இவ்விரதம், இப்பாதகண்டத்தில் மாத்திரமன்றி ஆரியர்போய் வசிக்கும் பர்மாமுதலிய பிறதேயங்களிலும் அநுட்டிக்கப்படுகின்றது. பாதகண்டத்துள்ளும் பம்பாய் இராஜதானியில், மற்றெல்லாப்பண்டிகைகளுள்ளும் பெரும்பண்டிகையாகக் கொண்டாடப்படுகின்றது. பலவழியிலும் சமயவொழுக்கங்கள் குன்றிக் கிடக்கும் நம் தமிழ்நாட்டில் பலர் இப்பண்டிகையைக் கொண்டாடினாலும், அநேகர், இது சிறுபிள்ளைகளால் அநுட்டிக்கப்படுவதொன்றென எண்ணிக்கொண்டு அலட்சியஞ் செய்கிறார்கள். அவ்வாறு விநாயகபூசைசெய்வது பெரும்பாவம். ஆதலால் விநாயக சதுர்த்தி விரதம் அநுட்டிக்கவேண்டிய விதத்தை இதில் வெளியிடலாயிற்று.

இவ் விரதமநுட்டிப்போர் மிக்க களிப்புடன் நீராடி நித்திய கருமமுடித்து, நியமமுடையாராய்ப் பரிசுத்தமான இடத்திற்சென்று, மிருத்திகை (மண்) எடுத்துவந்து அதில், வேர்கள், செல்முதலிய செந்துக்கள், கற்கள் முதலானவைகள் இல்லாத வண்ணம் சோதித்துப் பிசைந்து, பதப்படுத்திச் சிற்பசாத்திரத்திற் கூறியவாறு விநாயகமூர்த்தியின் திருவுருவம் அமைத்துப், பொன்னினாலும் இவ்வாறே ஓர் திருவுருவம் அமைத்து வைத்துக்கொண்டு, ஆதிசைவ வேதியர்களை வரவழைத்து வேதபாராயணம் செய்யச்செய்து, அவ்வாதிசைவர்கள் மத்தியில் சிவாகம முறைப்படி சிரசாதி பாதம்வரையில் நியாசம்=(தொடல்) செய்து ஆசமனம், பிராணாயாமம், பூதசுத்தி முதலானவைகளைநடாத்தி,

"ஏவங்குண விசேஷண, விசிஷ்டாயாம், சுபதிதௌ, அஸ்மாகம் சகுடும்பானாம், க்ஷேமஸ்தைர்ய, விஜய ஆயுராரோக்கிய, ஐஸ்வர்யாணாம், உத்தரோத்தராபி வ்ருத்யர்த்தம், தர்மார்த்தகாமமோக்ஷ சதுர்வித, பலபுருஷார்த்தஸித்யர்த்தம், கல்போக்த ப்ரகாரேணதியானவாஹனாதி, ஷோடசோபசார பூஜாங்கரிஷ்யே"

என்று சங்கற்பங்கூறிச், சந்தன மரத்தாலாகிய ஓர் வேதிகை (பலகை)யைவைத்து அதன்மீது தண்டுலம் அரிசி பரப்பி, அதன்மீது சொர்னவஸ்திரம் ஒன்றைவிரித்து, அதன்மீது இழைசுற்றி நீர்நிரப்பி இருக்கின்ற பொற்கும்பத்தை ஸ்தாபித்து, அதில் அத்தி, ஆல், அரசு, மா, நாவல் என்னும் பஞ்சதளிர்களையும், சுகந்தி, பொன், மரகதம், மாணிக்கம், முத்து, என்னும் பஞ்சாத்தினங்களையும் பெய்து, அக்கும்பத்திற்குச் சந்தனம், புட்பம், அக்ஷதை முதலானவைகளைச் சாத்தி,

"கலசஸ்ய முகேவிஷ்ணு, கண்டேருத்ரஸமாஸ்ரித, மூலேதத்ரஸ்திதோப்ரம்ஹா, மத்யேமாத்ரகணாஸ்மிர்தா, குக்ஷௌது சாகராஸர்வே ஸப்தத்வீபாவசுந்தர, ருக்வேதோத யசுர்வேத சாமவேத அதர்வண,

அங்கைஸ் சஸஹிதாசர்வே கலஸாம் புஸமாஸ்ரித, ஆயேந்து கணேச பூஜார்த்தம் துரிதக்ஷய காரக, கங்கேச யமுனேசைவ, கோதாவரி ஸரஸ்வதி, நர்மதேசிந்து காவேரி, ஜலேஸ்மின் ஸன்னிதிங்குரு" என்று கும்பபூஜை செய்து,

அக்கும்பத்திற்கு மேற்றிசையில் யந்திரமிட்டு, முன்செய்து வைத்திருக்கும் பிருதிவு மூர்த்தியை எழுந்தருளச்செய்து, மற்றொருவேதிகையில் சொர்னமூர்த்தியை எழுந்தருளச்செய்து, முன்பு சேகரித்து வைத்திருக்கும் பூஜாதிரவியங்களிலுள்ள குங்குமம், பச்சைகற்பூரம், புட்பம், அறுகு முதலிய பற்பல சுகந்தவர்க்கங்களைக் கலந்து, முன்பு சுத்தப்படுத்திவைத்த மணிவட்டகைகளில் நிரப்பி, மற்ற வட்டகைகளில் கங்கை முதலிய சுத்ததீர்த்தம், அரிசி, பால், தருப்பைநுனி, மலர், வெண்கடுகு, நெல், எள்முதலிய திரவியங்களை விதிப்படி அமைத்து, அருக்கியம், பாத்தியம், ஆசமனம் முதலியவைகளை மந்திர பூர்வகமாகச்செய்து காத்திற் புஷ்பமும் அக்ஷதையுங்கொண்டு,

"த்யாயேத் கஜானனம் தேவம், தப்தகாஞ்சனஸங்நிபம், சதுர்ப்புஜம் மஹாகாயம், ஸர்வாபரண பூஷிதம், தண்டாக்ஷமாலாபரசு, பூர்ணமோதகதாரிணம், பாசாங்குசதரம் தேவம், த்யாயேத்சித்திவிநாயகம், ஸ்ரீ சித்திவிநாயகாயநம தியானம் ஸமர்ப்பயாமி," என்று சிந்தித்து,

"விநாயக நமஸ்தேஸ்து, கௌரீமலஸமுத்பவ. இமாம் க்ருதாம் மயாம் பூஜாம், க்ருஹாணகணநாயக. ஸ்ரீ கணநாயகாயநம ஆவாஹனம் ஸமர்ப்பயாமி" என்று ஸ்தாபனஞ்செய்து,

"மௌக்திகை புஷ்யாரகஸ்ச, நாநாரத்நவிராஜிதம், திவ்யஸிம்ஹாசனம் சாரூப்ரீத்யர்த்தம் ப்ரதிக்ருய்ஹதாம், ஸ்ரீ விநாயகாயநம ஆஸனம் ஸமர்ப்பயாமி" என்று பீடமிட்டு,

"அர்க்யம் க்ருஹாணதேவேச, கணாதிபகஜானன, கந்ததூர்வாக்ஷதைர்யுக்தம், கங்காஜலமிதம் சுபம், ஸ்ரீ கஜானனாயநம அர்க்யம் ஸமர்ப்பயாமி" என்று அர்க்யம் கொடுத்து,

"கௌரீபுத்ரநமஸ்தேஸ்து, சங்கரப்ரியநந்தன, பக்த்யாபாத்யமயாதத்தம், க்ருஹாணசுரஸத்தம, ஸ்ரீகௌரீபுத்ராயநம பாத்யம் ஸமர்ப்பயாமி" என்று பாத்யம் கொடுத்து,

"அநாதநாதசர்வேச, கீர்வாண சுரபூஜித, நிர்மலம் கந்தஸம்யுக்தம், க்ருஹாணஸமனம்விபோ, ஸ்ரீ சர்வேசாயநம ஆசமனீயம் ஸமர்ப்பயாமி" என்று ஆசமனம் கொடுத்து,

"ததிக்ஷீரஸமாயுக்தம், மத்வாஜ்யேனஸமன்விதம், மதுபர்க்கம் க்ருஹாணேதம், கஜவக்த்ரநமோஸ்துதே, ஸ்ரீ கஜவக்த்ராயநம, மதுபர்க்

கநைவேத்யம் ஸமர்ப்பயாமி" என்று தேன், பால், பழம் முதலியவைக ளைச் சாமானியமாக நிவேதித்து,

"ஸ்நானம்பஞ்சாம்ருதேர் திவ்ய, குருஷ்வசுரஸத்தம, பக்த்யா தப் யம் மயா தத்தம், விக்னராஜ நமோஸ்துதே, ஸ்ரீ விக்னராஜாயநம, பஞ்சா மிர்த ஸ்நானம் ஸமர்ப்பயாமி" * என்று பஞ்சாமிர்த வபிடேகஞ் செய்து,

"கங்காதிஸர்வதீர்த்தேஸ்து, ஆனீத்யைர் நிர்மலைஸ்சுபை, வாவி தைருதகைர்தேவ, ஸ்னபயாமிகஜானன, ஸ்ரீ கஜானனயநம, சுத்தோ தகஸ்நானம் சமர்ப்பயாமி" என்று கங்கைமுதலிய சுத்த சலத்தால் அபி டேகஞ்செய்து,

"ரக்தவஸ்த்ரம் த்வயம்தேவ, கௌரீபவ பவப்ரபோ, க்ருஹாணே தம் மயா தத்தம், விக்னராஜநமோஸ்துதே, ஸ்ரீ விக்னராஜாயநம வஸ்திர யுக்மம் ஸமர்ப்பயாமி" என்று நல்ல இரண்டு பீதாம்பரங்களையுடுத்தி,

"உபவீதம் ப்ரம்மசூத்ரம், ப்ரம்ஹணாநிர்மிதம் புரா, நாகயக்ஞோ பவீதேதம், க்ருஹாண கணநாயக - ஸ்ரீ கணநாயகாயநம யக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி" என்று பூணூல் தரித்து,

"சந்தன கருகற்பூர, ம்ருகநாபி ஸமன்விதம், கந்தம்தர்ஸ்யாமி விக்னேச, ஸர்வாபீஷ்டப்ரதாயக-ஸ்ரீ விக்னேசாயநம கந்தாந்தாரையாமி" என்று திருமேனிமுழுவதும் சந்தனத்தை அப்பி,

"அக்ஷதான் தவளாம் சுப்ரான், ஹரித்ராமிஸ்ரிதானபி, மயாஸ மர்ப்பிதான்தேவ, க்ருஹாணத் விரதானன ஸ்ரீ ஸர்வாபீஷ்டப்ரதாயகாய நம அக்ஷதாம் ஸமர்ப்பயாமி" என்று அக்ஷதை = (மஞ்சள் - அரிசி) பொற்சுண்ணம், பூந்தாதுமுதலியவற்றைச் சாத்தி,

"சுகந்தினி சுபுஷ்டாணி, ஜாஜீகுந்த முகானிச, ஏகவிம்சதிபுஷ்பா ணி, க்ருஹாணத்வம் விநாயக, ஸ்ரீவிநாயகாயநம புஷ்பாணி பூஜையாமி" என்று உக மலர்களைச்சாத்தி,

ஓம் கணேசாயநம=பாதௌ பூஜையாமி=பாதம்
ஓம் விக்னராஜாயநம=ஜானுநீ பூஜையாமி=முழந்தாள்
ஓம் ஆகுவாஹனயநம=ஊரும் பூஜையாமி=தொடை
ஓம் ஏரம்பாயநம=கடிம் பூஜையாமி=நிதம்பம்
ஓம் தேவதேவாயநம=நாபிம் பூஜையாமி=நாபி
ஓம் லம்போதராயநம=உதரம் பூஜையாமி=வயிறு
ஓம் கணநாயகாயநம=ஹிருதயம் பூஜையாமி=இருதயம்

---

* பஞ்சாமிர்தம்=தேன், பால், வாழைப்பழம், சருக்கரை, நெய் இவ்வைந் துங் கலந்தது.

ஓம் ஸ்தூலகண்டாயநம=கண்டம் பூஜையாமி=கண்டம்
ஓம் ஸ்கந்தாக்ரஜாயநம=ஸ்கந்தௌ பூஜையாமி=கழுத்தடி
ஓம் சதுர்ப்புஜாயநம=புஜௌ பூஜையாமி=தோள்
ஓம் பாசஹஸ்தாயநம=ஹஸ்தாம் பூஜையாமி=உள்ளங்கை
ஓம் கஜவக்திராயநம=வக்த்ரம் பூஜையாமி=நாசி அல்லது முகம்
ஓம் விக்னஹந்த்ரேநம=நேத்ரே பூஜையாமி=கண்
ஓம் சூர்ப்பகர்ணயநம=கர்ணௌ பூஜையாமி=காது
ஓம் ஏகதந்தாயநம=தந்தம் பூஜையாமி=தந்தம்
ஓம் குமாரகுருவேநம=சிரம் பூஜையாமி=சிரம்
ஓம் சர்வேஸ்வராயநம=சர்வாங்கானி பூஜையாமி=சர்வாங்கம்

என்று அங்கபூஜைசெய்து.

ஓம் சுமுகாயநம=மாசிப்பத்திரம் பூஜையாமி=மாசிப்பத்திரம்
ஓம் கணாதிபதயேநம=பிரங்காஜபத்ரம் பூஜையாமி=கரசாங்கண்ணி
ஓம் உமாபுத்ராயநம=வில்வபத்ரம் பூஜையாமி=வில்வம்
ஓம் கஜானனயநம=தூர்வபத்ரம் பூஜையாமி=அறுகு
ஓம் லம்போதராயநம=பதரீபத்ரம் பூஜையாமி=இலந்தை
ஓம் ஹாசூனவேநம=தத்தூரபத்ரம் பூஜையாமி=ஊமத்தை
ஓம் கஜகர்ணயநம=துளசிபத்ரம் பூஜையாமி=துளபம்
ஓம் குகாக்கிரசாயநம=காமஞ்சரிபத்ரம் பூஜையாமி=நாயுருவி
ஓம் ஏகதந்தாயநம=புரஹதீபத்ரம் பூஜையாமி=சிறுவழுதி
ஓம் கஜவக்திராயநம=சமிபத்ரம் பூஜையாமி=வன்னி
ஓம் சுராக்ரகண்யாயநம=தேவதாரபத்ரம் பூஜையாமி=மந்தாரை
ஓம் பாலசந்த்ராயநம=மருவபத்ரம் பூஜையாமி=மரு
ஓம் விகடாயநம=கரவீரபத்ரம் பூஜையாமி=அலரி
ஓம் விநாயகாயநம=தருமோற்பலபத்ரம் பூஜையாமி=கோங்கு
ஓம் கபிலாயநம=அர்க்கபத்ரம் பூஜையாமி=வெள்ளெருக்கு
ஓம் பின்னதந்தாயநம=அர்ச்சுனபத்ரம் பூஜையாமி=மருதம்
ஓம் பத்னிஹீனயநம=விஷ்ணுகிராந்திபத்ரம் பூஜையாமி=விஷ்ணுகிராந்தி
ஓம் வடவேநம=தாடிமபத்ரம் பூஜையாமி=மாதுளை
ஓம் சூர்ப்பகர்ணயநம=ஜாஜீபத்ரம் பூஜையாமி=ஜாதிமல்லி
ஓம் மூஷிகவாஹனயநம=கண்டலேபத்ரம் பூஜையாமி=தாழை
ஓம் சித்திவிநாயகாயநம=சிந்துவாரபத்ரம் பூஜையாமி=வெண்ணொச்சி
ஓம் சர்வசித்திப்ரதாயகாயநம=ஏகவிம்சதிபத்ராணிம் பூஜையாமி=சகலமும் கலந்தது.

என்று இருபத்தொருமந்திரங்களால் அருச்சித்துப் பின்பு மல்லிகை, முல்லை, வெள்ளெருக்கு, சண்பகம், புன்னை, நந்தியாவட்டம், பாடலம், கடுக்காய், தும்பை, செம்பரத்தை, நீலோற்பலம், வெண்டாமரை, செந்தாமரை, நெய்தல் முதலிய பற்பல பூக்களைக்கொண்டருச்சித்து,

ஓம் விநாயகாயநம
ஓம் விக்னராஜாயநம
ஓம் கணநாதாயநம
ஓம் கஜானனுயநம
ஓம் மஹோதராயநம
ஓம் மஹாதேவாயநம
ஓம் ஷனித்காஞ்சன ஸமதீதுய்யேநம
ஓம் ஏகதம்ஷடோத்கடாயநம
ஓம் தேவாயநம
ஓம் கஜவக்த்ராயநம
ஓம் மஹாபலாயநம
ஓம் நாகயக்ஞோபவீதினேநம
ஓம் நாகாபரணபூஷிதாயநம
ஓம் ஸர்வார்த்தஸம்பதாதாராயநம
ஓம் கணுத்யக்ஷாயநம
ஓம் வரப்ரதாயநம
ஓம் ருத்ரஸ்யதன்யாயநம
ஓம் உதராயநம
ஓம் நாயகாயநம
ஓம் ப்ரமதாதிபாயநம
ஓம் பத்மராகத்வதயேநம
ஓம் ஸோமாயநம
ஓம் ரக்தமால்யானுலேபனுயநம
ஓம் அபலாயநம
ஓம் பாலரூபிணேநம
ஓம் சுமுகாயநம
ஓம் சுரப்ரியாயநம
ஓம் ப்ரபவேநம
ஓம் புண்யாயநம
ஓம் பூர்ணுயநம
ஓம் பூர்ணேதராயநம
ஓம் புண்யகீர்த்தயேநம
ஓம் புராதனுயநம
ஓம் பர்த்ரேநம
ஓம் சிவாயநம
ஓம் சாந்தாயநம
ஓம் ஜகன்நாத்ராயநம
ஓம் சாஸ்வதாயநம
ஓம் ஸ்வேதபரிதானுயநம
ஓம் த்ரயக்ஷாயநம
ஓம் கனகசுப்ரபாயநம
ஓம் சிவஸாம்யாயநம
ஓம் மஹாதேஜஸேநம
ஓம் மஹாபலபராக்ரமாயநம
ஓம் ஸாவக்ஞாயநம
ஓம் க்ஞானஸம்பன்னுயநம
ஓம் ஸர்வாபரணபூஷிதாயநம
ஓம் பாபாபஹேதனுயநம
ஓம் சண்டவிக்ரமாயநம
ஓம் அலக்ஷ்மீமலநாசனுயநம
ஓம் குமாராயநம
ஓம் காரணுயநம
ஓம் காரிதாயநம
ஓம் ஸர்வசித்திப்ரதாயகாயநம
ஓம் விபவேநம
ஓம் ஈசாயநம
ஓம் ஈசபுத்ராயநம
ஓம் ஈஸ்பிதார்த்தப்ரதாயகாயநம
ஓம் ஸ்ரீதாயநம
ஓம் சுபாயநம
ஓம் ஏகதந்தாயநம
ஓம் ஏகவீராயநம
ஓம் அநேகதாயநம
ஓம் ஏகஸ்மைநம
ஓம் ஏகப்ரதேநம
ஓம் விஸ்வப்ரதேநம
ஓம் விஸ்வபஜேநம
ஓம் விஸ்வஸமைநம
ஓம் விஸ்வக்ஞாயநம
ஓம் ஸர்வபாவனுயநம
ஓம் பாக்யதாயநம
ஓம் பவதாயநம
ஓம் பாகினேநம
ஓம் போகதாயநம
ஓம் போகபாவனுயநம
ஓம் கவயேநம
ஓம் கார்யாயநம
ஓம் கனிஞுயநம

ஓம் கர்த்ரேயநம
ஓம் க்ரதவேநம
ஓம் க்ருதினேநம
ஓம் க்ருத்யவிதேநம
ஓம் அத்யுக்ராயநம
ஓம் காந்தர்சினேநம
ஓம் க்ருதாந்தகாயநம
ஓம் ஸ்துத்யாயநம
ஓம் ஸ்தோத்ரேநம
ஓம் ஸ்தோகாயநம
ஓம் ஸ்தோத்ராயநம
ஓம் த்ரயீமயாயநம
ஓம் வேதாயநம
ஓம் வேதாந்தக்ருதேநம
ஓம் வேத்யாயநம
ஓம் விதுஷாம்புத்திதாயநம
ஓம் புதாயநம
ஓம் ஓங்காராயநம
ஓம் ப்ரமஹவிதேநம
ஓம் ப்ராம்ஹணயநம
ஓம் ப்ரம்ஹணேநம
ஓம் ப்ரம்ஹபராயநம
ஓம் பராயநம
ஓம் ஸர்வக்ஞாயநம
ஓம் ஸக்ததயேநம
ஓம் ஸர்வலோகவேத்யாயநம
ஓம் ஸர்வதாயநம
ஓம் சுபகாயநம
ஓம் அவ்யயாயநம
ஓம் சித்திவிநாயகாயநம

என்று அஷ்டோத்தர சததிவ்யநாமபூஜை செய்து,

"தாசங்கம் குங்குளம்தூப, முத்தமம் கணநாயக, க்ருஹாணகண ராஜேந்த்ர, விக்னஹாரின்னமோஸ்துதே, ஸ்ரீ கணநாயகாயநம, தூபமாக் ராபயாமி" என்று தூபங்கொடுத்து,

"ஸர்வக்ஞசர்வலோகேச, ஸர்வபூதஹிதோத, க்ருஹாணமங்களம் தீபம், ருத்ரப்ரிய நமோஸ்துதே, ஸ்ரீ சர்வக்ஞாயநம தீபந்தர்சயாமி" என்று தீபங்காட்டி,

பின்பு மூர்த்திசந்நிதிக்கு எதிரே நிலத்தைச் சதுரமாக மெழுகி அக்ஷதை, புஷ்பம் சாத்தி, பரிகலபாத்திரம் வைத்து, சுத்தான்னம், சித்திரான்னம், மோதகமுதலிய (உக) பலகார வகைகள், தேங்காய், முக்கனி=(வாழை, பலா, மா) முதலிய இருபத்தொருகனிகள், கரும்பு, பாயசம், பானக்கம், நீர்மோர், முதலிய பானவர்க்கங்கள், ஆகிய இவை களைச் சுத்தம்செய்துவைத்து,

"ஓம் அஸ்திராயநம" என்று சலம் புரோக்ஷித்து, "ஓம் கவசாயநம" என்று நீர்வளையக்கட்டி,

நைவேத்தியம் ஷட்ரஸோபேதம்—பலலட்டு ஸம்யுதம், மோதகம் பரமான்யம்ச—நமஸ்தே விக்னநாசன. ஸ்ரீ விக்னநாசனயநம, நைவேத்யம் சமர்ப்பயாமி" என்று நைவேதனம்செய்து,

"தாம்பூலமுத்தமந்தேவ க்ருஹாணசுரபூஜித, கற்பூரசூர்ணசம்யுக் தம், மயாதத்தமிதம்விபோ, ஸ்ரீ ருத்ரப்ரியாயநம, தாம்பூலம் ஸமர்ப்ப யாமி" என்று தாம்பூலம் உபசரித்து,

"ஸதாந்தனதவிக்னேச—புஷ்டலாபிதனுநிச, பூம்யாம்ஸ்திதானிபக வன், ஸ்வீகுருஷ்வவிநாயக. ஸ்ரீ விக்னேசாயநம, ஸ்வர்ணபுஷ்பம் சமர்ப் பயாமி" என்று தக்ஷிணைவழங்கி,

"விக்னராஜ நமஸ்துப்யம் பாபக்ஞானப்ரணாசன, புனரர்க்யம்ப்ர தாஸ்யாமி, க்ருஹாணசுரசத்தம, ஸ்ரீ விக்னராஜாயநம, புனரர்க்யம்ஸமர் ப்பயாமி" என்று அர்க்கியங்கொடுத்து,

| | |
|---|---|
| ஓம் கணதிபாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் உமாபுத்ராயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் அகநாசாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விநாயகாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் ஈஸ்வரபுத்ராயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விக்னராஜாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் ஏகதந்தாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் இபவக்திராயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் ஆகுவாஹனாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் குமாரகுருவேநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சுமுகாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சுராக்கிரகண்யாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் ஸ்தூலகண்டாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் குகாக்ரசாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் லம்போதராயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் பின்னதந்தாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விசாலாக்கினேநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் காமரூபியேநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் பாலசந்த்ராயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் வக்ரதுண்டாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சர்வசித்திப்ரதாயகாயநம | தூர்வாயுக்மம்பூஜையாமி |

என்று சந்தனத்திற்றோய்த்த இரண்டிரண்டு அறுகினால் இந்த இருபத்தொரு திருநாமங்களையுஞ் சொல்லி அருச்சித்து,

"நமஸ்தே தேவதேவேச, நமஸ்தேகணநாயக, நீராஞ்சனம் ப்ரஸ் யாமி, ப்ரசன்னோபவமேப்ரபோ, ஸ்ரீ தேவதேவாயநம, நீராஞ்சனம் சமர்ப்பயாமி" என்று ஆலத்திசுற்றி,

"ஆகுவாஹன்தேவேச, விஸ்வவ்யாபின்கஜானன, ப்ரதக்ஷிணம் கரோமித்வாம், மமத்வம்ஸன்னிதிம்குரு, ஸ்ரீஆகுவாஹனாயநம, ப்ரதக்ஷி ணம் ஸமர்ப்பயாமி" என்று வலம்வந்து,

"நமஸ்தேகஜவக்த்ராய, நமஸ்தேகணநாயக, நமஸ்தேதேவதேவேச, கௌரீபுத்ரநமோஸ்துதே, ஸ்ரீ கௌரிபுத்ராயநம, நமஸ்காரம் ஸமர்ப்பயாமி" என்றுதீர்க்கதண்டன்செய்து,

"தேவதானவகோடீர, மணிரஞ்சிதபாதக, க்ஷமன்வதேவதேவேச, புத்ராக்னீர்த்திஞ்சதேஹிமே, ஸ்ரீ கஜவக்த்ராயநம, ப்ரார்த்தனம்ஸமர்ப்பயாமி" என்று பிரார்த்தித்து, தேவாரத்திருமுறைகளால் தோத்திரம் பண்ணி,

"க்ருதவர்த்தி ஸஹாஸ்த்ரேஸ்ச, கர்ப்பூரசகலே ஸ்ததா, நீராஞ்சனம்மயாதத்தம், க்ருஹாணவரதோபவ, ஸ்ரீ கணாதிபாயநம, நீராஞ்சனம் சமர்ப்பயாமி" என்று ஆலத்தி சுற்றி,

"தேவ தேவகணாத்யக்ஷ, சுராசுரவரார்ச்சிதா, அவிக்னம் குருமே தேவ், ஸர்வகார்யேஸ்துஸர்வதா, விநாயக நமஸ்தேஸ்து, ஸததம்மோதகப்ரிய, அவிக்னம்குருமேதேவ, ஸர்வகார்யேஸ்துஸர்வதா" என்று க்ஷமாபணம் செய்து, முன்கூறிய சங்கற்பங்கூறி, சந்தன புட்பாட்சதைகளைக் கொண்டு வேதாத்தியயனம் செய்துகொண்டிருக்கும் ஆதிசைவப் பிராமணர்களைப் பூசித்து,

"கணேசபரதிக்ருண்ஹாதி, கணேசோவைததானிச, கணேசஸ்தார கோபாப்யாம் கணேசாயநமோநம" என்று வாயனதானம் செய்து,

சித்திரான்னம் முதலிய அன்னவகைகளும், பற்பல பலகாரவகைகளும், கனிவர்க்கங்களும், நீர்மோர்முதலிய பானவர்க்கங்களும், அடைக்காய்முதலியவும் அமைத்து, முன்சொன்ன மந்திரபூர்வகமாக நிவேதனம்செய்து நீர்விளவி தூபதீபங்கொடுத்து, வலம் வந்து திருவடிகளை வணங்கி, சோடசதானங்களை வழங்கி கணேசமூர்த்தியை இருதயகமலத்தில் இருத்திப் பின்னர் சொர்னமூர்த்தியை அங்குள்ள புரோகிதருக்குத் தானமாகக்கொடுத்து விநாயக சதுர்த்தி விரதத்தைப் பூர்த்தி செய்தல்வேண்டும்.

---

வைய முய்யவே—நையு மன்பினீர்
சைவம் பரவவே—செய்து வாழ்மினே.

# கல்வி.

கல்வி என்னும் விஷயமாகப் பலர் பலபாஷைகளில் பலநூல்களில் விரித்து விளக்கியிருக்கின்றார்கள். இவ்விஷயமாக அடிக்கடி உபந்நியாசங்களும் செய்கிறார்கள். ஆதலால், இவ்விஷயமாகவே நாமும் இப்பத்திரிகையில் எடுத்து விளக்குவது அநாவசியமெனச் சிலர்க்குத் தோன்றக் கூடும். ஆனால், கல்வியானது சமய வளர்ச்சிக்கும் சமய வுணர்ச்சிக்கும் இன்றியமையாத கருவியாயிருத்தலாலும், அது பிறசமயங்கட்கெல்லாம் பொதுவும், சைவசமயத்திற்குச் சிறப்புமாகிய கருவியாயிருத்தலாலும், கடவுள் கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியாயிருத்தலாலும், கல்வி சிவசொரூபமாயிருத்தலாலும், சைவசமய உண்மைகளைப் பிரகாசப்படுத்தியுலவும் இப்பத்திரிகையின்கண், இவ்விஷயமாக எழுதுவது இன்றியமையாததாகும்.

உலகத்திலுள்ள நாத்திகர் முதலிய எல்லாச் சமயத்தாரும் கல்வியை அறிவை வளர்க்குங் கருவியாக மதித்தாலும், எல்லோருமே அதைக் கடவுளின் சொரூபமாகவும் எண்ணுகிறதில்லை. சைவசமயிகளாகிய நாம் அதை அறிவை வளர்க்குங் கருவியாகமாத்திரமன்றி சிவசொரூபமாகவும் மதிக்கின்றோம். நம்முடைய ஒப்பற்ற வேதமும் சர்வவித்தையும் சிவ சொரூபம் என்னும் பொருள் தோன்ற "ஈசாநஸ் ஸர்வ வித்தியாநாம்" என்று முழக்குகின்றது. சைவாகமமும் "சர்வாநுக்கிராகிகையாயும், சர்வ சத்தார்த்த ரூபிணியாயு மிருக்கின்ற சிவசத்திக்கு வேறாக யாதொரு சத்தார்த்தப்பிரபஞ்சமுமில்லை. ஆதலால் அவ்வக்ஷரங்களியாவும் சர்வசித்திகளுக்கும் ஆலயமாயிருக்கும்" என்னும் பொருள்தோன்ற

ஸர்வாநுக்ராஹிகாஜ்ஞேயா ஸர்வசப்தார்த்த ரூபிணீ।
தைர்விநா துபவேச்சப்தோ நார்த்தோநாபிவிதேர்கதிஃ
தேநதேஸர்வஸித்திநாமாலயஃ பரிகீர்த்திதாஃ.

என்று கூறுகின்றது.

கல்வி கடவுளின் சொரூபமாயிருப்பது பற்றியே, கற்றவர்களைக் கடவுள்ாக வழிபடுவதும், மற்றவர்கள் மறையவர்களை வழிபடுவதுமாகிய வழக்கம் நம்மவர்களுள் தொன்று தொட்டுண்டாயிருக்கிறது.

கல்வியினால் மனிதர்களுக்குண்டாகும் பலன்களை நோக்குவார்க்கு கல்வி சிவசொரூபமென்பது நன்கு விளங்கும். ஆகலால், சிவபெருமானைப் போலவே கல்வி உபகரித்து வருதலை ஈண்டு விளக்குவாம். ஆன்மாக்கள் அறிவுடைப் பொருள்களாயினும், ஆணவமலத்தாற் பிணிப்

புண்டு, அதுகாரணமாக அறிவுகுன்றி, துன்பக்கடலில் வீழ்ந்துகிடத்தலால், சிவபெருமான் அவைகளுக்குத் தனுகாணாதிகளைக் கொடுத்து அறிவைவிளக்கித் தமது திருவடி யின்பத்தைத் தந்தருளுகின்றார். அவ்வாறே கல்வியும் மனிதர்களின் அஞ்ஞானத்தைப் போக்கி அறிவைப் பெருக்கி இன்பம் பயக்கின்றது. சிவபெருமான் எல்லையற்ற இன்பக் கடலாயிருப்பதுபோல் கல்வியும் கரையற்ற இன்பக்கடலா யிருப்பது. சிவபெருமான் தம்மையடைந்தார்க்குப் புதிது புதிதாகப் போகங்கொடுப்பதுபோல் கல்வியும் கற்குந்தோறும் புதிது புதிதாகவும் தெவிட்டாத தெள்ளமிர்தமாகவுமிருப்பது. சிவபெருமான் உயிர்த்துணையாயிருந்து போக மோட்சங்களைக் கொடுப்பதுபோல் கல்வியும் உயிர்த்துணையா யிருந்து போகமோட்சங்களை யளிக்கவல்லது.

## நீதிநெறிவிளக்கம்.

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை.

சிவபெருமான் உயிர்களுக்கு நால்வகையோனி யெழுவகைத் தோற்றத்தின்கண்ணும் உடனின்று உபகரிப்பதுபோல், ஒருபிறப்பிற் கற்ற கல்வியும் எழுவகைப் பிறவியிலும் உயிர்க்குதவிசெய்யவல்லது.

## திருக்குறள்.

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

சிவபெருமான் உயிர்களின் பக்குவங்கட்கீடாக உபகரிப்பதுபோல் கல்வியும் மனிதர்களின் பக்குவங்களுக்கீடாகப் பயனளிப்பது.

அறிவினுஞ் சிறந்த பொருள் வேறொன்றுமில்லை. அறிவே ஆன்ம சொரூபமாம். அறிவே சிவ சொரூபமாம். அறிவே முத்தியின்பமுமாம். உயிர்களின் அறிவை விளக்குவதே சிவபரம்பொருளின் பஞ்சகிருத்தியமுமாம். சிவபெருமான் விலங்குமுதலிய உயிர்களுக்கு மெய், வாய், கண், மூக்கு, செவிகளாகிய கருவிகளைக்கொடுத்து, சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், என்னும் ஐந்தறிவை விளக்குகின்றார். மனிதர்களுக்கு அவ்வைந்தினோடு சித்தத்தாலறியும் அறிவைக்கொடுத்தும் கல்வியாகிய கருவியைக்கொடுத்தும் அறிவை மேலுமேலும் விளக்குகின்றார். சத்தமுதலியவற்றை விளக்குவதற்கு எப்படி மெய் முதலியன அவசியமோ, அப்படியே அறிவை விளக்குவதற்குக் கல்வி அவசியமாம்.

கண்ணில்லாதவன் குருடன் எனவும் காதில்லாதவன் செவிடன் எனவும் சொல்லப்படுவதுபோல் கல்வியில்லாதவன், அறிவிலி என்று சொல்லப் படுகிறுன். அறிவின் தாரதம்மியங்களை நோக்கி மனிதர்கள் விலங்கு களைக்காட்டிலும் சிறந்தவர்களாக எண்ணப்படுதலினுல், கல்வியறிவில் லாதவர்கள் விலங்குகளுக்குச் சமமாக எண்ணப்படுகிருர்கள்.

## திருக்குறள்.

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

அன்றியும், கண்ணனது புறப்பொருள்களைமாத்திரம் விளக்குவதும், கல்வி அகம் புறம் என்னும் இருபொருள்களையும் விளக்குவதுமாயிருத் தலினுல், கல்வியில்லாதவன் கண்ணுடையவனுயிருந்தாலும், அதைக் கொண்டு அகப்பொருளை யறியமாட்டாதவனு யிருப்பதனுலும், அவன் காணும் புறப்பொருள்களையும் திரிவுபடக்கண்டு இடர்ப்படுத்திக்கொள் ளுதலாலும், அவனுடைய கண் கண்ணுக மதிக்கப்படாமல் புண்ணுக மதிக்கப்படும்.

## திருக்குறள்.

கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

கல்வியினுற் பெறற்பாலனவாகிய புருஷார்த்தங்கள் நான்கினுள் வீடு ஒன்றே என்றும் அழியாத வரம்பி லின்பந்தருவதாகிய பரமபுரு ஷார்த்தமாகையால், பெரியோர்கள் கல்வியைக்கொண்டு, தம் அறிவை வளர்த்து, சிவஞானச் செல்வர்களாய் வாழ்வர். சிறியோர் பொருளை யே பெரிதாகமதித்து ஞானநூல்களைக் கற்காமல் உலக நூல்களையே கற்றுத் தம் வாணுளை வீணுளாக்குவர். முத்தி சாதனமாகிய ஞானநூல் களைக் கல்லாமல் உலகநூல்களையே கற்பவர்கள், இம்மானிடச்சரீரத்தாற் பெறற்பாலதாகிய முத்தியின்பத்தை யிழந்தவர்களாகையால், இவர்கள் கற்றகல்வி பயனற்ற கல்வியேயாய் முடியும்.

## திருக்குறள்.

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅ ரெனின்.

சைவசமயிகளுள் பலர் சமயநூல்களைக் கற்காமலே சிவாலயவழி பாடு மாத்திரம் செய்கிருர்கள். இவர்கள் கற்றுப் பிறர்க்குரைத்தும் அவ்வொழுக்கமில்லாதவர்களைக் காட்டிலும் மிக மேலானவர்களேயா

யினும், குழந்தைகையிற் கிடைத்த மாணிக்கம்போல் இவர்கள்செய்யும் சிவவழிபாடும் இவர்களுக்கு அதிக பலன் தரமாட்டாது. "கல்லா நெஞ்சில் நில்லானீசன்" எனவும், கடவுள், "கற்றவர் விழுங்குங் கற்பகக்கனி" எனவும், தமிழ்மறைமுறையிடுவதனால், கல்வியறிவில்லாதவர்கள் அவருடைய எண்ணுதற் கெட்டாவெழிலார் மகிமைகளை எங்ஙனம் அறிந்து இன்புறுவார்கள்? சிவாலயங்களின் அமைப்பும், அவற்றிற் பிரதிட்டிக்கப்படும் மூர்த்தங்களும், பற்பல அரிய தத்துவார்த்தங்களையும் புராண சரித்திரங்களையும் தம்முள் விளக்கிக்கொண்டிருக்கின்றன. ஆகமங்களையும் சித்தாந்த சாத்திரங்களையும் புராணங்களையும் நன்குணர்ந்தவர்களே அவற்றின் உண்மைகளை யுள்ளவாறுணர்ந்து வழிபடுதற்குரியாராவர். அவர்களுக்கே சிவாலய வழிபாடு அதிக இன்பந்தரும். அவர்கள் அம்மூர்த்தங்களை வணங்கும்போது தாங்கள் கற்ற நூல்களிற் கண்ட ஞானப் பொருள்களை இம்மையிலேயே அநுபவிக்கப் பெற்றவர்களெனச் சிவபரம்பொருளின் அருள் விளையாடல்கள் தங்கள் புலன்களுக்கும் விஷயமாய், என்புநைந்துருகி, அன்பெனுமாறு கரையதுபுரள பரவசமாவர். சாத்திர உணர்ச்சியில்லாதவர்கள், பூர்வபுண்ணியமேலீட்டினால் வெறும் அன்பு காரணமாக வழிபடுவார் நீங்க, மற்றையோரெல்லாம் அவ்வாறு அன்புநிகழப்பெறார். இவர்கள் சிவமூர்த்தங்களுக்குத் தங்கள் மனம்போனபடியெல்லாம் பொருளுரைத்து, சிவாலயவழிபாட்டை விபரீதப்படுத்தி விடுவார்கள். இதற்குச் சில உதாரணங் காட்டுவோம். சிதம்பரத்தையடைந்து நடராஜப்பெருமானை வணங்குவோர் பலர் "சாமி அம்மனுக்கு ஆட்டம் ஆடிக்காட்டுகிறார்" என்று சொல்லி அம்மட்டிற் சந்தோஷித்து வணங்குகிறார்கள். இதைக்கேட்கும் கிறிஸ்தவர்கள் முதலிய புறச்சமயிகளும், சமயக்குருடர்களாகிய ஆங்கிலம்கற்ற நாகரிகச் சைவர்களும், இதை மெய்யென நம்பி, "இதென்ன அறிவீனம். சாமிக்கு ஒருமனைவி இருக்கிறாளாம். அவளுக்கு அவர் கூத்தாடிக் காட்டுகிறாராம். இவையெல்லாம் பார்ப்பார் பணம் பறிக்கச்செய்யும் சூதுகளாம். இதையறியாமல் அளவற்ற மூடஜனங்கள் பணச்செலவு செய்துகொண்டு வேடிக்கை பார்க்கப் போகிறார்கள்" என்று பரிகாசஞ்செய்கிறார்கள்.

(இன்னும் வரும்.)

சைவம்-அநுபந்தம்.

# சிவஞானபோதவசனாலங்காரதீபம்.

இந்நூல்; ஸ்ரீ நீலகண்டபாஷியத் தமிழ்மொழிபெயர்ப்பாசிரியராகிய சித்தாந்த ஞானபாநு ஸ்ரீ காசிவாசி செந்திநாதையரவர்களாலியற்றப் பட்டு அச்சிடப்படுகின்றதென்பது முன்னர் விளம்பரமூலந் தெரிவிக்கப் பட்டது. அதனைக் கண்ணுற்ற அன்பர்க்கு ஞாபகமிருக்குமென்று கருதுகின்றேன்.

இப்பொழுது அச்சிட்டுமுடிந்து பயிண்டாகி விலைக்கு வெளிவந்து விட்டது. சிவஞானபோதச்சிற்றுரை பாடியம் இரண்டினும் வேதம் உப நிடதம் ஆகமம் திருமுறை முதலியவற்றினின்று மெடுத்துக்காட்டப் பட்ட பிரமாணங்களேயன்றி இவற்றினின்று மவற்றில் எடுத்துக்காட் டப்படாத அனேக பிரமாணங்களும் இவ்வசனநூலில் எடுத்துக்காட் டப்பட்டிருத்தல் இதுகாறும் என்போல்வார் கொண்டிருந்த ஐயம் திரிபு அறியாமை என்பன நீங்கி உண்மை ஞானம் உதித்தற் கேதுவாயிருக் கின்றது. இதன் அருமை பெருமைகள் வித்துவாவிப்பிராயமாகிய சிறப் புப்பாயிரம் முகவுரை முதலியவற்றால் யாவரும் அறியக்கிடத்தலின் ஈண்டு விரித்தல் மிகையென விரியாதுவிட்டேன். ஆயினும் ஒன்றுகூறி முடிக்கின்றேன்.

ஒருசீடன் சற்குருவையடைந்து வழிபட்டுச் சிவஞானபோத உண் மையுணர்ச்சியை அடைதற்குமுன்னர் அதின்மேல போதிந்துள்ள விடயங் கள் இவையெனத் தானே உபாயஞானம்வாயிலாக மிகவும் இலகுவில் அறிந்து கோடற்கு ஒவ்வோர் சூத்திரத்தின் இறுதியிலும் வினாக்களும் அவற்றின் விடைகளை உணருமாறு அவற்றின் எண்களும் குறிக்கப்பட் டிருக்கின்றன.

இத்துணை இலகுவாகச் சிவஞானத்தை உதிப்பிக்கவல்ல இவ்வசன நூல் சைவசமயிகளாகிய ஆண்பாலார் பெண்பாலார் யாவர்க்கும் அத்தி யாவசியகம் வேண்டற்பாலதாம் பெறலரும் பெருநிதியே யென்பது சொல்லாதே விளங்கும்.

இதில் பொல்லாப்பிள்ளையார், தக்ஷிணாமூர்த்தி, மெய்கண்டதேவர், சிவஞானசுவாமிகள் திருவுருவப்படங்கள் முன்னர்ச்சேர்க்கப்பட்டி ருத்தலோடு ஈற்றில் ஆக்கியோன்படமும் சேர்க்கப்பட்டது.

காகிதக்கிரயமும் பைண்டுக்கூலியும் முன்னையினும் மும்மடங்கு அதிகப்பட்டிருக்கு மிக்காலத்து யாவரும் எளிதாகவாங்கும்பொருட்டு இதன்குறைந்தகிரயம் ரூபா 2 அணா 8 ஆக ஏற்படுத்தப்பட்டது. வாங்கவிரும்பும் அன்பர்கள் எனக்குத் தெரிவித்தால் வி. பி. மூலம் அனுப்பப்படும்.

சி. ஏகாம்பரமுதலியார்
44—சாமிநாயக்கன்ரோட்,
சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

# திருநீற்றின் உண்மை.

சைவசித்தாந்த மகாசமாஜத்தின் வனிதைவகுப்புக் காரியதரிசியா ராகிய ஏ. ஆண்டாளம்மாள் அவர்களால் வெளியிடப்பட்டது.

இந்நூல் சைவபூஷணங்களில் ஒன்றாய விபூதியின் பெயரும் காரணமும், விபூதிஆக்கும் விதமும், அதன்வரலாறும் பிறவும் இனிது விளக்குவதாகும். சைவராயுள்ள எவரிடத்தும் இருக்கத்தக்கது. விலை அணு 4.

# சிவலிங்கமகத்துவம்.

சிவாலயத்திற் சென்று வழிபடும் அன்பர்கட்குக் காக்ஷியளிக்கும் சிவலிங்கத் திருமேனியின் உண்மைப்பொருளை இப்புத்தகத்தினிடமாக விரிவாய்க் காணலாம். விலை அணு 4.

சி. ஏகாம்பரமுதலியார்
44 — சாமிநாயக்கன் ரோட்
சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

# உபாசனாதிருவுருவப்படம்.

எல்லாரும் வழிபட்டுய்யும்வண்ணம் கீழ்க்குறித்தபடங்களை வெகு அழகாகத் தயார்செய்து 22 அங்குல நீளமும் 18 அங்குல அகலமுமுள்ள உயர்ந்த பளபளப்புள்ள கடிதத்தில் அரிய உருவங்களாகப் பதிப்பித்துச் சுலபவிலைக்கு விற்கின்றோம். இத் திருவுருவமானது வேதாகமோக்தமாய்ப் பார்ப்பவர்களின் மனதில் உடனே பக்தியை உண்டாக்கக்கூடியதாக விருக்கும். இதனை உணர்பவருக்கே உண்மை விளங்குமாகையால், அதிகமெடுத்துச் சொல்லுவதிற் பிரயோசனமில்லை.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| மதுரை மீனாக்ஷிதிருவுருவப்படம் 1—க்கு .... .... | 0 | 4 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 12 | 0 |
| ஏகாதிக ஸஹஸ்ரலிங்கமென்னும் 1001 சிவலிங்கப்படம் | 0 | 2 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 4 | 0 |
| அஷ்டோத்தர சதலிங்கமென்னும் 108 சிவலிங்கப்படம். | 0 | 2 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 4 | 0 |
| அறுபத்து நான்கு சிவபராக்கிரம ஐதீக படம் .... | 0 | 4 | 0 |
| அறுபத்து மூன்று நாயன்மார்கள் ஐதீக படம் .... | 0 | 4 | 0 |
| திருவிடைமருதூர் இரதபந்தப் படம் .... .... .... | 0 | 4 | 0 |
| திருக்கழுக்குன்ற ஐதீக படம் | 0 | 2 | 0 |
| ஸ்ரீஞானசம்பந்த மூர்த்திஐதீக | 0 | 2 | 0 |
| திருவொற்றியூர் தியாகராசர்.. | 0 | 1 | 0 |
| மயிலை உமாமயேஸ்வரி படம். | 0 | 1 | 0 |
| விநாயகமூர்த்திப் படம் .... | 0 | 1 | 0 |
| நடேசமூர்த்திப் படம் .... | 0 | 1 | 0 |
| சமயாசாரியர் 4 உட்கார்ந்தது | 0 | 1 | 0 |
| மேற்படி நின்றகோலப் படம் | 0 | 1 | 0 |
| பழனிமலைத் தண்டாயுதபாணி | 0 | 1 | 0 |
| பட்டணத்துப்பிள்ளையார்படம் | 0 | 1 | 0 |
| தாயுமானசுவாமிகள் படம் .... | 0 | 1 | 0 |
| திருவள்ளுவநாயனார் படம் .... | 0 | 1 | 0 |
| லக்ஷ்மி படம் .... .... | 0 | 1 | 0 |
| சரஸ்வதி படம் .... .... | 0 | 1 | 0 |
| மஹாகாளி படம் .... .... | 0 | 1 | 0 |

தி. மு. அருணாசலமுதலியார்
54 — சாமிபண்டாரம் ரோட்
சிந்தாத்திரிப்பேட்டை சென்னை. எஸ். சி.

# சீகாளத்திப்புராணம்

## மூலமும் உரையும்

### சைவம் சந்தாதாரர்கட்கு குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும்.

சீகாளத்திப்புராணம் என்னும் இத் திவ்யக்ரந்தம் 'கற்பனைக் களஞ்சியம்' எனப் புலவரான் போற்றப்படும் பெருமைவாய்ந்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அவர் சகோதரர் கருணைப்பிரகாசர், வேலைய சுவாமிகள் என்னும் பிரபல வித்துவசிகாமணிகளால் பாடப்பெற்றுள்ளது. இதன்கண்ணுள்ள சரித்திரங்கள் உள்ளத்தை உருக்கத்தக்கன. பாட்டுக்கள் பக்திரசம் ததும்பி இனிப்பன. கற்பனை அலங்காரங்கள் கவினப்பெற்றன. இதற்கு ஓர் உரையின்மைநோக்கி மஹாவித்துவான் காஞ்சீபுரம் இராமசாமி நாயுடு அவர்களைக்கொண்டு விருத்தியுரை எழுதுவித்தும், ஒவ்வொரு சருக்கத்தின் கடையில் அச் சருக்கத்தின் கதையை தெள்ளிய வசனநடையில் எழுதுவித்தும், உயர்ந்த கிளேஸ்கடிதத்தில் முத்துப்போன்ற எழுத்தில் அச்சிட்டு 24 ஐதிக லெத்தோபடங்கள் அமைத்தும், கண்ணையும் கருத்தையும் கவரத்தக்கதாக காலிகோ பயிண்டு செய்து தங்கரேக்கினால் சிலந்தி, யானை, பாம்பு, ஈஸ்வான்முதலிய படமும் பெயரும் அழுத்தியுள்ளது.

இது வித்தியார்த்திகளுக்கும் பெண்பாலார்களுக்கும் வித்துவான்களுக்கும் இன்றியமையாது வேண்டப்படுவது.

விலை ரூபா 2 8 0

ஸெப்டெம்பர்மீ 30உ வரையில் சைவம் சந்தாதாரர்கட்கு 1 12 0 ரூபாய்க்கு கொடுக்கப்படும்.

## சிவகீதை.

இந்நூல் பத்திமோக்ஷ ஞானங்களை நல்லாசிரியனைப்போல் போதிப்பது. ஒவ்வொருவரும் வாசித்தற்குரியது.

இதின் விலை ரூபா 2.

இந்நூல் வேண்டுவோர் சென்னை சௌகார்பேட்டை, இருளப்பன் வீதி 36-வது நெம்பர் வீட்டில் கா. ஐம்புலிங்கமுதலியாரிடம் பெற்றுக் கொள்க.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

## கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
## விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
## குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளினுடைய உபத்திரவம்பொறுக்கமுடியாமல் அவஸ்தைபபடுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதுறக்கா முதலிய எவ்வித, விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. . ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0–8–0. டசன் 1-க்கு ரூ. 5–0–0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி,

நெ. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்

மாதாந்தப் பத்திரிகை.

மலர் 2.] நளஞு புரட்டாசிமீ -1916ஞு செப்டம்பர்மீ [இதழ் 9.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

(*Retired Accountant, Military Accts. Department.*)

சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணா 12.

(தபாற்செலவுட்பட.)

சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் போஷகர்கள்.

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கன்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர், கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்,
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, எஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷிகர், மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, சி. வெங்குபிள்ளையவர்கள்
ரிடையர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. முத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி, சென்னை.

,, ஆர். காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர், சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடையர்ட் சப் இன்ஜினீர், தங்கசாலைவீதி.

,, ராய் பஹதூர், சீவரம், சுப்பராயமுதலியாரவர்கள்.

---

வடமொழிச் சிவஞானபோத முதற்சூத்திர வியாக்கியானம் வெளிவந்துவிட்டது. ... ... ..., ரூபா—க.

---

காவிரிப்பூம்பட்டினத்தில்

## பட்டினத்தடிகள் மகோற்சவம்.

இது நிகழும் நளஹு ஆடிமீ 19உ முதல் 29உ வரையில் நடைபெற்றது. அந்நாட்களில் பட்டினத்தடிகளின் திவ்விய சரித்திரம் உற்சவ வாயிலாக மிகவும் சிறப்பாய் விளக்கிக்காட்டப்பட்டமையால், அதைத் தரிசித்த எண்ணிறந்த சனங்கள், அப்போதுதான் பட்டினத்தடிகளையும், அவர் செய்தருளிய அற்புதங்களையும், அவர்பொருட்டு மருதப்பிரான் செய்தருளிய திருவிளையாடல்களையும், நேரில் தரிசித்தவர்களெனக் கருங்கன்மனமும் கரைந்துருகப்பெற்றார்களென்றால், அங்ஙனநிகழுமாறு அவ்வுற்சவத்தை முன்னின்று சிறப்புற நடைபெறுவித்த காரியதரிசியவர்களாகிய ஸ்ரீமத் சின்மயானந்த சுவாமிகளின் திருத்தொண்டு விசேடங்களை யாமாசொல்லவல்லேம்!

தே. பழ. சித. சதாசிவஞ்செட்டியார்.

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நளஹு புரட்டாசிமீ—1916ஹு செப்டம்பர்மீ || [இதழ் 9

*பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி*
*ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி*
*வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி*
*ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள் போற்றி.*

---

## சிவஞானபோதம்.

(120-வது பக்கத்தொடர்ச்சி.)

*இனி முதற்சூத்திரத்தின் இரண்டாம் அதிகரணத்தை விளக்குவாம்.*

முதற்சூத்திரம்—இரண்டாம் அதிகரணம்.

"தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்"

(இ—ள்.) பிரபஞ்சம் ஒருவனால் தோற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும் சகசமலம் நீங்காமையால் அது நீங்கும்பொருட்டு மீளத் தோன்றுவதாம் (எ—று.)

இவ்வதிகரணத்தில் தன்னாற் கூறப்படும் பொருள்முதலிய ஐந்தும் வருமாறு:—

க—வது—தன்னாற்கூறப்படும்பொருள்—சகம் அரனாலேயுடையது.

உ—வது—ஐயப்பாடு—சகம் சார்பில் தோன்றுவதோ? அன்றி அரனால் தோற்றப்பட்டதோ?

ங-வது—பிறர் கூறும் பக்கம்—பிரபஞ்சம் இல்பொருளாய்ச் சார்பிலே தானேதோன்றியழியும். ஆதலால் அதைத் தோற்றியழிப்பவன் ஒருவன் வேண்டாம். (இது புத்தர் கொள்கை.)

பிரபஞ்சம் உள்பொருளாய் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றியழியும். ஆதலால் அதற்கு நிமித்தகாரணமாகிய கர்த்தா ஒருவன் வேண்டாம். (இது சாங்கியர் மதம்.)

பிரபஞ்சத்தைப் படைக்கும் பிரமன், அதைக்காக்கும் விஷ்ணு, ஆகிய இவ்விருவருள் ஒருவரே அதற்குக் கர்த்தாவாதல் அமையும். அழித்தற்றொழிலைச் செய்யும் அரன் கர்த்தாவன்று. (இது இரணிய கருப்பன், பாஞ்சராத்திரி என்பார் பட்சம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.

பிரபஞ்சம் முயற்கொம்புபோல் இல்பொருளாயின் அதற்கு மூக்காலத்தும் உற்பத்தி யில்லாதிருத்தல்வேண்டும். பிரபஞ்சத்திற்கு உற்பத்திமுதலியன காணப்படுதலால் அது இல்பொருளன்று. உள்பொருளே. (இது புத்தரை மறுத்தது.)

உள் பொருளைச் செய்பவரின்றிச் செய்தொழில் மாத்திரம் இராதாகையால், உள்ளதாகிய பிரபஞ்சம் தோற்றுவிப்போனாகிய கர்த்தாவாலன்றி உண்டாகாது. (இது சாங்கியரை மறுத்தது.)

எது எதனில் ஒடுங்குமோ அது அதனின் உற்பத்தியாம் என்னும் ஏதுவினால், சங்கார கர்த்தாவாகிய அரனிடத்தில் ஒடுங்கிய பிரபஞ்சம் அரனிடத்திலிருந்தே மீளத்தோன்றும். (இது இரணியகருப்பனையும் பாஞ்சராத்திரியையும் மறுத்தது.)

ரு-வது—இயைபு.—

## உதாரண வெண்பா.

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
விலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு. (உ)

(அன்வயம்) இலயித்தது இலயித்ததன்னில் மலத்தால் ஆம். இலயித்தவாறு உளதா வேண்டும். இலயித்தது அத்திதியில் என்னின், அவையழியாது. அத்திதியும் ஆதியுமாம் அங்கு அழிவது.

(இ-ள்.) இலயித்தது=ஒடுங்கியது—இலயித்ததன்னில்=ஒடுங்கிய பொருளினின்றும்—மலத்தால்=மலம் காரணமாக—ஆம்=மீள உண்டாம். (அது) இலயித்தவாறு=ஒடுங்கினபடியே—உளதாவேண்டும்=மீள உண்டாகவேண்டும். இலயித்தது அத்திதியில் என்னில்=ஒடுங்கினது திதிகருத்தாவாகிய விண்டுவிடம் என்பையேல்—அவை. யழியாது=சர்வபிரபஞ்சமும் திதி கருத்தாவிடம் ஒடுங்காது. அத்திதியும்=அந்த திதிகருத்தாவாகிய விஷ்ணுவும்—ஆதியும்=சிருட்டி கருத்தாவாகிய பிரமனும்—அங்கு=யாவும் ஒடுங்குமிடமாகிய அரனிடத்தில்—அழிவதாம்=ஒடுங்கிவிடுவார்கள். (எ-று.)

(விருத்தியுரை.) இலயித்தது=முன்னே ஒடுங்கிய உலகம் (மீளத் தோன்றுங்கால்)—இலயித்ததன்னில் ஆம்=ஒடுங்கிய விடத்தினின்றும் தோன்றுவதாம். (ஒடுங்கிய உலகம் ஏன் மீளத் தோன்றுமென்னில்)—மலத்தால்=உலகம் மலத்தோடுங் கூடியிருத்தலால், கருமமலம் பரிபாகமாகும்பொருட்டு ஒடுங்கி, ஆணவமலம் பரிபாகமாகும்பொருட்டு மீளவுந்தோன்றும். (ஆனல், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக, வேறு பிரபஞ்சம் தோன்றும் என்னுமல், முன் ஒடுங்கின பிரபஞ்சமே மீளத் தோன்றும் என்பது எங்ஙனம் எனில்)—இலயித்தவாறு உளதாவேண்டும்=எது எவ்வாறு நின்று ஒடுங்கிற்ருே, அது அவ்வொடுங்கியவாறே மீளத்தோன்றியுளதாதல்வேண்டும். இலயித்தது அத்திதியில் என்னின்=உலகம் ஒடுங்கியது அதற்கு முதற்காரணமாகிய மூலப்பிரகிருதி வடிவாகிய வாசுதேவன் (என்னும்) திதி கர்த்தாவிடத்தில் என்பையாயின்,—அவை அழியாது=நீ அவ்வாறு கொள்ளினும் மாயாகாரியத் தொகுதி முழுமையும் திதி கர்த்தாவிடம் ஒடுங்காது. மூலப்பகுதிக்கு மேல் வாசுதேவனுக்கு வியாபக மில்லாமையால், அதற்குக் கீழுள்ள ஏகதேசத் தனவாகிய நிவர்த்தி பிரதிஷ்டாகலைகளைச் சார்ந்த தத்துவ புவனங்கள் மாத்திரம் அம்மூலப் பிரகிருதியில் ஒடுங்குமேயன்றி அதற்கு மேற்பட்ட வித்தியாகலையைச்சார்ந்த அசுத்தமாயாதத்துவ புவனங்களும், அதற்குமேற்பட்ட சாந்தி சாந்தியாதிதகலைகளைச் சார்ந்த சுத்தமாயாதத்துவ புவனங்களும் ஒடுங்காவாம். அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது=(ஆனல் மாயாகாரியத்தொகுதி முழுவதும் எங்கே ஒடுங்கும் என்னில்) அது திதி கருத்தாவாகிய நாராயணனேடும், சிருட்டி கர்த்தாவாகிய பிரமனேடும் தான் தோன்றுதற்குக் காரணமாயுள்ள அந்த மகாசங்காரகர்த்தாவிடத்தே ஒடுங்கும். (எ-று)

முதல்வன் உலகத்தை ஏன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்துத் தோற்றுவித்தல்வேண்டும் என்னுஞ் சந்தேகம் நீங்குமாறு, வேட்டை வாளியுபமானம் கூறியவாறும்.

உதாரண வெண்பா.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி விற்றின்றாங் கட்டு. (சு)

(இ - ள்.) இறைவன்=முதல்வன்—காலத்தில் தாக்காது நின்று=(இறப்பு, நிகழ்வு, எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலுஞ் செய்தும் விகாரமின்றி நிற்பதாகிய) காலத்தைப்போல் விகாரப்படாது நின்று—ஆக்காதேகண்டு=பிரபஞ்சத்தைக் காணத்தாற் படையாது சங்கற்பமாத்திரத்தாலேயே படைத்து—நோக்காதே நோக்கி நொடித்து=அவ்வாறே காணத்தாற்காவது சங்கற்பமாத்திரத்தாற் காத்து, காணத்தால் அழிக்காது சங்கற்பமாத்திரத்தால் அழித்தலால்=இன்று ஆம்கட்டு=இவ்வமலனுக்குப் பந்தமின்றாதல்—உளத்தில்=உள்ளத்தைப்போலும்; (அதாவது கற்றநூற் சொல்லும் பொருளும் உள்ளத்தில் தோன்றுங்கால், உள்ளம் அவற்றில் தொடக்குண்ணுதவாறு போலும்). கனவுகண்ட=கனவில் கண்டவற்றை—கண்ட நனவு உணர்வில்=புறத்து விடயங்களை யறிந்துவந்த நனவுணர்வின்கண்ணே—உணரக்கண்டவனில்=விளங்கவறிந்தவன் அப்பொழுது அவற்றில் தொடக்குண்ணுதவாறுபோலும். இற்று=இத்தன்மைத்து. (எ - று.)

"உம்முடைய கர்த்தா குடத்தைக் குயவன் செய்வதுபோல் உலகத்தையுண்டாக்குவன் என்பையாயின், அவன் குயவனைப்போல் பந்தமடையானோ?" எனில், எமது கர்த்தா குயவனைப்போல் கைகால் முதலிய அவயவங்களைக்கொண்டும் மனமுதலிய காணங்களைக் கொண்டும் உலகைப் படைப்பானல்லன். அவன் சங்கற்பமாத்திரத்தாற் படைத்தலால், அவன் தான்செய்யும் படைப்பு முதலியவற்றில் தொடக்குறான். எதுபோலும் எனின், ஒருவன் கற்ற நூலிலே உள்ள சொல்லும் பொருளும் அவன் உள்ளத்தில் உதிக்குங்கால் அவன் உள்ளமானது அவற்றால் தொடக்குண்ணுத தன்மையினையும், சொப்பனத்தின்கண்ணே கண்டவைகளை சாக்கிரத்தின்கண்ணே அறிந்தவன் அக்கனவினிடத்தே தொடக்குண்ணுத தன்மையினையும் போலும் என்க.

அன்றே - அசை; அநாதியேயெனினும் அமையும். குயவன் முதல்வனுக்கு ஒருபுடையுவமையேயன்றி முற்றும்மையன்று.

# காரைக்காலம்மையார்புராணம்.

நம்பன் றிருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டு
மும்பர் மிசைத்தலை யானடந்தேற வுமைநகலுஞ்
செம்பொன் னுருவனென் னம்மை யெனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே.

சோழமண்டலத்திலே, காரைக்கால் என்னுந் திருப்பதியிலே, தனதத்தன் என்னும் வைசியகுலத்தலைவன் ஒருவன் இருந்தான். அவன் முன்செய்த தவத்தால் அவன்பால் திருமகளே வந்துதித்தாள் என்று சொல்லத்தகுந்த சர்வலட்சணங்களும் வாய்ந்த பெண் குழந்தை யொன்று பிறந்தது. அக்குழந்தை வைசிய குலத்தைமாத்திரமன்றி உலக மனைத்தையும் மலமாசகற்றிப் புனிதமாக்கும் பெற்றித்தாய் விளங்கினமையால், அவன் அதற்குப் புனிதவதியார் என்று பேரிட்டு, அதை மிகவும் அருமையாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனன். அக்குழந்தை வளர வளர அதனுடன் சிவபத்தியும் சிவனடியார் பத்தியும் வளர்ந்துகொண்டேவந்தன. அதனால், அதுபேசிய மழலைமொழிகளெல்லாம் ஈசன் கழலைப்பாவுவனவாயிருந்தன. அது விளையாடிய வண்டல்களெல்லாம் சிவபெருமானுடைய தொண்டுகளாயிருந்தன. அக்குழவி செவிலித்தாய்மார்களின் மடிமீதிருந்து விளையாட்டயரும்போது சிவனடியார்களைக்காணில், உடனே தவழ்ந்தும் தளர்நடையிட்டும் விரைந்துசென்று, அவர்கள் திருவடிகளில் வீழ்ந்துவணங்கும். அவர்களுடைய திருவேடப்பொலிவைக் கண்ணாரக்கண்டு களிக்கும். அவர்கள் பேசுவதைக் காதாரக்கேட்டு மகிழும். புனிதவதியார் இவ்வாறு சிறு குழந்தைப்பருவத்திலிருந்தே அன்பு செலுத்தினரென்பது, அவர் பின்னே அருளிச்செய்த

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

என்னும் அற்புதத்திருவந்தாதியாலும் உணரப்படும். அவர் சிவபத்தியும் தாமுமாக வளர்ந்துவருநாளில், அவர்பால் சிவஞானமேலிடச் சிவ

போதம் சுருங்கியதையொப்ப, தனங்கள் பருத்து இடை சுருங்க மங்கைப்பருவம் சமீபித்தது. மங்கைப்பருவம் சமீபித்தலும், தனதத்தன் அவரை நாகபட்டணத்திலிருந்த நிதிபதியென்னும் ஓர் சீமானுடைய புத்திரனாகிய பரமதத்தன் என்பவனுக்கு விவாகஞ் செய்துகொடுத்து, தனக்கு வேறுபிள்ளையின்மையால் அவரைவிட்டுப்பிரியமனமின்றி, தன்வீட்டுக்கருகில் வேறொரு வீடுகட்டுவித்து, அளவிறந்த திரவியங்களையுங்கொடுத்து, பரமதத்தனையும் புனிதவதியாரையும் அதிலிருத்தினான். பரமதத்தன் பெறுதற்கரிய சிவஞானச் செல்வியாகிய அவ்வம்மையாரை மனைவியாகப்பெற்று இல்லறத்தை நடத்திக்கொண்டு "வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல்" என்னும் மூதுரையின்படி செல்வத்தை மேலு மேலும் பெருக்கி, குபேரனையொத்து வாழ்ந்திருந்தான்.

## திருக்குறள்.

இல்லதெ னில்லவண் மாண்பான லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

புனிதவதியார் பிறந்தநாள்தொடங்கி இடையறாது திரண்ட செல்வத்திலே பிறந்து செல்வத்திலே வளர்ந்து சீதேவியொத்து வாழ்ந்திருந்தும், பொருட் செல்வத்தில் அவருக்குப்பற்றில்லாமலேயிருந்தது. அவர் பற்றிய பற்றெல்லாம் இறைவனாரது இணையடிப்பற்றாகவேயிருந்தது. அதனால் அவர் அச்செல்வத்தாற் சிறிதும் மயங்குதலின்றி, சிவனடியார்கள் யாவரேயாயினும் அவர்களைச் சிவபெருமானாகவே மதித்து வழிபடும் வழிபாட்டிற் சிறந்து, அவர்களுக்குப் பேரன்போடு திருவமுதுபடைப்பதும், வேண்டும் பொன்னும் ஆடையாபரணங்களும் கொடுப்பதுமாக இருந்தனர். இப்படியொழுகுநாளில் ஓர்நாள், பரமதத்தனை அவன் வர்த்தகசாலையிற் காணச்சென்ற சிலர் அவனிடம் இரண்டு மாங்கனிகளைக்கொடுத்தார்கள். அவைகளை யவன்வாங்கித் தனது வீட்டிற்கனுப்பினான். அவைகளைப் புனிதவதியார் பெற்றுத் தம்மிடம் வைத்திருந்தனர். அச்சமயத்தில், ஒரு சிவனடியார் மூப்பினாலும், மிகுந்த பசியாலும் தளர்ந்து வருந்தித் தள்ளாடித்தள்ளாடி அம்மையாருடைய வீட்டிற்குள் புகுந்தனர். அம்மையார் அவ்வடியவருடைய நிலைமையைப் பார்த்து, அவருக்குத் தாமதமின்றி விரைந்து திருவமுதுபடைக்க விரும்பி, உடனே அவர் திருவடிகளை விளக்கும்படி நீரைக்கொடுத்து, ஆசன

மிட்டெழுந்தருளச்செய்து, பரிகலந்திருத்திவைத்து, அன்னத்தைப் படைத்து, அச்சமயம் கறியமுது பாகம்பண்ணப்படாமையால், தமது கணவனாலுப்பிய மாங்கனிகளில் ஒன்றைப்படைத்து, இடையிடையே இனிய உபசாரமொழிகளாகிய இன்னமுதத்தை அவர் செவியிலூட்டிக் கொண்டே திருவமுது உண்பித்தனர். அவ்வடியவர் முகமலர்ச்சியோடும், இனிய உபசாரவார்த்தைகளோடும், கனிந்த அன்போடும் அம்மையார் உண்பித்த திருவமுதை தேவாமுதத்தினும் இனிதாக உண்டு, பசிதீர்ந்து, அவருடைய அன்பினுக்கு மகிழ்ந்து ஆசிகூறிச் சென்றனர்.

பரமதத்தன் வர்த்தகசாலையிலிருந்து காரியங்களைப்பார்த்துக்கொண்டு, நடுப்பகற்போதில் வீட்டுக்குவந்து நீராடிப் போசனஞ்செய்யத் தொடங்கினன். அப்போது அம்மையார் பரிகலந்திருத்தி அதிற் பல வகையான கறிவர்க்கங்களோடு எஞ்சிநின்ற மாங்கனியையும் இட்டு அவனுக்கு அமுதூட்டுவாராயினர். அவ்வணிகன் அம்மாங்கனியை யுண்ணுதலும், அது அதிக மதுரமுடையதாயிருந்தமையால், அவ்வொருகனியோடு திருப்தியடையாமல் மற்றொருகனியையும் புசிக்க விரும்பி, அதையுங்கொண்டுவந்து கலத்திலிடும்படிகேட்டான். தமக்கென வொருசெயலுமில்லை, எல்லாம் சிவன்செயல் என்றுணர்ந்து, அருள்வழிநின்ற அம்மையார், அக்கனி தம்மிடத்திலில்லையென்பதை யுணர்ந்திருந்தும், கணவன்சொல்லைக் கடக்கமாட்டாத கற்பினல் அவன் சொற்படியே மாங்கனிகொண்டுவருவார்போற்சென்று, கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியாகிய இறைவரை யிறைஞ்சுதலும், அவர் திருக்கரத்தில் அதிமதுரமாகிய மாங்கனியொன்று வந்தமர்ந்தது. பிரமாதி தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய இறைவர் திருவருள் தமக்கு எளிதில் கிடைத்தமைக்கு அம்மையார் மனமுருகி அப்பிரானரின் திருவடிகளைத்தியானித்து, அக்கனியைக் கொண்டுசென்று கணவன் உண்கலத்தில் இட்டனர். அதை அவன் உண்ணுதலும், அது தேவாமிர்தத்தைக் காட்டிலும் அதிக மதுரமுள்ளதாயிருந்தமையால், சந்தேகங்கொண்டு, அம்மையாரைப்பார்த்து "பெண்ணே, இது நான் முன்கொடுத்தனுப்பிய பழமன்று. இது மூவுலகத்தினும் கிடைக்கமாட்டாது. இது உனக்கு எப்படி கிடைத்தது" என்று கேட்டான். அம்மையார் நிறைந்த சிவபத்தியும் சிவஞானமும் உடையவராயிருந்தும், தாம் அவ்வாறிருத்தலைப் பிறர் அறியாவண்ணம் ஒழுகி இல்லறம் புரிந்தனர். ஆதலால், அவர் பெருமை

உ

கணவனுக்கும் தெரியாமலிருந்தது. அவருக்கு இருவினை யொப்புண் டாய்விட்டமையால், அவரை யாட்கொள்ளத் திருவுள்ளங்கொண்டும், உலகினர் அவர் தெரிவரும் பெருமையையுணர்ந்து அவரொழுக்கத்தைக் கடைப்பிடித்துய்யவேண்டியும், இறைவனார் அதிமதுரமாகிய மாங்கனி யைத் தந்தருளியதுமன்றி கணவனுக்குச் சந்தேகத்தையும் உண்டாக்கி யருளினர். அக்கனி எங்கிருந்து பெற்றதெனக் கணவன் கேட்டபோது, அது தமக்கு இறைவரால் அருளிச்செய்யப்பட்டதென்று சொல்ல அம்மையாருக்கு மனமெழவில்லை. கற்புடையபெண் தான் கணவனு டன் கூடியனுபவித்த இன்பத்தைப் பிறர்க்குச் சொல்வதுண்டோ? இல்லை. அதுபோல் பெரியோர் தாம்பெற்ற அருட்பேற்றைப்பிறர்க்கு வெளியிடார். இறைவன் அருளைப் பெறுதவர்களே பெற்றவர்களைப் போல் நடிப்பர்.

## நால்வர் நான்மணிமாலை

### அகவல்.

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறுரி னழுங்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பை நீயே
பேயேன் பெறுது பெற்றூர் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலை தீர்ந்தேனே
யன்னமாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாதலாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மில ரெனுஞ்
செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே.

அம்மையார் திருவருள் கைவரப்பெற்ற சிவஞானச் செல்வியா யிருந்ததோடு, கற்பினுக்கோர்வைப்பாகவு மிருந்தமையால், கணவன் சொல்லைக்கடக்கவும் மனமெழவில்லை. ஆதலால் இன்னது செய்வதென்று விளங்காமல் அஞ்சிநின்று, பிறகு நடந்தபடி சொல்வதே கடனெனத் துணிந்து, அவ்வாறுசொல்ல நேர்ந்தமைக்குவருந்தி இறைவனாரிணையடி களைத் தியானித்து, அவன்கொடுத்தனுப்பிய மாங்கனிகளில் ஒன்றை ஒரு சிவனடியார்க்குண்பித்தமையையும், சிவனருளால் மற்றொரு மாங்க னியைப் பெற்றீதையுஞ் சொல்லினர். அவன் அம்மையார் பெருமையை யறியாதவனாகையால் அவர்சொன்னதை நம்பவில்லை. ஆதலால் அவன்

அம்மையாரைநோக்கி "பெண்ணே, நீ இப்போது சொன்னதை நான் நம்பமாட்டேன். உலகவாழ்க்கையைக் கான்றசோறெனவெறுத்து மனைவிமக்களைத் துறந்து, நாட்டைவிட்டுக் காட்டிற்சென்று, உடையைத் துறந்தும், உண்ணுதொழிந்தும், ஐம்புலன்களையடக்கி, பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தவஞ்செய்யும் மகாமுனிவர்களுக்கும், பிரமாதி தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய சிவன் திருவருள், திரண்ட செல்வத்தை யனுபவித்துக்கொண்டு, அறுசுவையோடு முப்போதும் உண்டு, ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு களப கஸ்தூரிகளைப் பூசி, என்னுடன் காமநூலின்படிகூடிக் கலவியின்பத்தை யனுபவித்துக்கொண்டு, நான் காலாலிடும் வேலைகளைத் தலையாற்செய்துகொண்டிருக்கும் உனக்கு எப்படி கிடைத்துவிடும். நீ சொல்வது வெகுவிந்தையாயிருக்கிறது. இக்கனி உனக்குச் சிவன் தந்ததாயின் அவ்வாறே இன்னமுமொருகனி தருவி" என்றான். அம்மையார் தமது கணவன் அவ்வாறு கேட்டமையும் சிவன் செயலேயென்று சிந்தித்து, அவ்விடத்தினின்றும் நீங்கிப் போய், தமது வாக்குப் பொய்யாகாவண்ணம் மற்றுமோர் மாங்கனி தந்தருளல்வேண்டும் என்று அரவாபரணன் அடித்தாமரைகளைத் தியானித்தலும், முன்போலவே மற்றொரு கனிவந்து காத்திற்சேர்ந்தது. அதனை அம்மையார் கொண்டுசென்று அவன்கையிற்கொடுக்க, அவன் அதிசயித்து வாங்கினான். அவன் வாங்கினவுடன், அன்பில்லாரகத்திற் றோன்றிய வருளைப்போல் அது மாயமாய் மறைந்துவிட்டது.

அதையறிந்த வணிகன் மிகவும் பயந்து, மனந்தடுமாறி, "இவர் மானிடப்பெண் அன்று, தெய்வப்பெண். இதிற் சந்தேகமில்லை. இதனை இதுவரையில் அறியாமல், என்மூடமதியால் இவரை என் மனைவி என்றெண்ணி நடந்தேன். இவரை நான் வணங்குதற்குரியவனாயிருக்க இவர் பாவியாகிய என்னை வணங்கி, அன்னையென நேசித்து அடிமையென ஊழியஞ் செய்கிறார். இதென்ன விபரீதம்! இன்னும் இவரை மனைவியாக மதித்து வாழ்வது தவறு. ஆதலால் இவரைவிட்டு நீங்குவதே உத்தமம்" என்று தனக்குள்ளே நிச்சயித்துக்கொண்டு, தன் எண்ணத்தை வெளியிடாமலும், அம்மையாருடன் முன்போல் மனைவியாக மதித்து உறவாடாமலும், அவரைவிட்டு நீங்குவதற்குரிய பிரயத்தனங்களைச் செய்துகொண்டிருந்து, கடலைக்கடந்து சென்று வர்த்தகஞ் செய்யவிரும்பியதாக உறவினருக்கறிவித்து, மாக்கலஞ்செய்து அதில் நிறையப்பலபண்டங்களையேற்றி, ஓர் நன்னாள் குறித்து அத்தினத்தில் கடற்கிறைவனாகிய வருணனைப் பூசித்து, கப்பலோட்டும் மாலுமிமுத

லானவர்களோடு தானும் ஏறிச்சென்று, இடையிடையே தான் உத்தேசித்த ஊர்களிடோறும் இறங்கித்தங்கி வர்த்தகஞ்செய்து பெரும்பொருள் சேகரித்துக்கொண்டுபோய், கடைசியாகப் பாண்டிநாட்டிலுள்ள ஓர் பட்டினத்தின்கரையிலிறங்கி, அங்கு நீண்டகாலம்தங்கி, அளவற்ற திரவியம் சேகரித்து, அவ்வூரவரியாவரும் மதிக்கும்படி மேம்பாடடைந்து, தான்புனிதவதியாரை மணம்புரிந்திருந்ததும் அவரைப்பிரிந்துவந்திருந்ததும் ஒருவருக்கும் தெரியாதபடி மறைத்து; வேறொரு வைசியன் மகளை மணஞ்செய்து இல்லறம் புரிந்துகொண்டிருந்தான். அவன் அவ்வாறு புனிதவதியாரைத் தணந்து வேறொருபெண்ணை மணந்து வாழ்ந்திருந்தானயினும், அவன் அவ்வெம்மம்மையாரை மறந்தானில்லை. அவரைத் தனது பவத்தொடர்ச்சி நீக்கும் குலதெய்வமாக எண்ணி மானசீகமாக வழிபட்டுக்கொண்டிருந்தான். அவ்வம்மையாருடைய திருவுருவமே அவன்தியானிக்கும் மூர்த்தியாயிருந்தது. அவருடைய திருநாமமே அவன் உச்சரிக்கும் திருமந்திரமாயிருந்தது. அதனால் அவன் தன் இளையமனைவியிடம்பெற்ற பெண்குழந்தைக்குப் புனிதவதியார் என்று பேரிட்டு அழைத்தனன். இவ்வாறு பரமதத்தன் பாண்டிநாட்டில் வசித்துக்கொண்டிருக்க, கற்புக்கரசியாராகிய காரைக்காலம்மையார் தன் கணவன் நிலைமை தெரியாமல் அவன் வருகையை எந்நேரமும் எதிர்பார்த்துக்கொண்டே, இல்லறம் புரிந்துகொண்டிருந்தனர். இவர்களிருவரும் இவ்வாறிருக்கையில், பரமதத்தன் பாண்டிவளநாட்டில் ஒருமாநகரில் பெருஞ்சம்பத்துடையவனாய் வேறொருபெண்ணை விவாகஞ்செய்துகொண்டு, ஒருபுத்திரியையும் பெற்று வாழ்ந்துகொண்டிருக்கின்றான் என்று அம்மையார் உறவினர்கேள்வியுற்று, உடனே உறவினரையனுப்பியாராய்தலும், அது உண்மையெனத்தெளிந்து, மனம்வருந்தி, இனி அம்மையாரைக்கொண்டுபோய் அவனிடத்தில் விடுவதே கடமையென்று நிச்சயித்து, அவரைப் பல்லக்கிலேற்றிக்கொண்டு சென்று, பாண்டி நாட்டையடைந்து, பரமதத்தனிருந்த நகரையடைந்து, தாங்கள் புனிதவதியாரைக்கொண்டுவந்ததை அவனுக்குத் தெரிவிக்கும்படி ஆட்களையனுப்பினார்கள். அவ்வாட்கள் அவனைக்கண்டு "ஐயா, உம்முடைய முதன்மனைவியை அவருடைய சுற்றத்தார் இவ்விடத்தே அழைத்துக்கொண்டுவந்திருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். அதைக்கேட்டுப் பரமதத்தன் திடுக்கிட்டு, ஒன்றுந்தோன்றாமலிருந்து பிறகு தேறி, "அவர் என்னிடம் வருமுன் நானேபோய் அவரை வணங்குதல்வேண்டும்" என்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டு, தன் இளைய மனைவியையும் குழந்தையையும் உடன்கொண்டு பயத்தோடும் பத்தியோடுஞ் சென்று, தான் அவ்வாறு

வருதலைப்பார்த்து மானிளம்பிணையென மருண்டுநின்ற அம்மையார் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி, "அடியேன் தேவரீர் திருவருளால் இவ்விடத்தில் சுகமாய் வாழ்கின்றேன். நான் இவ்விடம் வந்து பெற்ற இக்குழந்தைக்கும் தேவரீருடைய திருப்பெயரையேயிட்டுளேன். என்றான். அதைக்கண்டு அம்மையார் அச்சமடைந்து, உடனே ஒருபுறமாக் ஒதுங்கி நின்றனர்.. அதைக்கண்ட உறவினர் பரமதத்தனைக் கோபித்துப்பார்த்து, "ஐயா, நீர் புனிதவதியாரை வஞ்சித்து, இவ்விடம்வந்து வேறொருபெண்ணை விவாகஞ்செய்துகொண்டது குற்றமேயாயினும், அதற்காக இப்படியும் உன் மனைவிகாலில்வீழ்ந்து வணங்கலாமா? உமது செய்கை ஒன்றும் நன்றாயில்லை. உமது நடவடிக்கையைக் காண எங்களுக்கேவெட்கமுண்டாகிறது" என்றார்கள். பரமதத்தன் அவர்களைநோக்கி, "ஐயன்மீர், இவர்மகிமையைநானறிவேன். இவர் மானிடர் அன்று. நாமியாவரும் வழிபடவேண்டிய பரதெய்வமிவர். இதையுணர்ந்தே, இவரை மனைவியாகமதித்து வாழ்தல் குற்றம் என்று நிச்சயித்து இவரை விட்டுநீங்கி இவ்விடம் வந்து வேறொரு பெண்ணை விவாகஞ்செய்துகொண்டேன். இதில் உங்களுக்கு நம்பிக்கையில்லாவிட்டால்; இவ்விடம் வந்துபெற்ற இக்குழந்தைக்கும் இவர் திருநாமத்தையே என் குலதெய்வப்பெயராக மதித்து இட்டிருப்பதைக்கொண்டு நம்பிக்கையடையலாம்" என்று சொல்லி, அம்மையாரிடம் தான்கண்ட அற்புதங்களையும் குண விசேடங்களையும் எடுத்துவிளக்கி, "இவரை நீங்களும் வணங்கியுய்யுங்கள்" என்றான். அவன் கூறியதைக்கேட்டு அங்கிருந்த சுற்றத்தாரும் பிறரும் ஆச்சரியமடைந்தார்கள். சிலர் தாமும் அம்மையார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்.

சீவன் முத்தர்கள் சிவஞானம் கைவரப்பெற்றும், ஆலயமும் வேடமும் அரனெனத் தொழுவதுபோல், சிவஞானங் கைவரப்பெற்றும் கற்புநெறி கடவாமல் கணவனைத் தெய்வமாக வழிபட்டுக்கொண்டிருந்த வம்மையார், பரமதத்தன் செயலைக்கண்டு, ஸ்ரீ கைலாயநாதரை ஏகாக்கிரசித்தத்தோடு தியானித்து, "எம்பெருமானே, அடியவர் ஊனுயிர் வேறு செய்யும் நொடித்தான்மலை யுத்தமனே, அடியேன் இதுவரையில் இவன் பொருட்டு மாமிசப்பொதியாகிய இவ்வுடலைச் சுமந்து காலங்கழித்தேன். இவன் இப்போது என்னை விரும்பாமையால், இனி இப்பொதியைச் சுமக்கலாற்றேன். உலகத்தார் விரும்பும் அழகு பொருந்திய இச்சரீரம் எனக்குவேண்டாம். கைலையின்கண் உம்மிடத்துநின்ற கணங்கள் போற்றும் பேய்வடிவத்தை இவ்விடத்தே அடியேற்கருளிச்செய்தல் வேண்டும்" என்றுபிரார்த்தித்தனர். உடனே வேண்டுவார் வேண்டுவதே

சயும் விமலனார் திருவருளால் அம்மையார் ஞானமயமாய் நின்று, தமது சரீரத்திலிருந்த மாமிச மனைத்தையும் உதறி என்பே உடம்பாக, திரிலோகமும் வணங்கும் பேய்வடிவடைந்தனர். அப்போது எங்கும் மலர் மழைபொழிந்தது, தேவதுந்துபியொலித்தது. தேவரும் முனிவரும் கொண்டாடினார்கள். பைசாசகணங்களெல்லாம் வீராவேசத்தாற்கொக்கரித்தன. உறவினரியாவரும் பயந்து வணங்கி நீங்கிப்போனார்கள். இறைவர் தமக்குப்பேய்வடிவம் அருளிச்செய்தமைக்கு அம்மையார் ஆனந்தபரவசமாய், தாம்பெற்ற அருளும் ஞானமும் பொங்கித்ததும்பியதென்று சொல்லும்படி, சகல சித்தாந்த • ஞானப்பொருள்களை விளக்கும் அதியற்புதமாகிய திருவந்தாதியொன்றை அப்பொழுதே யருளிச்செய்தனர். பிறகு திருவிரட்டைமணிமாலையொன்றை அந்தாதியாக வெடுத்துப்பாடியருளி, திருக்கைலாய மலைக்குச்செல்ல விரும்பி, தாம்பெற்ற திருவருள் தம்மை முன்னின்று நடத்திச்செல்ல வழிக்கொண்டு செல்வாராயினர். அவர்பேய்வடிவங்கொண்டு செல்லலும், அதைப் பார்த்தவர்யாவரும் அதிசயமும் அச்சமும் அடைந்து, அவரை யணுகாமலிருந்தார்கள். தாம்கொண்ட வேடத்தன்மையைப்பற்றிப் பலர் பலவாறாகக் கூறுதலும், அதை அம்மையார் அறிந்து, "சிவபிரான் என்னைத் தம் அடிமையென்றறிவரேல், அஃதே நான் பெறற்குரியபேறும். ஆதலால், அஞ்ஞானம் நிறைந்த உலகினர் என்னை அறியினுமென்? 'அறியாதிருப்பினுமென்? என்னை இவர்கள் இகழினுமென்? புகழினுமென்? ஆதலால் நான் இவர்கள் முன் எவ்வுருக்கொண்டிருப்பினுமென்?" என்று கூறி, அதிவிரைவாகச் சென்று திருக்கைலாயமலையைச் சமீபித்தலும், காலால் நடத்தலைத் தவிர்ந்து, தலையால் நடந்துசென்றனர். திருக்கயிலாயமலையைத் தலையால் நடந்தேறுவதை இறைவர் பக்கலில் வீற்றிருந்த உமாதேவியார் கருணைபொழி விழியாற்கண்டு இறைவனாரைப்பார்த்து "எம்பெருமானே, இங்கே என்புருவந்தாங்கித் தலையால் நடந்தேறி இவ்வளவன்போடு வருகின்ற வடிவம் யாது? "என்று கேட்டனர். இறைவனார் அம்பிகையாரைநோக்கி "இங்கே வருகின்றவள் நம்மைப்பேணும் அம்மை. இவள் இப் பேய்வடிவத்தைத் தானே விரும்பி என்னைவேண்டிப் பெற்றுக்கொண்டனள்," என்று அருளிச்செய்து, அம்மையார் தமதருகே சென்றதும் உலகெலாமுய்யுமாறு அவரை யருட்கண்ணால் நோக்கி "அம்மையே" என்றழைத்தனர். இறைவர் அம்மையே என்னும் செம்மைமொழியாலழைத்தலும் அம்மையார் "அப்பா"வென்று மெய்மை மொழியாலழைத்து, அவர் திருவடித்தாமரைகளில் வீழ்ந்து வணங்கினார். இறைவர் "நீ இங்கியாது விரும்பிவந்தனை" என்றருளிச் செய்ய அம்மையார்" என் இறைவரே, அறவாழியந்தணரே, அடியேனுக்குத்

தேவரீருடைய திருவடியைவிட்டு எக்காலத்தும் நீங்காத இன்பமயமாகிய பேரன்பு வேண்டும். நான் மறுபடியும் சனனம் எடாதிருத்தல்வேண்டும். மீண்டும் சனனமெடுத்தால் தேவரீரைத் தினைப்போதும் மறவாமல் அன்புசெய்தல்வேண்டும். தேவரீர் ஆனந்தநிருத்தஞ்செய்யும்போது அடியேன் தேவரீருடையதிருவடியின் கீழிருந்து மகிழ்ந்து பாடிக்கொண்டிருத்தல்வேண்டும்." என்றனர்.

## பெரியபுராணம்.

இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டுமீண்டும் பிறப்புண்டே லும்மையென்று
மறவாமை வேண்டுமின்னும் வேண்டுநான் மகிழ்ந்துபாடி
யறவாநீ யாடும்போதுன் னடியின்கீ ழிருக்கவென்றார்.

இறைவனார் "நீ தென்திசையையடைந்து, பழையனூர் திருவாலங்காட்டில் நாம் ஆடியருளும் ஊர்த்ததாண்டவத்தைத் தரிசித்து ஆனந்தமடைந்து நம்மை யெப்பொழுதும் பாடிக்கொண்டிரு" என்றருளிச் செய்தனர்.

அம்மையார் கைலாசபதியை வணங்கி விடைபெற்று மீண்டு, தலையால் நடந்து திருவாலங்காட்டையடைந்து, அவ்விடத்தில் இறைவனார் அண்டமளவும் திருவடியைத் தூக்கி நிருத்தஞ்செய்கின்ற திருக்கோலத்தைக் கண்கள் ஆனந்தவருவிசொரிய தரிசித்து, "கொங்கைதிரங்கி" என்னும் முதலையுடைய மூத்ததிருப்பதிகம் பாடி தாண்டவேசுவரரைத் தரிசித்துக்கொண்டு "எட்டியிலவம்" என்னும் முதலையுடைய திருப்பதிகம்பாடி யருள்பெற்று, அன்றுமுதல் என்றும் அவ்விறைவனார் அருள் நடமாடும்போது அவர் திருவடியின் கீழிருந்து கீதம்பாடிக்கொண்டிருக்கும் பெறுதற்கரிய பெரும்பேறு பெற்றனர். இவருடைய பெருமையை எடுத்துப்பேச யாவராலாகும்!

## பெரியபுராணம்.

மடுத்தபுனல் வேணியினா ரம்மையென மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தினவ
ரெடுத்தருளுஞ் சேவடிக்கீ ழென்றுமிருக் கின்றாரை
யடுத்தபெருஞ் சீர்பரவ லாரளவா யினதம்மா.

இவர் காரைக்காலில் திருவவதாரஞ்செய்து, சிவபெருமானுர் "இவள் நம்மைப்பேணும் அம்மை" என்று கூறி "அம்மையே" என்றழைக்கப்பெற்றதனுல், காரைக்காலம்மையார் என்னுந் திருநாமமும், பேய்வடிவம்பெற்று இன்றும் அப்பேய்வடிவத்துடன் இருப்பதனுல் பேயார் என்னுந் திருநாமமும் பெற்றனர். இவர் நாம் திருவாய்மலர்ந்தருளிய திருவந்தாதிமுதலியவற்றின் கடைக்காப்பில் தம்மைக் "காரைக்காற்பேய்" என்றருளிச்செய்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் "பேயார்க்கும் அடியேன்" என்றருளினர். இவர் செய்த தோத்திரங்களவ்வளவும் சைவசித்தாந்த ஞானப்பொருள்களை நன்கு விளக்குவனவாயிருக்கின்றன. இவர் சிவஞானச் செல்வராயிருந்தும் தங் கணவனைத் தெய்வமாக வழிபட்டுக் கற்புநெறியையும் கடைப்பிடித்தனர். இவர் அளவுபடாத சிவபத்தியும் சிவஞானமுமுடையவராயிருந்தும், தாம் அவ்வாறிருத்தலைப் பிறரறியாவண்ணம் ஒழுகினுர். இவர் அவ்வாறொழுகினமையின் இவர் திருவருளைக்கொண்டு, மாங்கனிகளைப்பெற்று மணாளனுக்கீந்ததும், தமது மகிமையைக்கண்டபிறகு அவன் தம்மிடம் சில காலம் தொடர்வின்றி வாழ்ந்திருந்ததும் வேறொருவருக்கும் தெரியாமலிருந்தது. இவர் சரித்திரத்தால்,

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து
    நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்த்தும்
நீடுபல காலங் கணித்தரா யிருந்து
    நின்மலஞா னத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
    எறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
    குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

என்று சிவஞானச்சித்தியாரிற் கூறப்பட்டவாறு, சிவஞானங் கைவரப் பெருதவர்கள், பூப்பிரதக்ஷிணஞ் செய்யினும், காட்டிலிருந்து கடுந்தவஞ் செய்யினும், மலைமுழைகளிலிருந்து அன்னபானுதிகளை யொழித்து அருந்தவஞ் செய்யினும், எண்ணிறந்த காலம் சீவித்திருப்பினும், அவற்றினுல் வீடுபேறடையாமல் பிறந்துழல்வர். என்பதும், மனையறத்திலிருந்துகொண்டு, மாதர்போகத்தை யனுபவித்துக்கொண்டிருந்தாலும், சைவசித்தாந்த நெறிநின்று அருள் வழியொழுகி சிவஞானங் கைவரப் பெற்றவர்கள், வீடுபேற்றைப் பெற்று, இறைவனுரது குஞ்சிதபாதத்தைக் கும்பிட்டுக்கொண்டேயிருக்கவும் பெறுவர் என்பதும் அறியக் கிடக்கின்றது.

சைவம்-அநுபந்தம்.

# சிவஞானபோதவசனாலங்காரதீபம்.

இந்நூல், ஸ்ரீ நீலகண்டபாஷியத் தமிழ்மொழிபெயர்ப்பாசிரியராகிய சித்தாந்த ஞானபாநு ஸ்ரீ காசிவாசி செந்திநாதையரவர்களா லியற்றப்பட்டு அச்சிடப்படுகின்றதென்பது முன்னர் விளம்பரமூலந் தெரிவிக்கப்பட்டது. அதனைக் கண்ணுற்ற அன்பர்க்கு ஞாபகமிருக்குமென்று கருதுகின்றேன்.

இப்பொழுது அச்சிட்டு முடிந்து பயிண்டாகி விலைக்கு வெளிவந்துவிட்டது. சிவஞானபோதச்சிற்றுரை பாடியம் இரண்டினும் வேதம் உபநிடதம் ஆகமம் திருமுறை முதலியவற்றினின்று மெடுத்துக்காட்டப்பட்ட பிரமாணங்களேயன்றி இவற்றினின்று மவற்றில் எடுத்துக்காட்டப்படாத அநேக பிரமாணங்களும் இவ்வசனநூலில் எடுத்துக்காட்டப்பட்டிருத்தல் இதுகாறும் என்போல்வார் கொண்டிருந்த ஐயம் திரிபு அறியாமை என்பன நீங்கி உண்மை ஞானம் உதித்தற் கேதுவாயிருக்கின்றது. இதன் அருமை பெருமைகள் வித்துவாஅபிப்பிராயமாகிய சிறப்புப்பாயிரம் முகவுரை முதலியவற்றால் யாவரும் அறியக்கிடத்தலின் ஈண்டு விரித்தல் மிகையென விரியாதுவிட்டேன். ஆயினும் ஒன்றுகூறி முடிக்கின்றேன்.

ஒருசிடன் சற்குருவையடைந்து வழிபட்டுச் சிவஞானபோத உண்மையுணர்ச்சியை அடைதற்குமுன்னர் அதிலே பொதிந்துள்ள விடயங்கள் இவையெனத் தானே உபாயஞானம் வாயிலாக மிகவும் இலகுவின் அறிந்து கோடற்கு ஒவ்வோர் சூத்திரத்தின் இறுதியிலும் வினாக்களும் அவற்றின் விடைகளை உணருமாறு அவற்றின் எண்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

இத்துணை இலகுவாகச் சிவஞானத்தை உதிப்பிக்கவல்ல இவ்வசனநூல் சைவசமயிகளாகிய ஆண்பாலார் பெண்பாலார் யாவர்க்கும் அத்தியாவசியகம் வேண்டற்பாலதாம் பெறலரும் பெருநிதியே யென்பது சொல்லாமே விளங்கும்.

இதில் பொல்லாப்பிள்ளையார், தக்ஷிணாமூர்த்தி, மெய்கண்டதேவர், சிவஞானசுவாமிகள் திருவுருவப்படங்கள் முன்னர்ச்சேர்க்கப்பட்டிருத்தலோடு ஈற்றில் ஆக்கியோன்படமும் சேர்க்கப்பட்டது.

காகிதக்கிரயமும் பைண்டுக்கூலியும் முன்னையிலும் மும்மடங்கு அதிகப்பட்டிருக்கு மிக்காலத்து யாவரும் எளிதாகவாங்கும்பொருட்டு இதன்குறைந்தகிரயம் ரூபா 2 அணா 8 ஆக ஏற்படுத்தப்பட்டது. வாங்கவிரும்பும் அன்பர்கள் எனக்குத் தெரிவித்தால் வி. பி. மூலம் அனுப்பப்படும்.

சி. ஏகாம்பரமுதலியார்
44—சாமிநாயக்கன் ரோட்
சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

# திருநீற்றின் உண்மை.

சைவசித்தாந்த மகாசமாஜத்தின் வனிதைவகுப்புக் காரியதரிசியாராகிய ஏ. ஆண்டாளம்மாள் அவர்களால் வெளியிடப்பட்டது.

இந்நூல் சைவபூஷணங்களில் ஒன்றாய விபூதியின் பெயரும் காரணமும், விபூதிஆக்கும் விதமும், அதன்வரலாறும் பிறவும் இனிது விளக்குவதாகும். சைவராயுள்ள எவரிடத்தும் இருக்கத்தக்கது, விலை அணா 4.

# சிவலிங்கமகத்துவம்.

சிவாலயத்திற் சென்று வழிபடும் அன்பர்கட்குக் காக்ஷியளிக்கும் சிவலிங்கத் திருமேனியின் உண்மைப்பொருளை இப்புத்தகத்தினிடமாக விரிவாய்க் காணலாம். விலை அணா 4.

சி. ஏகாம்பரமுதலியார்
44 – சாமிநாயக்கன் ரோட்
சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

# உபாசனாதிருவுருவப்படம்.

எல்லாரும் வழிபட்டுய்யும்வண்ணம் கீழ்க்குறித்தபடங்களை வெகு அழகாகத் தயார்செய்து 22 அங்குல நீளமும் 18 அங்குல அகலமுமுள்ள உயர்ந்த பளபளப்புள்ள கடிதத்தில் அரிய உருவங்களாகப் பதிப்பித்துச் சுலபவிலைக்கு விற்கின்றோம். இத் திருவுருவமானது வேதாகமோக்தமாய்ப் பார்ப்பவர்களின் மனதில் உடனே பக்தியை உண்டாக்கக்கூடியதாக விருக்கும். இதனை உணர்பவருக்கே உண்மை விளங்குமாகையால், அதிகமெடுத்துச் சொல்லுவதிற் பிரயோசனமில்லை.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| மதுரை மீனாக்ஷி திருவுருவப்படம் 1–க்கு .... .... | 0 | 4 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 12 | 0 |
| ஏகாதிக ஸஹஸ்ரலிங்கமென்னும் 1001 சிவலிங்கப்படம் | 0 | 2 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 4 | 0 |
| அஷ்டோத்தர சதலிங்கமென்னும் 108 சிவலிங்கப்படம். | 0 | 2 | 0 |
| மேற்படி வர்ணம்வைத்தது.... | 0 | 4 | 0 |
| அறுபத்து நான்கு சிவபராக்கிரம ஐதிக படம் .... | 0 | 4 | 0 |
| அறுபத்து மூன்று நாயன்மார்கள் ஐதிக படம் .... | 0 | 4 | 0 |
| திருவிடைமருதூர் இரதபந்தப் படம் .... .... .... | 0 | 4 | 0 |
| திருக்கழுக்குன்ற ஐதிக படம் | 0 | 2 | 0 |
| ஸ்ரீஞானசம்பந்த மூர்த்திஐதிக | 0 | 2 | 0 |
| திருவொற்றியூர் தியாகராசர். | 0 | 1 | 0 |
| மயிலை உமாமயேஸ்வரி படம். | 0 | 1 | 0 |
| விநாயகமூர்த்திப் படம் .... | 0 | 1 | 0 |
| நடேசமூர்த்திப் படம் .... | 0 | 1 | 0 |
| சமயாசாரியர் 4 உட்கார்ந்தது | 0 | 1 | 0 |
| மேற்படி நின்றகோலப் படம் | 0 | 1 | 0 |
| பழனிமலைத் தண்டாயுதபாணி | 0 | 1 | 0 |
| பட்டணத்துப்பிள்ளையார்படம் | 0 | 1 | 0 |
| தாயுமானசுவாமிகள் படம் .... | 0 | 1 | 0 |
| திருவள்ளுவநாயனார் படம் .... | 0 | 1 | 0 |
| லக்ஷ்மி படம் .... .... | 0 | 1 | 0 |
| சரஸ்வதி படம் .... .... | 0 | 1 | 0 |
| மஹாகாளி படம் .... .... | 0 | 1 | 0 |

தி. மு. அருணாசலமுதலியார்
54 – சாமிபண்டாரம் ரோட்
சிந்தாத்திரிப்பேட்டை சென்னை. எஸ். சி.

# சீகாளத்திப் புராணம்

## மூலமும் உரையும்

### சைவம் சந்தாதாரர்கட்குக் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும்.

சீகாளத்திப்புராணம் என்னும் இத் திவ்யக்ரந்தம் 'கற்பனைக் களஞ்சியம்' எனப் புலவராற் போற்றப்படும் பெருமைவாய்ந்தது. துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் அவர் சகோதரர் கருணைப்பிரகாசசுவாமிகள், வேலையசுவாமிகள் என்னும் பிரபல வித்துவசிகாமணிகளால் பாடப்பெற்றுள்ளது. இதன்கண்ணுள்ள சரித்திரங்கள் உள்ளத்தை உருக்கத்தக்கன. பாட்டுக்கள் பக்திரசம் ததும்பி இனிப்பன. கற்பனை அலங்காரங்கள் கவினப்பெற்றன. இதற்கு ஓர் உரையின்மைநோக்கி மஹாவித்துவான் காஞ்சீபுரம் இராமசாமி நாயுடு அவர்களைக்கொண்டு விருத்தியுரை எழுதுவித்தும், ஒவ்வொரு சருக்கத்தின் கடையில் அச் சருக்கத்தின் கதையை தெள்ளிய வசனநடையில் எழுதுவித்தும், உயர்ந்த கிளேஸ்கடிதத்தில் முத்துப்போன்ற எழுத்தில் அச்சிட்டு 24 ஐதீக லெத்தோபடங்கள் அமைத்து, கண்ணையும் கருத்தையும் கவரத்தக்கதாக காலிகோ பயிண்டு செய்து தங்கரேக்கினுல் சிலந்தி, யானை, பாம்பு, ஈஸ்வரன்முதலிய படமும் பெயரும் அழுத்தியுள்ளது.

இது வித்தியார்த்திகளுக்கும் பெண்பாலார்களுக்கும் வித்துவான்களுக்கும் இன்றியமையாது வேண்டப்படுவது.

விலை ரூபா 2 8 0

ஸெப்டெம்பர்மீ 30உ வரையில் சைவம் சந்தாதாரர்கட்கு 1 12 0 ரூபாவுக்குக் கொடுக்கப்படும்.

## சிவகீதை.

இந்நூல் பத்திமோக்ஷ ஞானங்களை நல்லாசிரியனைப்போல் போதிப்பது. ஒவ்வொருவரும் வாசித்தற்குரியது.

இதின் விலை ரூபா 2.

இந்நூல் வேண்டுவோர் சென்னை சௌகார்பேட்டை, இருளப்பன் வீதி 36-வது நெம்பர் வீட்டில் கா். ஜம்புலிங்கமுதலியாரிடம் பெற்றுக் கொள்க.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

## கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
## விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
## குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!

நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளி னுடைய உபத்திரவம்பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுறுக்கா முதலிய எவ்வித, விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.



மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0-8-0. டசன் 1-க்கு ரூ. 5-0-0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி,

நெ. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்

மாதாந்தப் பத்திரிகை.

மலர் 2.] நளஞு ஐப்பசிமீ-1916ஞு அக்டோபர்மீ [இதழ் 10.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

*(Retired Accountant, Military Accts. Department.)*

சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணு 12.

(தபாற்செலவுட்பட.)

## சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் போஷகர்கள்.

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கண்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர், கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்.
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, எஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷிகர், மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, சி. வெங்குபிள்ளையவர்கள்
ரிடைர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. முத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி, சென்னை.

,, ஆர். காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர், சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடைர்ட் சப் இன்ஜினீர், தங்கசாலைவீதி.

,, ராய் பஹதூர், சீவரம், சுப்பராயமுதலியாரவர்கள்.

---

வடமொழிச் சிவஞானபோத முதற்சூத்திர வியாக்கியானம் வெளிவந்துவிட்டது. ... ... ... ரூபா—க.

---

## காகிதப்பஞ்சம்.

இப்போது நடக்கும் பெரியயுத்தத்தினல் உலகெங்கும் காகிதப் பஞ்சம் உண்டாய்விட்டது. பல பத்திரிகைகள் நடைபெறு தொழிந்தன. அவ்வாறிருந்தும் சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர், ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந்நாளும் அவ்வா றூற்றுப்பெருக்கால் உலகூட்டுதல் போல், இதற்கு முன்வருடத்தைப்போல் ஒரே மாதிரியான உயர்ந்த காகிதத்தில் இப்பத்திரிகையை வெளியிட இயலாவிட்டாலும், ஆனமுத லில் அதிகஞ் செலவாகாதிருத்தலையும், பத்திரிகையை நிரந்தரமாய் நடைபெறுவித்தலையும், காலந்தவறாது பத்திரிகையை மாதந்தோறும் முதல்வாரத்திலேயே வெளியிடுதலையும் தாங்கள் நியமமாகக்கொண்டு, அவ்வப்போது கிடைக்கக்கூடிய காகிதங்களை எவ்வளவு விலையாயினும் கொடுத்து வாங்கியச்சிடுகிறார்கள். இதனால் இவ்வருடத்துப் பத்திரி கையின் காகிதங்கள் பலதிறத்தனவாயிருக்கின்றன. அடுத்த வருட முதல் இக்குறைவு நேரிடாதபடி ஒருவருடத்திற்குவேண்டிய காகித த்தை யொத்தமாய் வாங்கிவைத்துக்கொள்ளவும், இதற்கென அச்சுக் கூடம் வைத்துக்கொள்ளவும் உத்தேசித்திருப்பதனால் சந்தாதாரர்களா கிய கனவான்கள் இச்சபையாருடன் ஒத்து உழைக்கவும் இயன்ற உதவி களைச் செய்யவும் பிரார்த்திக்கின்றோம்.

பத்திராதிபர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நளஞு ஐப்பசிமீ –1916ஞு அக்டோபர்மீ || [இதழ் 10

## தேவாரம்.

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வித் தொழிற்படேத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடனுகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சிவாய வென்னு மஞ்செழுத்துஞ்
சாமன் றுரைக்கத் தருதிகண்டா யெங்கள் சங்கரனே.

---

## சிவஞானபோதம்.

(138–வது பக்கத்தொடர்ச்சி.)

*இனி முதற்சூத்திரத்தின் மூன்றும் அதிகாரணத்தை விளக்குவாம்.*

**முதற்சூத்திரம்—மூன்றும் அதிகாரணம்.**

"அந்தமாதி"

*(இ–ள்.) சங்காரத்தொழில் செய்யுங்கடவுளே முதற்கடவுள் (எ–று.)*

*இவ்வதிகாரணத்தில் தன்னுற் கூறப்படும் பொருள்முதலிய ஐந்தும் வருமாறு:—*

*க–வது—தன்னுற்கூறப்படும்பொருள்—சங்காரகாரணனே முதற் கடவுளாகலான் மற்றிருவரும் முத்தொழிற்படுவர்.*

*உ–வது—ஐயப்பாடு—முதற்கடவுள் ஏகனே? அனேகனே?*

*ந–வது—பிறர் கூறும் பக்கம்—சங்காரகர்த்தா உலகிற்கு முதற் கடவுள் என்பது உண்மையாயினும் தேர்முதலாயின பலர்கூடிச் செய் வதனுல், அவைகளைப் பார்க்கினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு*

மற்றும் அத்தன்மையரான முதற்கடவுளர் பலர் உண்டெனக் கொள்ளல் வேண்டும். (இது அநேகேசுரவாதிகள் பக்ஷம்.)

௪-வது.—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.

தேர்முதலாயின பலராற்செய்யப்படினும், அவரனைவரும் ஒருவன் ஏவல் வழிநின்றே செய்பவராகலானும், வேதத்தில் ஒவ்வோரிடங்களிற் காணப்படும் "நாராயணர் ஒருவரேயிருந்தார்," "பிரமாமுதற்கண்ணே இருந்தார்," "இந்திரனே உன்னில் மிக்கவனில்லை," "தேவர்களுக்கெல்லாம் முதன்மையாயுள்ளவன் அக்கினி." "இறந்ததும் நிகழ்வதுமாகிய உலகத்திற்கு ஆன்மாவாயுள்ளான் சூரியன்" என்பனவாதியாய வாக்கியங்களில் நாராயணன் முதலியோரைக் காரணமென்றது, ஒருவன் ஏவல் வழி நின்றுசெய்யும் குயவன் கம்மியன் முதலியோரைப்போல் அவாந்தரகாரணமாதல்பற்றியே யாகலான்; அவையெல்லாம் (அரசனாற் கட்டிய கோயிலைச் சிற்பியாற்கட்டிய கோயில் என்பதுபோல்) ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்குமாதலானும், செய்தும் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கும் முதற்கடவுள் சங்காரகர்த்தாவொருவனே.

௫-வது—இயைபு.

உதாரண வெண்பா.

ஒன்றலா வொன்றா லுளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு. (௬)

(இ-ள்.) அவை=அச் சேதனப் பிரபஞ்சத் தொகுதி—ஒன்று அலா ஒன்றால்=(உருவும் அருவும் என்னும் இருவகைப் பிரபஞ்சத்துள்) ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே—உளது ஆகி=சிருட்டிக்கப்பட்டு—நின்றவாறு=திதிப்பட்டவாறே—ஒன்று அலா ஒன்றில்=அந்தப் பரம் பொருளின்கண்ணே—ஈறுதல்=ஒடுங்குதலால்—ஒன்று அலா ஈறே முதல்=அச்சங்காரக்கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள்.—(ஆனால், முத்தியடைந்த ஆன்மாக்கள் சுட்டுணர்வின்றிச் சிவத்தோடு சமமாயிருக்கும் என்று வேதாகமங்கள் கூறுவதனால் அவைகளும் முதற்கடவுளராகாவோ வெனில்) அதனின்=அப்பரம்பொருளைப்போலவே—ஈறிலா ஒன்று=அழிவின்றி நித்தமாயிருக்கும் சேதனப் பிரபஞ்சமானது (அதாவது உயிர்களானவை)—அங்கு=வீடுபேற்றின் கண்ணும் (அதாவது முத்தியிலும்)—பலவாறே தொழும்பு ஆகும்=பல வழியாலும் பரம் பொருளுக்கு அடிமையாம் (முதற்கடவுளாகாது.) (எ-று.)

மாயையின் காரியமாகிய அசேதனப் பிரபஞ்சம் சடமாகையாலும், சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்கள் பாசத்தாற் பிணிப்புண்டு சுட்டியுணர் வதாயிருத்தலாலும், இவ்விருவகைப் பிரபஞ்சமாகிய உலகம் தானே தன் இச்சையின்படி தோன்றிநின் றழியமாட்டாது. ஆதலால், இவை களைத் தோற்றி நிறுத்தியழித்தற்கு இவைகளுக்கு வேறாய் ஒரு முதற் கடவுளுண்டென்பது பெறப்பட்டது. படவே, உலகம் விசித்திரமாய்க் காணப்படுதலினால், இவ்வாறு நடத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும், அளவிலாற்றலும், பேரருளும், சுதந்திரமும் முதலிய நிரதிசயகுணங்க ளுடையவன் என்பதும் பெறப்பட்டது. இத்தன்மையனாகிய கடவுள் ஒருவனே போதுமாயிருக்க பலர் உண்டெனக் கொள்வது குற்றமாம். "இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவா தல்செல்லாது." அஃதாவது, ஒருசிறிதும் வேற்றுமையின்றி எல்லா விலக் கணங்களினாலும் தம்முள் ஒத்திருக்கும் வெவ்வேறு பொருள்கள் ஒரு காலத்தும் இரா. ஆதலால் உயர்வொப்பில்லாத முற்றுணர்வு, அளவி லாற்றலுடைமைமுதலிய இறைமைக்குணங்களையுடைய கடவுளர் பலர் உண்டெனக்கொள்வது மடமையாகும். இக்கருத்தை விளக்கும் பொரு ட்டே முதற்கடவுளை "ஒன்றலா வொன்று" என்று கூறியருளினர்.

இருள்நீங்கியவிடத்தும் கண்ணானது சூரியனின்றிக் காணாதவாறு போல, மலம்நீங்கிய முத்திநிலையிலும் ஆன்மாவானது தன்னுடன் முதல் வன் வேறறக் கலந்து அறிவித்தாலன்றி யறியாது. ஆன்மாவானது எக்காலத்தும் ஸ்படிகம்போல் சார்ந்ததன் வண்ணமாயிருக்கும் இயல் பினதாதலால், அதுமுத்தியிலும் சிவத்தைப்போல் தனித்துநிற்கும் இயல்புடையதன்று. அது முத்தியில் சிவத்தோடுகலந்து சிவாநந்தம் அநுபவித்தல் மாத்திரமன்றி, சிவத்தைப்போல் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் உரிமையுடையதன்று. அன்றியும், ஆன்மா முத்திநிலையில் சிவத்தோடு சமவியாபகமடையப்பெறினும், விளக்கொளியுள் அடங் கிய கண்ணொளிபோல், சிவவியாபகத்திற்குள் வியாப்பியமாய் அடங்கி நிற்கும். இக்காரணங்களால் சேதனப்பிரபஞ்சம் பலவழியாலும் முத்தி யிலும் முதல்வனுக்கு அடிமையேயாம் என்றுணர்க. (இதனால் ஆன் மாக்கள் முத்தியில் பஞ்சகிருத்தியஞ்செய்யும் என்றுகூறும் சிவசமவாதி கள் மறுக்கப்பட்டவாறு காண்க.)

ஆன்மாக்கள் பெத்தநிலையில் மாத்திரமன்றி முத்திநிலையிலும் அடி மைகளென்பதை "நற்சங்க வெண்குழையோர் காதிற் கோமாற்கே நா மென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே" "மீளாவடிமை யுமக்கே யாளாய்ப் பிறரைவேண்டாதே" என்னும் தமிழ் வேதப்பனுவல்களாலும் உணரலாகும்.

## முதற்சூத்திரத்தின்தொகைப்பொருள்.

இதனால் "உலகம் தோன்றிநின்று அழியுமென்பது காட்சிப் பிரமாணமுதலியவற்றால் அறியக்கூடாமையால் அது நித்தப்பொருளே" என்னும் மீமாஞ்சகர் உலோகாயதர்கள் கொள்கையையும், "உலகம் உள்பொருளாகாமல் இல்பொருளாய்த் தத்தஞ்சார்பிலே தோன்றி யழியும்" என்னும் புத்தர்கொள்கையையும், "உலகம் உள்பொருளாயின் அது வொன்றேயமையும்; இறைவன்வேண்டா" என்னும் சாங்கியர் கொள்கையையும், "காத்தற் றொழிலைச்செய்யும் விஷ்ணுவே முதற்கடவுளாதல்வேண்டும்" என்னும் பாஞ்சராத்திரர் கொள்கையையும், "அதிவிசித்திரமாகிய உலகம் ஒருவராற்செய்தல் கூடாமையால், அதைப் படைக்கப் பலகடவுளர்வேண்டும்" என்னும் அநேகேசுரவாதிகள்கொள்கையையும், "ஆன்மாக்கள் மலம் நீங்கிய முத்திநிலையில் பஞ்சகிருத்தியஞ் செய்வர்" என்னுஞ் சிவசமவாதிகள் கொள்கையையும் மறுத்துச் சித்தாந்தஞ்செய்து முதற்கடவுளின் உண்மை நிலைநாட்டப்பட்டது.

---

## சிவகீதை *

### பிண்டோற்பத்திகதனம்.

(கீழ்வருவன வடமொழிச்சுலோகங்களின் மொழிபெயர்ப்பு.)

### ஸ்ரீராமர் சிவபெருமானைநோக்கிக்கேட்டது.

பாஞ்சபௌதிகமாகிய ஸ்தூலதேஹத்திற்கு உற்பத்தி, ஸ்திதி, ஒடுக்கம், தேகத்தில் ஸ்வரூபம் இவை எப்படி? ஓ பகவானே நீர் சொல்லத்தக்கவராயுள்ளவர்.

---

* இந்நூல் சைவாபிமான மேலீட்டினால், பெருஞ்செலவிட்டும் பெருமுயற்சி செய்தும், சென்னப்பட்டணம், இருளப்பன் வீதி 36-வது எண்ணுள்ள வீட்டிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ, கா. ஜம்புலிங்கமுதலியாரவர்களால் வடமொழிவல்லுநரைக்கொண்டு, வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, வடமொழிச் சுலோகங்களோடும், வியாக்கியானங்களோடும், அச்சிடப்பட்டுள்ளது. இதில் சைவசமயிகளேயன்றிப் பிறரும் அத்தியாவசியமாயறிந்துகொள்ளவேண்டும் விஷயங்கள் பலவும் பொதிந்துகிடக்கின்றன. இதின் விலை ரூபா இரண்டு. வேண்டுவோர் மேற்படி முதலியாரிடம் பெற்றுக்கொள்க,

ஸ்ரீபகவான்கூறியதாவது—

பாஞ்சபௌதிகமாகிய இத்தேஹமானது பஞ்சபூதங்களால் உண்டாகியது. இச்சரீரத்தில் உள்ள பூதங்களுள் பிருதிவியே முக்கியம். இதர பூதங்களுக்கு அமுக்கியத்துவமேயுள்ளது.

பாஞ்சபௌதிகமாகிய இப்பார்த்திவ தேஹமானது கருப்பையில் நின்றுண்டாவது, முட்டையில் நின்றுண்டாவது, புழுக்கத்தில் நின்றுண்டாவது, மேலே பேதித்துக்கொண்டு விதையில்நின்றுண்டாவது என்று இவ்விதம் நான்குவிதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது.

மனம் எண்ணுகிறபடி உண்டாவதாய் மற்ருேர் சரீரம் உள்ளதென்று சொல்லப்பட்டது. அது தேவர்களுக்கே கருதப்பட்டது. அங்கு முக்கியமாயிருத்தலால் ஜராயுஜத்தையே முதலில் சொல்லுகின்றேன்.

சுக்லசோணிதங்களால் ஏற்பட்ட நிலைமையுடையதே ஜராயுஜம் எனப்படும். ருதுகாலத்தில் எப்போது ஸ்திரீகளின் கர்ப்பகோசத்தில் சுக்கிலம் பிரவேசிக்கின்றதோ,

ஸ்த்ரீயின் சோணிதத்தோடு கலந்ததாய்க்கொண்டு அச்சுக்லமே ஜராயுஜமாகின்றது. சோணிதம் விசேஷமாயிருந்தால் பெண்ணும், சுக்லம் விசேஷமாயிருந்தால் ஆணும் உண்டாகும்.

சுக்லசோணிதங்கள் சமமாயிருக்கின் ஆணும் பெண்ணுமற்றவனாய்த் தோன்றுகின்ருன். ஸ்திரீ நான்காம்தினத்தில் ருது நீங்கிச் சுத்தையாவாள். பிறகு பதினாறுநாள்வரையில் ருதுகாலம் என்பது குறிக்கப்பட்டது.

ஆண்டு ஒற்றைப்படைதினத்தில் பெண்ணும், இரட்டைப்படை தினத்தில் ஆணும் தோன்றும். அழகுவாய்ந்த மங்கைக்குப் பதினாறுவது தினத்தில் கர்ப்பம் ஏற்படுமாயின் அந்தப்பிரஜை சக்கிரவர்த்தியாகவோ அல்லது அரசனாகவோ பிறக்கின்ருன்.

ருதுநீங்கி ஸ்நாநம் செய்ததும் மங்கை எந்தப்புருஷனது முகத்தை விருப்புற்று நோக்குகின்ருளோ, அந்தப்புருஷனது உருப்போன்ற உருக்கொண்டதாய் கர்ப்பம் ஏற்படும். ஆதலால், அவள் தனதுகணவனது முகத்தையே பார்க்கவேண்டும்.

ஸ்த்ரீயின் தோலுருவமாகிய பையானது சிறிதாய் யாதொன்றுளதோ அது ஜராயு என்று சொல்லப்படுகின்றது. யாதொருகாரணத்தால் அதிலேயே சுக்லசோணிதங்களின் ஸம்பந்தம் ஏற்படுகின்றதோ,

அங்கு கர்ப்பம் உண்டாகின்றமையால் ஜராயுஜமென்று சொல்லப் பட்டது. அண்டஜங்கள் பறவை பாம்பு முதலியன. ஸ்வேதஜங்கள் கொசுகு முதலியன.

உத்பிஜ்ஜங்கள் மரம் செடி கொடி முதலியன. மனதிற்றோன்றிய வண்ணம் எடுக்கும் உருவமுடையதேகம் தேவரிஷிகள். ஸ்திரீகளின் யோநிவாயில் சென்ற சுக்லமானது ஜன்மகர்ம்பலத்தால் சோணிதத் தோடுகூடிக் கலந்ததாகின்றது. அந்தத்ரவமானது முதலாவது மாசத்தில்,

நீர்க்குமிழிபோலாய் பின்னர் சற்று இறுகியதாய் பிறகு கருப்பை போன்ற வட்டமதாய் ஆகும். இரண்டாவது மாதத்தில் அந்தப் பை வடிவம் சற்றுக்கட்டிப்பட்டதாய்க் கொண்டு அந்த இறுகிய த்ரவமானது பிண்டமாகின்றது.

கை கால் தலைமுதலியன மூன்றும்மாதத்தில் உண்டாகின்றன. நான்காம் மாதத்தில் ஜீவனுக்கு (அபிவ்யக்தி) தோற்றமேற்படுகின்றது.

அதற்குப்பிறகு அன்னையின் வயிற்றினில் கர்ப்பம் தானே சலிக்கின்றது. புத்திரனாயின் வலது பக்கத்திலும் புத்திரியாயின் இடதுபக்கத்திலும் இருக்கின்றது. நபும்ஸகனாயின் வயிற்றின் நடுப்பக்கத்தில் இருக்கின்றது.

ஆதலால் புத்திரனாயிருந்தால் கர்ப்பிணி வலப்பக்கம்கீழாய்ப் படுக்கின்றனள். அப்போது பிறந்த பிறகுண்டாகக்கூடிய மீசை பல்முதலியவை நீங்கலாகிய மற்ற அங்கப்பிரத்யங்கங்களும் ஏககாலத்தில் ஸூக்ஷ்மங்களாயுண்டாகும். அத்தன்மைகள் நாலாமாதத்தில் வியக்தமாய்த் தோன்றுகின்றன.

ஓ ராமா, புருஷர்களுக்கு நிச்சலமாயிருத்தல்முதலிய தன்மைகளும் ஸ்திரீகளுக்கு சலனமுறுதல் முதலிய தர்மங்களும் அலியினிடம் அவ்விருதன்மைகளும் கலந்தனவாயும் இருக்கின்றன.

கர்ப்பத்திலுள்ள பிராஜையினது ஹ்ருதயமானது அன்னையின் ஹ்ருதயத்தாலுண்டாவதாய்க் கொண்டு, விஷயங்களை விரும்புகின்றது. ஆதலால் கர்ப்பவிருத்தியின்பொருட்டு கர்ப்பிணியின் மனத்திருப்தியைச் செய்யவேண்டும்.

ஆதலால், கர்ப்பிணியாகிய இருதயமுள்ள அம்மங்கையை தௌஹ்ருதிநீ என்று சொல்லுகின்றனர். கர்ப்பிணிவிரும்பிய அன்னபானாதிகளைத் தராவிடில் கர்ப்பத்திற்கு அங்கஹீனத்துவமுதலியன ஏற்படும்.

அன்னைக்கு எவ்விஷயத்தில் விருப்பமுள்ளதோ அவ்விஷயம் புதல்வனாலும் விரும்பப்படுவதாம். ஐந்தாம் மாதத்தில் மனம் நன்றாயறியக் கூடியயோக்கியதை யுடையதாம். மாம்ஸரத்தம் இவைகளும் புஷ்டியடையும்.

ஆறும்மாதத்தில் எலும்பு நகம் கேசரோமங்கள் தோன்றும். பலவர்ணங்களும் விருத்தியடையும். ஏழாம்மாதத்தில் அங்கங்கள் பரிபூர்த்தியாகும்.

அந்தக் கர்ப்பசிசுவானது கால்களுக்கிடையில்சென்ற கைகளால் காதோட்டைகளை மூடிக்கொண்டு கர்ப்பவாசத்தினால் மிக்க கிலேசமுற்றதாய்க் கொண்டு கர்ப்பவாஸ பயத்தினால் பீடிக்கப்பட்டதாய்க் கொண்டிருக்கின்றது.

அந்தச் சிசுவானது தோன்றிய நிஜஸ்வரூபத்தையுடையதாய் கர்ப்பதுக்கானுபவத்தோடு கூடியதாய்க் கொண்டு வைராக்கியமுடையதாய் அந்தோ கஷ்டமென்று தன்னைக்குறித்து மிக்கசோகமடைகின்றது.

மர்மங்களைச் சேதிப்பனவாகிய துன்பங்களையுடைய மிகவும் ஸகிக்கக்கூடாதனவாகிய எண்ணிறந்ததேஹங்களைப் பெற்று எவ்வளவோ துன்புற்றனம். வறுத்தமாவைப்போலுள்ள வறுக்கப்பட்ட மணல்களில் வறுக்கப்பட்டு மஹா துன்பத்தோடு தஹிக்கப்பெற்றனம்.

கர்ப்பகோசத்திலகப்பட்டுக் கொண்டவனாகிய என்னை ஜடாக்கினியால் கொதிக்கப்பெற்ற பித்தநீர்த்துளிகள் மிகவும் கடுமையாய்த் தஹிக்கின்றன.

விலாப்பக்கத்திலுள்ள ரம்பம்போன்ற எலும்புகளால் தொந்தரையடைந்தவனாகிய என்னை முள்ளிலவின் முள்ளுகளுக்கு நிகராயுள்ள வயிற்றுப்புழுக்களின் முகங்களும் ஹிம்ஸிக்கின்றன.

ஜடாக்கினியால் கொளுத்தப்பெற்றதும், கெட்டநாற்ற நிறைந்ததுமாகிய கர்ப்பத்தில் என்னால் எந்தத்துன்பம் அனுபவிக்கப்பட்டுளதோ அத்துன்பத்திலும் கும்பீபாகமெனும் நரகத்திலனுபவிக்கும் துன்பம் அற்பமேயாம்.

சீழ் ரத்தம் கபம் இவைகளைக் குடித்தல், வாந்தத்தைப் புசித்தல், மலத்தில் புழுப்போலாதல் ஆகிய இவைகளும் கர்ப்பவாஸம் செய்யும் என்னால் அனுபவிக்கப்பட்டுளது.

கர்ப்பகோசத்தையடைந்து என்னால் எத்தகைய துக்கம் அனுபவிக்கப்பட்டதோ அதனை ஸகல நரகங்களிலுமுள்ள பெருந்துக்கமும் மீறுகின்றதில்லை.

இவ்வாறு பூர்வம் அடையப்பட்ட ஜன்மங்களையும் துன்பங்களையும் நினைத்துக்கொண்டு மோக்ஷோபாயத்தைச் சிந்தித்துக்கொண்டு அப்பியாஸதத்பரனாய் இருக்கிறான்.

எட்டாமாதத்தில் தோலும் சலனமும் உண்டாகின்றது. இருதய கமலத்திலுண்டாகின்றதும், ஜிவதாரண ஏதுவும், வெண்ணிறமும், கொஞ்சம் மஞ்சள்கலந்த செந்நிறம் பெற்றதுமாகிய ஓஜஃ தேஜஃ எனும் தாது பரிணாமங்களும் ஏற்படுகின்றன.

கர்ப்பமானது சலிக்கின்றதாயினும் மீண்டும் அன்னையின் வயிற்றிலேயே இருக்கவேண்டியதவசியமாதலால் அவ்வாறு இருந்துகொண்டு விசேஷமாய்ச் சலிக்கின்றது. ஆதலால் எட்டாமாதத்தில் பிறந்தசிசு ஓஜஸ் என்பதாக பூர்வம் சொல்லப்பட்ட தாதுபரிணாமமில்லாததாய்க் கொண்டு ஜீவிக்கின்றதில்லை.

பீடையடைந்த தேஹமுடையவன்போல, அதன் அப்பியாஸவிசேஷத்தால் கொஞ்சகாலம் இருத்தல் ஏற்படுகின்றது. பிறகு ஒன்பதாவது முதலியமாதங்களில் பிரசவ சமயம் ஏற்படும்.

அன்னையின் ரக்தத்தை வஹிக்கின்றதாகிய நாடியைப்பற்றிக்கொண்டு, ஏற்பட்டுள்ள தொப்புளிலுள்ள நாடியானது கர்ப்பத்திற்கு அன்னையின் அன்னரசத்தைச் சேர்ப்பிக்கின்றதாயுள்ளது.

கர்ப்பசிசுவானது அந்தத்தொப்புள் நாடியால் அன்னையின் ஆகாரத்தினால் போஷிக்கப்பட்டதாய்க் கொண்டு ஜீவிக்கின்றது. எலும்பினால் சூழப்பட்டுள்ள கர்ப்பகோசத்தில் நெருக்குள்ளவனும் மேதஸ்ருதிரம் இவைகளால் பூசப்பெற்றவனுமாய் யோனிவழிவந்து கீழ்முகமுடையவனாய் மிகவும் துக்கத்தால் நொந்தவனுமாய் உரக்கக் கத்திக்கொண்டு வெளிப்படுகின்றான். இவ்விதம் கர்ப்பகோசத்திலிருந்து வெளிப்பட்டவனாய்க்கொண்டு மடிமீது வைக்கக்கூடியவனாய் விழுகின்றான்.

அப்போது யாதும்செய்ய இயலாதவனாய் மாம்ஸ பிண்டம் போன்றவனாய்த் தண்டத்தைக் கையிலுடையவர்களாகிய ஜனங்களால் நாய் பூனை முதலியவைகளால் கேடுவராதிருப்பதற்காகக் காக்கப்படுகின்றான். ராக்ஷஸனை தகப்பன்போலும் டாகினீதேவதையை தாய்போலும் எண்ணுகின்றான்.

(இன்னும் வரும்.)

# சைவசுராச்சியம்.

உலகத்தில் ஒருதேசத்தைப் பரிபாலித்தற்கு எப்படி அரசாங்கம் அவசியமோ, அப்படியே ஒரு சமயத்தைப் பரிபாலித்தற்கும் அரசாங்கம் அவசியமாம். அரசனில்லாததேசம் அழிவதுபோல் அரசனில்லாத சமயமும் அழியும். ஆதலால், ஒவ்வொரு தேசத்தாரும் தங்கள் தேச பரிபாலனத்தினிமித்தம் அரசாங்கம் உண்டாக்கிக் கொள்வதுபோல், ஒவ்வொருசமயத்தாரும் தங்கள் சமயபரிபாலனத்தினிமித்தம் அரசாங்கம் உண்டாக்கிக்கொள்ளல்வேண்டும். சிலர் தேச வாசாட்சியில் சமய வாசாட்சியும் அடங்கிநிற்றலால் தேசத்தை யரசுபுரியும் மன்னவனே சமயத்தைப் பரிபாலித்தற்கும் உரியவன் என்று எண்ணுகிறார்கள். இப்படி எண்ணுவது தவறு. அரசன் எச்சமயச் சார்புடையவனோ அச்சமயத்தை மாத்திரம் அவன் பரிபாலிப்பனேயன்றி, தன் தேசத்திலுள்ள ஒவ்வொரு சமயத்தையும் பரிபாலிக்கமாட்டான். அன்றியும், அவனாற் செய்யப்படும் தேசபரிபாலனமும் சமயபரிபாலனமும் குடிகளின் உதவியின்றிச் செய்யப்படுதலில்லை. குடிகளின் உதவியைக்கொண்டே அரசன் தேசத்தையும் சமயத்தையும் பரிபாலிப்பான். குடிகளின் உதவியின்றி அரசன்மாத்திரம் நடத்தும் இராச்சியபரிபாலனம ஒருபோதும் சிறக்காது. ஆதலால் தேசபரிபாலனத்தைப்போலவே சமயபரிபாலனமும் அரசனைமாத்திரம் பொறுத்ததாயிராமல் குடிகளையும் பொறுத்ததாயிருக்கிறது. அரசனாற் செய்யப்படும் பரிபாலனம் செம்மையாயிராவிடில், அவனைத்திருத்துவதும் குடிகளின் கடமையாயிருக்கிறது. முற்காலத்தில் அரசர்கள் சுயாதீனம் பெற்றுத் தங்கள் இச்சையின்படி அரசுபுரியும் இராச்சியங்களே உலகில் அதிகரித்திருந்தன. இப்போது குடிகள் தங்களுக்கு இராச்சிய பரிபாலனத்திலுள்ள சுதந்திரத்தையுணர்ந்தவர்களாய், அரசனை அவன் இஷ்டப்படியெல்லாம் அரசுபுரிய விடாமல் தங்கள் அபிப்பிராயப்படி அரசாளச் செய்கிறார்கள். இப்போது "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என்று வழங்கிய பழமொழியானது "மன்னுயிரெப்படி மன்னவனப்படி" என்று மாறி வழங்கக்கூடியதாயிருக்கிறது. இப்போது பலவிடங்களிலும் உண்டாயிருக்கும் சுராச்சிய பரிபாலனங்களே இதற்குச் சான்றும்.

இத்தேசத்திலும் சிலகாலமாக சுயவாசாட்சியில் விருப்பம் அதிகரித்து வருகின்றது. ஆனால் சனங்கள் தங்களுக்குக் கிடைத்தற்கரிதாகிய தேச சுராச்சியத்தை விரும்பித் தலையை யுடைத்துக்கொள்ளுகிறார்களேயன்றி, மிகவும் எளிதாகிய சமய சுராச்சியம் வைத்து அரசுபுரிய முயல்வதில்லை. தேச சுராச்சியம் மிகவும் வியாபகமுடையது. சமய சுராச்சியம்

தேச சுராச்சியத்தில் வியாப்பியமாய் அடங்கிநிற்பது. குடிகள் சமயம், கைத்தொழில், வர்த்தகம், கல்விமுதலிய துறைகளில் அரசாங்கத்தை எதிர்பாராமல் தங்களுக்குத் தாங்களே எம்மட்டில் சுராச்சியம் உண்டாக்கி நடத்தலாமோ, அம்மட்டில் நடத்தி அபிவிருத்தியடையப்பெற்றால் அவ்வபிவிருத்தி தானே தேச சுராச்சியத்தைத் தந்துவிடும். இதற்கு ஐரோப்பியர்கள் பலதுறைகளிலும் வைத்து நடத்தும் அரசாட்சிகளே நிதர்சனமாம். கிறிஸ்து சமயபரிபாலனம் செய்யும் அரசாங்கங்கள் உலகெங்கும் இருந்தும் அவைகளை எதிர்பாராமலே போப் என்னும் தலைவரை வைத்துக்கொண்டு ரோமன் கத்தோலிக் கிறிஸ்தவர்கள் உலகமெங்கும் சமயவரசாட்சிசெலுத்திவருவதும் இதற்குப் பெருஞ்சான்றும்.

இவ்வாறு ஐரோப்பியர்கள் அரசாங்கத்தையும் எதிர்பாராமல் தாங்களே சமயவரசாட்சி செய்வதை நம்மவர்கள் அவர்களோடு நெடுங்காலமாகப் பழகிப்பார்த்துக்கொண்டிருந்தும் "நறுநெய்நிறை புழுக்கலுய்க்கினும் மூழைபெறுமோ சுவையுணருமாறு" என்பதற்கிணங்க உணர்ச்சியின்றிச் சமயபரிபாலனத்தைக் கைவிட்டிருப்பது, அந்தோ எவ்வளவு பேதமைத்து.!

பிரிட்டிஷ் அரசாட்சியின் கீழிருந்துகொண்டு நாம் நமது சமயபரிபாலனத்திற்கெனத் தனி அரசாங்கம் உண்டாக்கிக்கொள்வது இராஜநீதிக்கு விரோதமாயிருக்குமென்று நம்மவர்கள் சிலர் எண்ணுவார்கள். இப்படி எண்ணுவது முற்றிலும் தவறு. நமது காருணியமுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் குடிகள் தங்கள் சமயங்களைத் தாராள்மாய்ப் பரிபாலனஞ்செய்யலாம். பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு இராஜதானியாயிருக்கும் லண்டன் மாநகரத்திலும் நாம் நமது சைவமதஸ்தாபனஞ் செய்யலாம். ஆதலால் நாம் நமது சமய சம்பந்தமான சுயவரசாட்சிபுரிவது ஒருபோதும் இராஜநீதிக்கு விரோதமாகாது. நாம் சைவ அரசாட்சி செய்வதற்குக் கத்திவேண்டாம். கட்டாரிவேண்டாம். துப்பாக்கிவேண்டாம். பீரங்கிவேண்டாம். வீரர்வேண்டாம். சூரர்வேண்டாம். அறிவுந்திருவுமிருந்தாற்போதும். சைவசமயத்தின் ஏற்றத்தையும் அதின் தற்காலநிலைமையையும், அதைப்பரிபாலிக்கும் முறைமையையும் அறியும் அறிவும், செல்வமும் உடையவர்கள் முற்பட்டுவருவரேல் இன்றைக்கே நமக்குச் சைவசுராச்சியம் உண்டாய்விடும். நம்மவர்களுள் பெரும்பாலும் அறிவுள்ளவரிடத்தில் திருவும் திருவுள்ளவரிடத்தில் அறிவுங் குறைந்திருப்பதனால் இதுவரையில் சைவ சுராச்சியம் உண்டாகவில்லை. சைவசமயிகளிடத்தில் உள்ள செல்வம் பெரும்பாலும்

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

என்னுந் திருக்குறளின்படி வீணிலும் தீயவழிகளிலுமே செலவாகின்றன. சைவசுராச்சியத்தை நிலைநாட்டுவதற்குப் பலர் வேண்டாம். முதலில் அறிவும்திருவுமுடையார் இரண்டொருவர் முற்பட்டுவரினும் போதும். இப்போது உலகத்திலுள்ள மிகப்பெரிய இராச்சியங்களெல்லாம் ஆதியில் ஒவ்வொருவராலேயே தோன்றின. உலகெங்கும் பரவியிருக்குஞ் சமயங்களும் ஆதியில் ஒவ்வொருவராலேயே உண்டாக்கப்பட்டன. ஆதலால் சைவசமயிகளுக்குள்ளே அறிவாளியும் பொருளாளியுமாயுள்ள கொடையாளி ஒருவர் முற்பட்டு வருவரேல் நாம் இன்றைக்கே சைவ சுராச்சியம் ஏற்படுத்திக்கொண்டு, உலகெங்கும் சைவசமய பரிபாலனம் பண்ணலாம். 'கிறிஸ்தவர்களிடம் ஏராளமான செல்வமிருப்பதனால் அவர்கள் உலகெங்கும் கிறிஸ்து அரசாட்சிசெய்கிறார்களெனவும், நம்மவர்களிடத்தில் அவ்வளவு பொருளில்லாமையால் நாம் அவ்வாறுசெய்ய இயலாது என்றும் நினைக்கலாகாது. இப்போது உலகத்திலிருக்கும் மிகப்பெரிய இராச்சியங்கள் ஆரம்பத்திலேயே இவ்வளவு பெரியனவாயில்லை. முதற்கண் சிறியனவாகவேயிருந்தன. பிறகு நாளடைவில் அபிவிருத்தியெய்தின. நிலத்திலிட்ட வித்து முளைக்கும்போதே மரமாயிராது. சிறிது சிறிதாகவே வளர்ந்து பெரியமரமாகும். ஆதலால் நாம் முதலில் நமது சத்தியளவில் சுராச்சியம் அமைத்துச் சமயபரிபாலனம் பண்ணினால் பிறகு அது நம்மவர்களின் முயற்சி அளவாக நாளுக்கு நாள் அபிவிருத்தியடையும்.

(இன்னும் வரும்.)

---

## சோமவார விரதம்.

நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்கள் ஓர்காலத்துத் தம்மிடத்திற் கெழுந்தருளிய முனிசிரேஷ்டராகிய கௌதமருக்கு சோடசவுபசாரங்களைச்செய்து, சுவாமீ! அடியேங்கட்கு அனுக்கிரகஞ்செய்யவேண்டியதொன்றுளது, அது உலகத்தில் நடந்துவருகிற சோமவாரவிரத

மென்பதே யென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அம்முனிசிரேட்டர், ஓ முனிவர்களே, கேளுங்கள் பூர்வத்தில் சந்திரனானவன் உமையாசகிதத்வா, சோமஃ என்னுந் திருநாமஸ்வரூபராகிய சிவபெருமானுக்குரிய சோமவாரத்தில் விரதமிருப்பதே தகுதியென்று நியமித்து அதில் விரதாரம்பஞ்செய்து முடிந்தவுடன் சிவபெருமான் அவன்தவத்திற்கிரங்கிப் பிரத்தியட்ச தரிசனந்தந்து, ஓ சந்திரனே, உனக்கு வேண்டிய வரங்கேளெனச் சந்திரன் மஹா சந்தோஷமுடையவனாய்ப் பலவாறு தோத்திரஞ்செய்து, சுவாமீ அடியேன் தேவரீரிடத்தே எப்போதும் வாசமாயிருக்கவும் அதற்குத்தக்க பெயரொன்றை யடையவுந் தேவரீர் அருள்புரியவேண்டுமென்ன, சிவபெருமான் சோமனென்னும் பெயர்தந்து தனது சடையிலச்சோமனைத் தரித்துக்கொண்டனர்.

பின்னரோர்காலத்தில் கைலையங்கிரியில் நவரத்தினகசிதமாகிய ஆசனத்தில் தேவர், கின்னரர், கிம்புருடர், சித்தவித்தியாதரர், இருடிகள் மற்றுமுள்ளோர்களும், தோத்திரஞ்செய்ய வீற்றிருந்த சிவபெருமானவர் தன்சடைமுடியிலிருந்த சந்திரனை யாவருங்கண்டதிசயிக்கத் தோற்றுவித்தருளினர். அப்போது பார்வதியார் இச்சந்திரன் யார்க்குமரியதாகிய உமது முடியை யடைந்துவாழும் பெரும்பேறடைந்த காரணத்தை அடியேனுக் கருளவேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபெருமான் அருள்செய்கின்றனர்.

ஓ பார்வதி, எனக்குரிய சோமவாரவிரதத்தை மஹா பத்தியுடன் விதிப்படிசெய்து முடித்ததனா லடைந்தனனென்றனர். உமாதேவியார் மிகமகிழ்ந்து சுவாமீ அடியேனுக்கு அவ்விரத முறைமையைக் கூறியருளவேண்டுமென்று துதிக்கச் சிவபெருமான் யாவருமுய்யும்பொருட்டு ஓ கௌரீ, சோமவாரதினத்திலிவ் விரதத்தையனுட்டித்துப் பெரும்பேறடைய வெண்ணுவோர் ஆரம்பத்தில் அஷ்டதிக்கிலும் அஷ்டகலசங்களையும், நடுவே பத்மாசனத்தில் பாணலிங்கத்தையும் நிறுத்தி ஆசிரியனைக் கிழக்குமுகமாக இருக்கச்செய்து வில்வம், அறுகு, வெள்ளெருக்கு, வெள்ளைப்பட்டு, வெள்ளையட்சதை, பஞ்சகௌவியம், பஞ்சாமிர்தம், பால், சந்தனம், புனுகு, இளநீர் முதலிய சிவபூசாதிரவியங்களை யருகிருத்தி அபிடேகஞ்செய்து,

ஓம் மகாதேவாய நமః
ஓம் மகேஸ்வராய நமః
ஓம் சங்கராய நமః
ஓம் இடபத்துவசாய நமః
ஓம் சூலபாணியே நமః
ஓம் காமாங்கநாசனுய நமః
ஓம் தேவதேவேசாய நமః
ஓம் ஸ்ரீகண்டாய நமః
ஓம் ஈஸ்வராய நமః
ஓம் பார்வதிப்பிரியாய நமః
ஓம் உருத்திராய நமః
ஓம் சிவாய நமః

என்னும் பன்னிரண்டு மந்திரபுட்பத்தாலருச்சித்து தூபதீப ஆராதனை சோடசோபசாரமு முடித்துப் பன்னிரண்டு பிரதட்சண நமஸ்காரஞ்செய்து ஒருகால் போசனமேனும் உபவாசமேனும் இருப்பதாக நியமித்துக்கொள்ளவேண்டும்.

உத்தமமாகிய உபவாசநியமஞ் செய்வோர் நித்திரையின்றிச் சிவபுராணங்களைக்கேட்டும், படித்தும் இரவைக்கழித்து மறுநாள் காலையில் பாரணைசெய்யவேண்டும். இவ்வாறு க, உ, ந, வருடம் இவ்விரதமனுஷ்டித்து முடிவிலும் இவ்வாறே நடத்திப் பன்னிரண்டு பிராமணர்களைச் சோடசோபசாரஞ்செய்து வணங்கி அர்த்தநாரீச வுருவமைந்த பொற்பிரதிமைக்கு மபிடேகமுதலியவற்றை நடத்தவேண்டும்.

இடைநின்ற சோமவாரங்களின் காலையில் சிவநாமத்தை யுச்சரித்தெழுந்து நதி, ஏரி, குளம், கால்முதலிய விடங்களிற் சென்று சிவபூசையை முடித்துக்கொண்டு வில்லவம் ரு, அருகு கO, வெள்ளையட்சதை கO, இம்மூன்றையுங்கொண்டு பிரதோஷகாலத்திற் சிவாலயத்துட் கிரமப்படி பிரவேசித்து அவ் வில்லவமுதலியவற்றால் அருச்சித்துச் சிவதரிசனஞ் செய்துவந்து உண்டு சிவபுராணங்களைப் படித்துங் கேட்டுந் தனித்துச் சயனிக்கவேண்டும். இவ்வாறு இவ்விரதங் கொள்வோர் வெள்ளை வத்திரத்தையே தரித்துக்கொண்டு சிவசின்னந்தாங்கி சிவசந்நிதானத்துட் பிரவேசித்தல் முறை. இவ்வாறு முற்றும் நடத்த முடியாதாயினும் அந்தந்தவருடங் கார்த்திகைமாதத்திலாவது இச்சோமவாரவிரத மனுஷ்டிப்பவர் பெறுதற்கரிய சாயுச்சியபதவியை யடைவர் என்பதற்குச் சந்தேகமில்லையெனச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினர், என்று சொல்லிக் கௌதமர் விடைபெற்றுச் சென்றனர்.

சைவசித்தாந்தப் பிரசங்கரத்னகரம்,

கா. ஆலாலசுந்தரம்பிள்ளையவர்கள்.

---

## காலப்பிரமாணம்.

நிமிஷம் பதினைந்துகொண்டது ஒருகாஷ்டை. காஷ்டை முப்பது கொண்டது ஒருகலை. கலை முப்பதுகொண்டது ஒரு முகூர்த்தம். முகூர்த்தமென்பது இரண்டுநாழிகை. முகூர்த்தம் முப்பதுகொண்டது பகலும் இரவுங்கூடிய ஒருநாள். நாள் பதினைந்துகொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டுகொண்டது ஒருமாசம். மாசம் ஆறுகொண்டது ஒரு அயனம். அயனம் இரண்டுகொண்டது ஒருவருஷம். இம்மநுஷவருஷம் ஒன்று தேவர்களுக்கு ஒருநாளாம். தேவர்களுக்கு உத்தாராயணம் பகலும், தக்ஷிணாயனம் இராத்திரியுமாயிருக்கும். மனுஷவருஷம் முந்நூற் றறுபதுகொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவவருஷம் பன்னீராயிரங்கொண்டது ஒரு சதுர்யுகமாம்.

| யுகம். | | தேவவருஷம். | மனுஷவருஷம். |
|---|---|---|---|
| கிருதயுகம் | — | ௪௲௮௱ | ௰௭ லக்ஷத்து ௨௮௲ |
| திரேதாயுகம் | — | ௩௲௬௱ | ௰௨ ,, ௯௬௲ |
| துவாபரயுகம் | — | ௨௲௪௱ | ௮ ,, ௬௪௲ |
| கலியுகம் | — | ௲௨௱ | ௪ ,, ௩௨௲ |
| சதுர்யுகம் | — | ௰௨௲ | ௪௩ லக்ஷத்து ௨௰௲ |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரந்திரும்பினால், பிரமாவுக்கு ஒரு பகலாகும்; பின்னும் ஆயிரந்திரும்பினால், பிரமாவுக்கு ஓரிராத்திரியாகும்; ஆகவே இரண்டாயிரஞ் சதுர்யுகங்கொண்டது பிரமாவுக்கு ஒருநாளெனப்படும். இந்தநாள் முப்பதுகொண்டது ஒருமாசம். இந்தமாசம் பன்னிரண்டுகொண்டது ஒருவருஷம். இந்த வருஷம் நூறானால், பிரமாவுக்கு ஆயுசு முடியும். இவ்வியல்புடைய பிரமாக்கள் எண்ணில்லாதவர்கள் பிறந்திறந்தார்கள். பிரமாவினுடைய ஆயுசு பரமெனப் பெயர்பெறும். அதிற் பாதியாகிய ஐம்பது வருஷம் பரார்த்தமென்று சொல்லப்படும்.

பிரமாவினுடைய பகலாகிய ஆயிரஞ்சதுர்யுகத்திலே பதினான்கு மநுக்கள் அதிகாரம் பண்ணுவார்கள். அவர்கள் பெயர் சுவாயம்புவர், சுவாரோசிஷர், ஔத்தமர், தாமசர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, ருத்திரசாவர்ணி, ரோச்சியர், பாவியர் என்பவைகளாம். ஒவ்வொரு மநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகும். எழுபத்தொரு சதுர்

யுகம், தேவமானத்தினாலே எட்டுலக்ஷத் தைம்பத்தீராயிரம் வருஷங்களாம்; மனுஷியமானத்தினாலே முப்பதுகோடியே அறுபத்தேழுலக்ஷத் திருபதினாயிரம் வருஷங்களாம். ஒருமநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகப் பதினான்கு மநுவந்தரத்துக்கும் தொளாயிரத்துத் தொண்ணூற்றுநான்கு சதுர்யுகமாகும். பிரமாவின் பகலிலேமிஞ்சிய சதுர்யுகம் ஆறு.

இப்படிப் பதினான்கு மநுவந்தரங்களானால், பிரமாவுக்கு ஒருபகலாம். இதன்முடிவிலே தினப்பிரளயம் உண்டாகும். அப்பொழுது பிரமா அப்பகலளவினதாகிய இராத்திரியிலே யோகநித்திரை செய்வர். இப்படி ஆயிரஞ் சதுர்யுகவளவையையுடைய இராத்திரி கடந்த பின்பு பிரமாத்திரும்பியும் படைத்தற்றொழில் செய்வர். பிரமாவுக்கு ஒருபகல் ஒருகற்பமெனப்படும். கற்பமாவது சிருட்டிமுதற் பிரளயமிறுதியாகிய காலம். ஒருகற்பத்துக்கு மனுஷவருஷம் நானூற்றுமுப்பத்திரண்டுகோடி.

பிரமாவினுடைய ஒருபகலிலே பதினான்கிந்திரர்கள் இறப்பர்கள். ஒருமாசத்திலே நானூற்றிருபதிந்திரர்கள் இறப்பர்கள். ஒருவருஷத்திலே ஐயாயிரத்து நாற்பதிந்திரர்கள் இறப்பர்கள். பிரமாவுடைய ஆயுளுள்ளே ஐந்துலக்ஷத்து நாற்பதினாயிரம் இந்திரர்கள் இறப்பர்கள்.

தற்காலத்தில் இருக்கின்ற பிரமாவுக்கு முதற்பரார்த்தமாகிய ஐம்பது வயசுஞ் சென்றன. இப்போது நடப்பது இரண்டாம்பரார்த்தத்தில் முதல்வருஷத்து முதன்மாசத்து முதற்றினம். இது சுவேதவாரககற்பமெனப்படும். பிரளயசலத்தில் முழுகியிருந்த பூமியை விஷ்ணு வெள்ளைப்பன்றியுருவங்கொண்டு மேலே எடுத்த கற்பமாதலிற் சுவேதவாரககற்பமெனப்பட்டது. இத்தினத்திலே சுவாயம்புவமநு, சுவாரோசிஷமநு, ஔத்தமமநு, தாமசமநு, ரைவதமநு, சாக்ஷுஷமநு, என்னும் ஆறுமநுக்கள் இறந்துபோனார்கள். இப்போது ஏழாமநுவாகிய வைவஸ்வதமநுவினுடையகாலம் நடக்கின்றது. இவருடைய காலத்திலே இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றன. இப்பொழுது இருபத்தெட்டாஞ் சதுர்யுகத்துக் கலியுகம் நடக்கின்றது.

மாசம் சௌரமாசமும், சாந்திரமாசமுமென இருவகைப்படும். சூரியன் ஒருராசியை அநுபவிக்குங்காலம் சௌரமாசம். ஒரு அமாவாசை கழித்த பிரதமை முதல் மற்றொரு அமாவாசைவரையும் உள்ள முப்பதுதிதிகொண்டகாலம் சாந்திரமாசம். சூரியன் பன்னிரண்டுராசிகளையுஞ் சுற்றிவருங்காலம் சௌரமானவருஷம். அது ஏறக்குறைய முந்நூற்றறுபத்தைந்து தினங்கொண்டது. சந்திரனுடைய சஞ்சாரத்தினால் உண்டாகிய பன்னிரண்டு அமாவாசைகொண்டகாலம் சாந்திர

மானவருஷம். நான்கு வருஷத்துக்கு ஒருதாம் சாந்திரவருஷத்திலே பதின்மூன்று அமாவாசை வரும். அதில் அதிகமாகிய ஒருமாசத்தை அதிகமாசமென்று வழங்குவர். சூரியன் மேடராசியிற் பிரவேசிக்குந் தினமே சௌரவருஷப்பிறப்பு. சூரியன் மீனராசியிற் பிரவேசித்த மாசமாகிய பங்குனிமாசத்துச் சுக்கிலபக்ஷத்துப் பிரதமையே சாந்திர வருஷப்பிறப்பு.

நாவலர் நான்காம்பாலபாடம்.

---

## சிவபெருமான் காலாதீதர்.

தத்துவங்களைக்கடந்த தற்பரம்பொருளாவார் சிவபெருமான் ஒருவரே. ஆதலால் அவரை வேதங்கள் "தத்துவாதீதன்" என்று கூறுகின்றன. பிரம விஷ்ணு உருத்திரர்களாகிய திரிமூர்த்திகளும் காலதத்துவத்திற்குட்பட்டவர்களாகையால் இம்மூவருக்கும் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. ஒரு பிரமன் ஆயுளில் ஐந்துலக்ஷத்து நாற்பதினாயிரம் இந்திரர்கள் இறப்பார்கள். ஒரு விஷ்ணுவின் ஆயுளில் பலபிரமர்களும் ஒரு உருத்திரர் ஆயுளில் பல விஷ்ணுக்களும் இறப்பார்கள்.

### தமிழ்வேதம்.

நூறு கோடி பிரமர்க ணுங்கினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறில் லாதவ னீச னொருவனே.

எண்ணுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமுன் னின்றதற்பி
னெண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களு
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் டோணோக்கம்.

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந் தார்க்கருள் செய்யு
மையஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

ஒன்றொன்றொ டொன்றுமொரு நான்கொடைந்து மிருமூன்றொ டேழுமுடனா
யன்றின்றொ டொன்று மறிவானவர்க்கு மறியாமை நின்றவரனார் [குழுமிச்
குன்றொன்றொ டொன்று குலையொன்றொ டொன்று கொடியொன்றொடொன்று
சென்றொன்றொ டொன்று செறிவாய் நிறைந்த திருமுல்லைவாயி லிதுவே.

---

சைவம்-அநுபந்தம்.

# சிவஞானபோதவசனாலங்காரதீபம்.

இந்நூல், ஸ்ரீ நீலகண்டபாஷியத் தமிழ்மொழிபெயர்ப்பாசிரியராகிய சித்தாந்த ஞானபாநு ஸ்ரீ காசிவாசி செந்திநாதையரவர்களாலியற்றப் பட்டு அச்சிடப்படுகின்றதென்பது முன்னர் விளம்பரமூலந் தெரிவிக்கப் பட்டது. அதனைக் கண்ணுற்ற அன்பர்க்கு ஞாபகமிருக்குமென்று கருதுகின்றேன்.

இப்பொழுது அச்சிட்டுமுடிந்து பயிண்டாகி விலைக்கு வெளிவந்து விட்டது. சிவஞானபோதச்சிற்றுரை பாடியம் இரண்டினும் வேதம் உப நிடதம் ஆகமம் திருமுறை முதலியவற்றினின்று மெடுத்துக்காட்டப் பட்ட பிரமாணங்களேயன்றி இவற்றினின்று மவற்றில் எடுத்துக்காட் டப்படாத அனேக பிரமாணங்களும் இவ்வசனநூலில் எடுத்துக்காட் டப்பட்டிருத்தல் இதுகாறும் என்போல்வார் கொண்டிருந்த ஐயம் திரிபு அறியாமை என்பன நீங்கி உண்மை ஞானம் உதித்தற் கேதுவாயிருக் கின்றது. இதன் அருமை பெருமைகள் வித்துவாவிப்பிராயமாகிய சிறப் புப்பாயிரம் முகவுரை முதலியவற்றால் யாவரும் அறியக்கிடத்தலின் ஈண்டு விரித்தல் மிகையென விரியாதுவிட்டேன். ஆயினும் ஒன்றுகூறி முடிக்கின்றேன்.

ஒருசீடன் சற்குருவையடைந்து வழிபட்டுச் சிவஞானபோத உண் மையுணர்ச்சியை அடைதற்குமுன்னர் அதிலே பொதிந்துள்ள விடயங் கள் இவையெனத் தானே உபாயஞானம்வாயிலாக மிகவும் இலகுவில் அறிந்து கோடற்கு ஒவ்வோர் சூத்திரத்தின் இறுதியிலும் வினாக்களும் அவற்றின் விடைகளை உணருமாறு அவற்றின் எண்களும் குறிக்கப்பட் டிருக்கின்றன.

இத்துணை இலகுவாகச் சிவஞானத்தை உதிப்பிக்கவல்ல இவ்வசன நூல் சைவசமயிகளாகிய ஆண்பாலார் பெண்பாலார் யாவர்க்கும் அத்தி யாவசியகம் வேண்டற்பாலதாம் பெறலரும் பெருநிதியே யென்பது சொல்லாதே விளங்கும்.

இதில் பொல்லாப்பிள்ளையார், தக்ஷிணாமூர்த்தி, மெய்கண்டதேவர், சிவஞானசுவாமிகள் திருவுருவப்படங்கள் முன்னர்ச்சேர்க்கப்பட்டி ருத்தலோடு ஈற்றில் ஆக்கியோன்படமும் சேர்க்கப்பட்டது.

காகிதக்கிரயமும் பைண்டுக்கூலியும் முன்னையினும் மும்மடங்கு அதிகப்பட்டிருக்கு மிக்காலத்து யாவரும் எளிதாகவாங்கும்பொருட்டு இதன்குறைந்தகிரயம் ரூபா 2 அணா 8 ஆக ஏற்படுத்தப்பட்டது. வாங்கவிரும்பும் அன்பர்கள் எனக்குத் தெரிவித்தால் வி. பி. மூலம் அனுப்பப்படும்.

சி. ஏகாம்பரமுதலியார்

44-சாமிநாயக்கன்ரோட்,

சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

# ஆயுள்சந்தா.

சென்னையம்பதியில் எண்ணிறந்த சைவசபைகள் இருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் ஆதிமூலச்சபையாயிருப்பது சென்னைச் சிவனடியார் திருக்கூட்டமே. இச்சபையின் அமைப்பையும், ஆயுளையும், இச்சபை இதுவரையிற் செய்த காரியங்களையும், இப்போது செய்துகொண்டிருக்குமவைகளையும், சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்து ஆராயும் சான்றோர்க்கு, சைவசமயிகளுள் இத்தகைய சபை வேறொன்றிருந்ததில்லை யென்பது வெள்ளிடைமலையென விளங்கித் தோன்றும். (இதுவரையில் இத்தகைய சபை வேறொன்றிருந்ததாக அன்பர்கள் யாரேனும் ருசுப்படுத்தக்கூடுமானால் அவர்களுக்கு நாம் நன்றிபாராட்டி இப்பத்திரிகைவாயிலாய் மன்னிப்புக்கேட்டுக்கொள்வோம்.) இச்சபையார் தாங்கள் தொடங்கிய எதையும் நிறைவேற்றாமலிருந்ததில்லை. இவர்கள் இப்போது அச்சுக்கூடம்வைத்து சைவநூல்களையச்சிட்டு மிகவும் குறைந்தவிலைக்கு விற்கக் கங்கணங்கட்டிக்கொண்டார்கள். இதன்பொருட்டு நிகழும் 1916௵ ஜுன்மீ வெளிவந்த பத்திரிகையில் பிரசுரித்த விண்ணப்பத்தைப் பார்த்து சில பெரியோர்கள் முன்னமே ஆயுள்சந்தா அனுப்பினார்கள். நிகழும் செப்டம்பர்மீ இராமநாதபுரம் சிறுகுடபட்டி மலையரசியம்மன் ரீடிங்ரூம் மானேஜர் ஸ்ரீமான் அண்ணாமலைசெட்டியார் அவர்கள் தமது ஆயுள்சந்தா செலுத்தி யுபகரித்தார்கள். மற்றுமுள்ள சைவாபிமான சீலர்களும் அவ்விண்ணப்பத்தைக் கவனிக்குமாறு பிரார்த்திக்கின்றோம்.

பத்திரிகாசிரியர்.

---

# சிவகீதை.

இந்நூல் பத்திமோக்ஷ ஞானங்களை நல்லாசிரியனைப்போல் போதிப்பது. ஒவ்வொருவரும் வாசித்தற்குரியது.

இதின் விலை ரூபா 2.

இந்நூல் வேண்டுவோர் சென்னை சௌகார்பேட்டை, இருளப்பன் வீதி 36-வது நெம்பர் வீட்டில் கா. ஜம்புலிங்கமுதலியாரிடம் பெற்றுக் கொள்க.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

## கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
## விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
## குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளினுடைய உபத்திரவம்பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதறக்கா முதலிய எவ்வித, விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0–8–0. டசன் 1-க்கு ரூ. 5–0–0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி,

நே. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்

மாதாந்தப் பத்திரிகை.

மலர் 2.] நள஖ூ கார்த்திகைமீ-1916஖ூ நவம்பர்மீ [இதழ் 11.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

*(Retired Accountant, Military Accts. Department.)*

சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணா 12.

(தபாற்செலவுட்பட.)

சென்னைச்சிவனடியார்திருக்கூட்டத்தின் போஷகர்கள்.

ஸ்ரீமான் ராவ்சாஹிப் பி. மாசிலாமணிமுதலியாரவர்கள்
இன்ஜினீரிங் கன்ட்ராக்டர்.

,, ராவ்பஹதூர், கே. வைத்தியலிங்கம்பிள்ளையவர்கள்.
ப்ரெஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.

,, எஸ். இரத்தினவேல்செட்டியாரவர்கள்
துவிபாஷிகர், மெஸ்ஸர்ஸ் பெஸ்ட் அண்டு கோ.

,, சி. வெங்குபிள்ளையவர்கள்
ரிடைர்ட் டிப்டி கலெக்டர்.

,, வி. மூத்தையாபிள்ளையவர்கள்
வர்த்தகர், பெரியண்ணமுதலிவீதி, சென்னை.

,, ஆர். காசிவிசுவநாதமுதலியாரவர்கள்
பொடி புகையிலை வர்த்தகர், சென்னை.

,, திரு. சபாபதிமுதலியாரவர்கள்
ரிடைர்ட் சப் இன்ஜினீர், தங்கசாலைவீதி.

,, ராய் பஹதூர், சீவரம், சுப்பராயமுதலியாரவர்கள்.

---

வடமொழிச் சிவஞானபோத முதற்சூத்திர வியாக்கியானம் வெளிவந்துவிட்டது. ... ... ... ரூபா—க.

---

## விளம்பரங்கள்.

1. ஆயுள் சந்தா.—பர்மா ப்ரோம் நகரிலிருந்து ஸ்ரீமான், சி. ரா. ம. மு. இலக்குமணச்சேட்டியார் அவர்கள் நிகழும் 1916ஞு அக்டோபர்மீ அன்புகூர்ந்து ஆயுள் சந்தா (ரூபா பத்து) மணியார்டர் செய்தனுப்பியதற்கு மிகவும் நன்றி பாராட்டி வந்தனமளிக்கின்றோம்.

2. சிவஞானபோதம்.—இரண்டாஞ் சூத்திர உரை இவ்வருடத்தில் முடிவுபெறாதாகையால் அடுத்த வருடத்து ஜனவரிமீ பத்திரிகையிலிருந்து தொடர்ச்சியாக வெளியிடப்படும்.

3. அடுத்தவருடப் பத்திரிகை.—வழக்கம்போல் அடுத்த ஜனவரி மாதப் பத்திரிகை எல்லோர்க்கும் வி-பி-யில் அனுப்பப்படும். இவ்வருடம் வி-பி-யில் அனுப்பிய பத்திரிகைகளுள் சுமார் 200-பத்திரிகைகள் திரும்பிவந்துவிட்டன. தபாற்காரர்கள் அவைகளைக்கொண்டு சென்றபோது விலாசதாரர்கள் வீட்டிலில்லாமையால் பல பத்திரிகைகள் திரும்பிவிட்டிருக்கலாம். ஆதலால் அடுத்த ஜனவரி மாதப் பத்திரிகையும் அவ்வாறு திரும்பிவிடாதபடி நமது பத்திரிகாபிமானிகளாகிய கனவான்கள் அன்புகூர்ந்து எச்சரிக்கையாயிருக்கும்படி பிரார்த்திக்கின்றோம். பத்திரிகை வேண்டாதவர்கள் அன்புகூர்ந்து முன்னமே தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

பத்திரிகாசிரியர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நளஞு கார்த்திகைமீ—1916ஞு நவம்பர்மீ || [இதழ் 11

## தேவாரம்.

நம்பொருணம் மக்களென்று நச்சியிச்சை செய்துநீ
ரம்பரம டைந்துசால வல்லலுய்ப் பதன்முன
மும்பர்நாத னுத்தமன் னொளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே.

## சைவநூல்களும் ஏகான்மவாதிகளும்.

ஒவ்வொரு சமய நூல்களும் அவ்வச்சமயக் கோட்பாடுகளையே நிலைநிறுத்துவனவாகவும், அக்கோட்பாடுகளுக்கு மாறான பிறசமயக் கொள்கைகளைப் பூர்வபக்கப்படுத்திப் பேசுவனவாகவும் இருக்கும். ஆதலால், ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் தங்கள் சமய நூல்களையே பாராட்டிப் போற்றி வாழ்வது கடமையாம். அவ்வாறன்றி, தங்கள் சமயக் கொள்கைகளுக்கு மாறான பிறசமய நூல்களை யெல்லாம் தங்கள் சமய நூல்களென்று கொண்டாடி அவைகளுக்குத் தங்கள் சமய பக்ஷமாகப் பொருள்கூறி மகிழ்வது அறிவாளிகள் செய்கையாகாது. மகமதிய நூலாகிய கோரானைக் கிறிஸ்தவர்கள் தங்கள் சமய நூலென்று கொண்டாடுவதில்லை. கிறிஸ்து நூலாகிய விவிலியத்தை மகமதியர்கள் தங்கள் சமய நூலென்று கொண்டாடுவதில்லை. நாலாயிரப் பிரபந்தத்தைச் சைவர்களும், தேவாரத் திருமுறைகளை வைணவர்களும் தங்கள் தங்கள் சமயத் தோத்திர நூல்களென்று கொள்வதில்லை. உலகநடை இவ்வாறிருக்க, ஏகான்மவாதிகள் பலர் இதற்கு மாறாகத் தங்கள் ஏகான்மவாத நூல்களோடு மாத்திரம் அமைந்திராமல், சைவ வைணவ நூல்களினும், நுழைந்து, அவைகளுக்கும் ஏகான்மவாத பரமாகப் பொருள்கூறி மகிழ்கின்றார்கள். எல்லாச் சமயங்கட்கும் பொது நூலாகிய வேதத்திற்குத் தங்கள் ஏகான்மவாத பரமாகவும் இவர்கள் பொருள் கூறலாம். அப்படியே தமிழினும் பொது நூலாகிய திருக்குறளுக்குப் பொருள் கூறுவதனால் நமக்கிழுக்கின்று. இவர்கள் சைவத்திற்கே சிறப்பாகிய தேவார திருவாசகங்கட்கும் வைணவத்திற்கே சிறப்பாகிய நாலாயிரப் பிரபந்தத்திற்கும் அவ்வாறு பொருள்கூறி மகிழ்வது ஒரு சிறிதும் அடாது. இவர்கள் தேவாரமுதலிய திருமுறைகளையும் தாயுமானவர்பாடல் முத

லிய சைவ நூல்களையும் கொண்டாடி, சிவ சின்னங்களைத் தாங்கி, தங்களை வேதாந்திகள் என்றும் அத்வைதிகளென்றும் சொல்லிக் கொள்வதனால், சைவ சித்தாந்த உணர்ச்சியில்லாத சைவர்கள் பலர் ஏமாந்து, இவர்களைத் தங்கள் இனத்தவரென்றெண்ணி, இவர்கள் செய்யும் உபதேசங்களைக் கேட்டு, ஆரம்பத்திலேயே தங்களை வேதாந்த விசாரணை செய்பவர்களா யெண்ணிக்கொண்டு, சைவ நல்லொழுக்கங்களைக் கைவிட்டு ஏகான்மவாதிகளாய் மாறி வீணே கெட்டுப் போகிறார்கள்.

உலகத்திலுள்ள ஒவ்வொரு சமயமும் அவ்வச்சமய நூல்களையும் அச்சமய நூல்களைச் சீடர்களுக்கு உபதேசித்துச் சமய பரிபாலனம் பண்ணும் குருபரம்பரைகளையும் ஆதாரமாகக்கொண்டு நிலவும். சமய நூல்கள் முதல்நூல் எனவும் வழிநூல் எனவும் சார்புநூல் எனவும் மூவகைப்படும். இவற்றுள் முதனூலாவது அவ்வச் சமயத்தின் மூலபுருஷனால் செய்யப்பட்டது. வழிநூல் மூலபுருஷனுடைய சீட பரம்பரையினரால் முதனூலுக்கு மாறுபாடின்றி அதன் கருத்தைத் தழுவிச் செய்யப்படுவது. சார்புநூல் முதனூலையும் வழிநூலையும் ஆதாரமாகக் கொண்டு செய்யப்படுவது.

## நன்னூல்.

5-ஆம் சூத்திரம்—முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

(இ-ள்.) முதல்நூல், வழிநூல், சார்புநூல் என நூலானது மூன்று பிரிவினை யுடையதாகும். (எ-று.)

6-ஆம் சூத்திரம்—அவற்றுள், வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூ லாகும்.

(இ-ள்.) வினையினின்றும் நீங்கிப் பிரகாசித்த அறிவினையுடைய கடவுள் உயிர்களுக்கு முற்காலத்தில் அருளிச் செய்தது முதனூலாகும். (எ-று.)

7-ஆம் சூத்திரம்—முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, யழியா மரபினது வழிநூ லாகும்.

(இ-ள்.) கடவுளும் அவரருள்வழிப்பட்டோருஞ் செய்த நூல்களினுடைய பொருள் முடிபுகள் முழுவதும் ஒப்பாகி, வழிநூல் செய்வோன் முதனூலிருக்கவும் தான் வழிநூல் வேறே செய்வதற்குக் காரணமாக வேண்டுகிற வேறுபாடுகளையும் உடன்சொல்லி, அழியாமல் உலகத்திலே நிலைபெற்று விளங்காநின்ற குணத்தையுடையது வழிநூலாகும். (எ-று.)

8-ஆம் சூத்திரம்—இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித், திரிபுவே றுடையது புடைநூலாகும்.

(இ-ள்.) முதனூல் வழிநூல் என்னும் இருவகை நூல்களுக்கும் ஒரு பட்சம் பொருள் முடிபு ஒத்து மற்றவைகளெல்லாம் ஒவ்வாமையுடையது சார்பு நூலாகும். (எ-று.)

சைவ சமயத்திற்கு முதனூல்கள் வேதமும் சிவாகமுமாம். இவற்றுள் வேதம் பொதுநூலும் சிவாகமம் சிறப்பு நூலுமாம். வேதம் மூலமும் சிவாகமம் அதன் பாஷ்யமுமாம். வேதத்தின் பொருளைச் சிவாகமங்களைக்கொண்டும் புராணங்களைக்கொண்டும் அறியவேண்டும். வேதத்தின் பொருளை ஆகமங்களையும் புராணங்களையும் கொண்டு அறியமாட்டாதவர்கள் அதை இடர்ப்படுத்துகிறார்க ளென்பது வேத சம்மதம். வேத சிவாகமங்களிலும் புராணங்களிலும் உள்ள உண்மைப் பொருள்கள் தமிழில் தேவாரத் திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களுமாகிய முதனூல்களாகவும் வழிநூல் சார்பு நூல்களாகவும் சைவ சமய குரவர்கள் சைவசந்தான குரவர்கள் முதலிய பெரியோர்களால் அருளிச் செய்யப்பட்டன. இவைகளைப் போற்றிப் பயின்று சீடர்களுக்குப் போதித்துச் சைவசமயத்தை வளர்க்கும் குருபாம்பரைக்குத் திருக்கைலாசபரம்பரை யென்று பேர். இக்குருபாம்பரையின் முதற் குரவர் திருக்கைலாச மலையிலே, அருள்வடிவாகிய கல்லாலமாநிழலிலே, தக்ஷிணாமூர்த்தியா யெழுந்தருளிய ஸ்ரீகண்ட பரமேசுவரரே, இவருடைய சீடர்கள் திருமால், பிரமன், இந்திரன், உபமனியன், சூரியன், நந்திதேவர், முருகக்கடவுள் ஆதியாயவர்கள்.

## சிவ தத்துவ விவேக விருத்தி.

திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வேளாதித்
தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த
வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்.

இவருள் திருநந்திதேவர் தமக்குச் சீகண்ட பரமேசுவரர் உபதேசித்தருளிய வேதாகமசாரமாகிய சிவஞானபோதத்தைச் சனற்குமார முனிவருக்கு உபதேசித் தருளினர். சனற்குமாரமுனிவர் சத்திய ஞானதரிசனிகளுக்கும், சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதிமுனிவருக்கும் அருளிச்செய்தார்கள். பரஞ்சோதிமுனிவர் கைலாசத்தினின்றும் தமிழ்நாட்டிற்குவந்து சாமுசித்தரா யெழுந்தருளியிருந்த மெய்

கண்ட தேவருக்கு உபதேசித்தருளினர். மெய்கண்டதேவர் தமிழில் சிவஞானபோதம் செய்தருளித் தமது மாணுக்கராகிய அருணந்திசிவாசாரியருக்கு உபதேசித்தருளினர். அருணந்தி சிவாசாரியர் தமிழ்ச் சிவஞான போதத்தை முதனூலாகக்கொண்டு சிவஞானசித்தியார் என்னும் வழிநூல் அருளிச்செய்ததுமன்றி, மெய்கண்டதேவர் சந்நிதியில் தாம் கேட்ட கேள்விகளுக்கு அவர் திருநோக்கால் தமக்கு விளக்கிய பொருள்களை "இருபாவிருபது" என்னும் நூலாகக் கூறியருளினர். மெய்கண்ட தேவருடைய மற்றொரு மாணுக்கராகிய திருவதிகை மனவாசகங்கடந்தார் "உண்மை விளக்கம்" என்னும் நூலை யருளிச்செய்தனர். அருணந்தி சிவாசாரியருடைய மாணுக்கராகிய மறைஞானசம்பந்தசிவாசாரியருடைய அநுக்கிரகம் பெற்றவரும் தில்லைவாழ்ந்தணர்களுள் ஒருவருமாகிய உமாபதிசிவாசாரியர் சார்பு நூல்களாகிய சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் எட்டுச் சைவ சித்தாந்த சாத்திரங்களைச் செய்தருளினர். இவ்வெட்டும், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபது, உண்மை விளக்கம், திருவியலூர் ஆளவந்த தேவர் அருளிய திருவுந்தியார், திருக்கடவூர் உய்யவந்த தேவாருளிய திருக்களிற்றுப் படியார் என்னும் ஆறும் ஆக பதினன்கு நூல்களும் சைவ சித்தாந்த ஞான சாத்திரங்களாம்.

சித்தாந்தநூல்களின் திருநாமங்கள் "உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார், பிந்திருபா உண்மைப் பிரகாசம்—வந்தவருட், பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு, உண்மைநெறி சங்கற்ப முற்று."

உமாபதிசிவாசாரியர் அருணமச்சிவாயதேசிகர் முதலிய மாணுக்கர்களுக்கு உபதேசித்தருளினர். அருணமச்சிவாயதேசிகர் நவகோடி சித்தவாசபுரமென்னும் திருநாமமுடைய திருவாவடுதுறையிலே சித்த மூர்த்தியாக எழுந்தருளியிருந்த சித்தர்சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினர். இவ்வாறு சைவகுருபாம்பரை வாழையடிவாழையாகத் தொன்றுதொட்டு நாளதுவரையில் திருவாவடுதுறை யாதீன மடாலயத்தில் பிரசித்திபெற்று நிலவுகின்றது. சைவசமயிகள் யாவரும் இத்திருக்கயிலாய குருபரம்பரையின் சீடர்களாவர். இக்குருபரம்பரையில் முதல் முதல் தமிழ் நாட்டில் திருவவதாரஞ் செய்தவர் மெய்கண்டதேவர். ஆதலால் இப்பரம்பரை மெய்கண்டசந்தானம் என்றும் வழங்கப்படும். மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியர், மறை

ஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியர் ஆகிய நால்வரும் சைவசந்தான குரவர் என்று சைவ சமயிகளால் பூசிக்கப்படுகின்றார்கள்.

சந்தானகுரவர்கள் சிவாகமங்களிலுள்ள சிவஞானபாதப்பொருள் களைச் சிவஞானபோத முதலிய ஞானசாத்திரங்களாகச் செய்தருளியது போல், சைவ சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனர், திருநாவுக்கரசுநாயனர், சுந்தரமூர்த்திநாயனர், மாணிக்கவாசகசுவாமி கள் ஆகிய நால்வரும் ஆரியவேதத்தைத் தேவார திருவாசகமாகிய தமிழ்வேதமாகப் பாடியருளினர். ஆதலால் தேவார திருவாசகமும் சித்தாந்த சாத்திரங்களும் சைவசமயகுரவராலும் சைவசந்தான குரவராலும் அருளிச்செய்யப்பட்டு, ஒரே சைவசித்தாந்தப்பொருளை விளக்குவனவாய்ச் சைவகுருபரம்பரையால் தொன்றுதொட்டு அனுசந் தானஞ்செய்யப்பட்டுவருகின்றன. இதனை,

வேதம்பசு வதன்பான் மெய்யாகம நால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்.

என்னும் வெண்பாவினுலும் உணரலாகும்.

(இன்னும்வரும்.)

பத்திரிகாசிரியர்.

---

(132-வது பக்கத்தொடர்ச்சி.)

## கல்வி.

சென்னைமாநகரைச்சார்ந்த திருமயிலையில் வருடந்தோறும் பங் குனிமாதத்தில் அறுபத்துமூன்றுநாயன்மார் மகோற்சவம் நடைபெறு கின்றது. அதைத் தரிசிக்கச்செல்லும் ஜனங்களுள் அளவற்றபேர் அறுபத்துமூன்று நாயன்மார்கள் பெருங்கூட்டமாக எழுந்தருளுவதைப் பார்த்து "அம்மன் அறுபத்துமூன்று பிள்ளைகளைப்பெற்றும் ஆசை தீராமல் இன்னுமோர் பிள்ளையைப்பெறவேண்டி எலும்புந்தோலுமாக வற்றித் தவஞ்செய்கிறாள்" என்கிறார்கள். பிட்சாடனர் மகோற்சவத் தைத் தரிசிக்கும் ஜனங்கள் பலர் சிவபெருமான் திகம்பராயெழுந்தரு ளுவதையும், அவர் விமானத்திலிருக்கும் பிரதிமைகள் பெண்கள் அவ

ரைக்கண்டு காமவிகாரங்கொண்டு ஆடையவிழப் பின்தொடர்ந்து சென்றதை விளக்குவதையும் பார்த்து "சாமியின் அழகைப்பார்த்துப் பெண்களியாவரும் மோகித்தார்கள்" என்று சொல்லிச் சந்தோஷிக்கிறார்களே யன்றி, அம்மகோற்சவத்தால் விளக்கப்படும் சைவசித்தாந்த உண்மையை யறிந்து சந்தோஷிப்பதில்லை. இவர்கள் இவ்வாறு கூறுவதைக்கேட்கும் பிறசமயிகள் "பெண்களின் கற்பையழிப்பவனும் ஒரு கடவுளா" என்று பரிகசிக்கிறார்கள். (இவ்வுற்சவத்தின் கருத்து முதன் மலரில் வெளியிட்ட தாருகாவனமுனிவர்சரித்திரத்தால் நன்குவிளங்கும்). சுத்தாத்துவித சித்தாந்தசைவர்களால் மாத்திரமன்றி ஏனைச் சைவர்களாலும் எல்லாச் சிவமூர்த்தங்களினும் அதிகமாக வழிபடப்படும் சிவலிங்கத்தின் தத்துவார்த்தங்களை யறிந்த சைவர்கள் மிகச் சிலரே. (இவை இனி அடுத்துவரும் மூன்றும் மலரில் விரிவாய் விளக்கப்படும்.) இத்தகைய உதாரணங்கள் எண்ணிறந்தன விருக்கின்றன. அவைகளை விரிக்கிற் பெருகும். இவற்றால் சைவநூல்களைக் கல்லாதவர்கள் சிவாலயவழிபாட்டை விபரீதப்படுத்துகிறார்கள் என்பது விளங்கும்.

சைவநூல்களைக் கல்லாதவர்களுடைய சைவாநுட்டானங்கள் நிலைபெற்றிருத்தல் அரிது. பிறசமயிகள் அவர்களிடம் தங்கள் சமயத்தை யுயர்த்திச் சைவசமயத்தைத் தாழ்த்திப் பேசுவார்களானால் உடனே அவர்கள் மனம் தடுமாற்றமடையும். சைவசமயிகளாகப் பிறந்தவர்கள் எண்ணிறந்தோர் இவ்வாறு தடுமாறியே மாயாவாதிகளாகவும் உலோகாயதர்களாகவும் இருக்கிறார்கள். சைவசமய உண்மைகளை யறிதற்குப் போதிய கல்விகற்றிருத்தல்வேண்டும். சித்தாந்த ஞானசாத்திரங்களைக் கற்றல் வேண்டும். தேவாரமுதலிய திருமுறைகளை யோதல்வேண்டும். புராணங்களை வாசித்தல்வேண்டும். தருக்கம் இலக்கண முதலியன பயின்றிருத்தல்வேண்டும். பலபிறவிகளிற்செய்த புண்ணியப்பயனும் வந்து பொருந்துதல்வேண்டும்.

### சிவஞானசித்தியார்.

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம, வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ், சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத், திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

கல்வியானது சமய உணர்ச்சிக்குமாத்திரமன்றி எல்லாத் தொழில்களுக்கும் இன்றியமையாத கருவியாயிருக்கிறது. கல்வியறிவில்லாதவர்கள் செய்யும் கைத்தொழில்களும் வாணிகங்கள் முதலியனவும் கல்வியறிவுடையவன் செய்யுங் கைத்தொழில் வாணிகம் முதலியவற்றிற்கு நிகராகா. சிற்பநூல்கற்ற (இஞ்ஜினீர்) சிற்பி யொருவனுக்கும் அதைக் கல்லாத கொல்லனுக்குமுள்ள வித்தியாசத்தால் இதை யுணரலாகும். ஒவ்வொரு தொழிலிலும் அவ்வத்தொழிற் கல்வியைக் கற்றவர்கள் அதைக் கல்லாத பலரை யடக்கியாளுந் திறமையுடையவர்களா யிருக்கிறார்கள். கல்வியில்லாதவன் எவ்வளவு நுட்ப அறிவும் தொழிற் பழக்கமுமுடையவனு யிருந்தாலும் அவன் கற்றவனுக்குச் சமானமாக மதிக்கப்படுதலில்லை.

## திருக்குறள்.

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

இதுவரையிற் கூறியவாற்றால் கல்வியினும் சிறந்த பொருள் இல்லையென்பதும் கல்வியுள்ளும், சமயக்கல்வியே சிறந்ததென்பதும் விளங்கும்.

சமயக்கல்வியின்பெருமை இவ்வாறிருத்தலையும், சமயக்கல்வி சமயவளர்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்படுதலையும், நம்மவர்கள் யோசியாமல், ஆலயங்கள்கட்டுவதிலும், அன்னதானஞ் செய்வதிலும் திருவிழாக்கள் செய்வதிலுமே தங்கள் காலத்தையும், கருத்தையும், பொருளையும் செலுத்திக்கொண்டிருக்கின்றார்கள். கல்வித் தானத்தினால் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கும் உண்டாதலால், கல்வித்தானஞ்செய்தவர் சொர்னதானஞ் செய்தவருமாவர். சமயக்கல்வித் தானஞ்செய்தவர் சதுர்வித புருஷார்த்தங்களையும் தானஞ் செய்தவராவர். சமயக்கல்வி தானஞ் செய்யாமல் வெறும் அன்னதானமாத்திரம் செய்வது ஒருவன் பிள்ளைகளுக்குக் கல்விகற்பிக்காமல் சோறுங் கறியும் ஊட்டி வளர்த்தல்போலாம். சைவநூலுணர்ச்சியில்லாதவர்களுக்குச் சிவாலயங்களைக்கட்டி வைத்தல் நபுஞ்சகனுக்குப் பெண்ணைக்கட்டிக் கொடுத்தல்போலாம். சைவநூலுணர்ச்சி யில்லாதவர்கள் தேவாரமோதுதல் கிராமபோன் என்னும் கருவி இசைபாடுவதுபோலாம். ஆதலால், சிவநேயச்செல்வர்களே, சைவப்பிரபுக்களே, கல்வியைக்கொண்டு சமயபரிபாலனம் செய்யுங்கள். வெறுஞ்சமயக்கல்வியைமாத்திரம் எக்காலத்திலும்யாருமேகற்கமாட்டார்கள். இலௌகிகக்கல்வியோடு கலந்தே

எப்போதும் சமயக்கல்வியும் கற்பிக்கவேண்டும். இப்படியே கிறிஸ்தவர்கள் தங்கள் சமயக்கல்வியைக்கற்பித்து உலகமெங்கும் கிறிஸ்துசமய பரிபாலனஞ்செய்கிறார்கள். அவர்கள் மாதிரியை நீங்களும் பின்பற்றி எங்கும் ஆங்கிலபாடசாலைகள் வைத்து அதில் இலௌகிகக்கல்வியோடுசைவ சமயக்கல்வியும் கற்பியுங்கள். இது உங்களால் ஆகாதகாரியமென்றாவது தகாதகாரியமென்றாவது எண்ணாதீர்கள். எத்தனையோ பாடசாலைகள் பிள்ளைகள் கொடுக்கும் சம்பளத்தைக்கொண்டும் அரசாங்கத்தார் செய்யும் கிராண்டு என்னும் உதவியைக்கொண்டுமே நடத்தப்படுகின்றன. ஆதலால் சமயபரிபாலனஞ் செய்தற்குப் பாடசாலையைக்காட்டிலும் அநுகூலமான மார்க்கம்வேறொன்று மில்லை.

சைவப்பிரபுக்கள் கல்வித்தானம் செய்யாமல் மற்றத் தானங்களையே அதிகமாகச் செய்துகொண்டிருப்பதுபோல் சைவப்பிரசாரகர்களும் சைவசமயத்தின் தற்காலநிலைமையையும் சைவசமயவளர்ச்சிக்குச் சைவசமயப் பாடசாலைகள் இன்றியமையாதன வென்பதையும்அதிகமாக எடுத்துப்போதிக்காமல் சைவசமயத்தின் ஏற்றத்தையே அதிகமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். சைவசமயிகள் சமயக்கல்விகற்காமல், சைவசமயத்தின் ஏற்றத்தை யெடுத்துப்பேசி மகிழ்தல் கல்லாவொருவன் குலநலம்பேசுதலையொக்கும். ஆதலால் சைவப்பிரசாரகர்களே, சைவசபையார்களே, சைவச்சீமான்களே, நீங்கள் செய்யும் பிரசங்கங்கள் எல்லாவற்றுள்ளும் சைவசமயத்தின் தற்கால நிலைமையையும், சைவ சமயவளர்ச்சிக்குச் சைவசமயப் பாடசாலைகள்இன்றியமையாதன வென்பதையும் எடுத்துவிளக்கும்பிரசங்கத்தையே முதற்பிரசங்கமாகவைத்துக்கொள்ளுங்கள். சைவசமயபாடசாலைகள் வைத்து இலௌகிகக் கல்வியோடு சைவசமயக்கல்விகற்பிக்குமாறு செய்யுங்கள். இவ்வாறு செய்வீர்களானால் சைவம் வையமெங்கும் பரவும். உலகமெங்கும் உய்யும்.

## திருமந்திரம்.

தேவர் பிரான்றனைத் திவ்விய மூர்த்தியை
யாவ ரொருவ ரறிவா ரறிந்தபின்
ஓது மின்கேண்மி னுணர்மி னுணர்ந்தபின்
ஓதி யுணர்ந்தவ ரோங்கிநின் றாரே.

கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராங்
கல்லாத மூடர் கருத்தறி யாரே.

(பத்திராகாசிரியர்.)

# திரு அருணாசலக்
# கார்த்திகை விளக்கீடு*

இது சைவசமயிகட்கு அருமருந்தன்ன வித்வ ரத்னமாயிருந்த,

மஹா சைவாபிமானி

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி

## ஸ்ரீமந் - நா. கதிரைவேற்பிள்ளையவர்கள்

செய்த உபந்நியாசம்.

## திருவாசகம்.

பிரம னரியென் றிருவருந்தம் பேதைமையாற்
பரம மியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க
வரனா ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமா கிநின்றவா தோணோக்க மாடாமோ.

இந்த ஞானதீபக் காட்சியாகிய மகா விழாவானது இக்கார்த்திகை மாதத்தில் வரலால் அதுபற்றி நம் நண்பர்கள் பற்பலர் அறிதற்கு அவாவுறுவர். ஆதலால் அது குறித்துச் சிறிதுபேச வந்தாம். இத்தீபக் காட்சியைக்கண்டு ஆனந்தித்தவாது கண்களே கண்களெனப்படும். அல்லாத கண்களெல்லாம் புண்களெனெப்படும். அவை மாக்கண், பீலிக்கண், மட்பாண்டக்கண், நிலக்கண் எனப்பட்டு ஒருசிறிதும் பயனிலவாம் என்க. இது சிவபெருமான் உலக முழுதும் சோதிவடிவாய் விளங்கி நின்றமையால் அதற்கு அறிகுறியாக எவ்விடத்தும் தீபமிட்டுத் தரிசிக்கும் வழக்காம். வைணவர்க்கு ஐப்பசியில் தீபாவளி யிருத்தல்போலச் சைவராயுள்ள எமக்குரியதீபாவளி இக்கார்த்திகை மாதத்தில் வருமிதுவேயாம். இதனையே வைணவர்களும் ஏற்றுத் தங்கள் ஆலயங்களிலும் தீபம் ஏற்றிவைக்கின்றார்கள். புறச்சமயிகளாலும் இது புகழப்பட்டு அநுஷ்டிக்கப் படுகின்றது. புறச்சமய நூலென்னும் சீவக சிந்தாமணியினும்,

(நாமகளிலம்பகம் உஉஎ—செய்யுள்.)

தார்ப்பொலி தரும தத்தன் றக்கவா றுரைப்பக் குன்றிற், கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ்குவளைப் பைந்தார், போர்த்ததன் னகலமெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி, நீர்க்கடன் மகாப் பேழ்வாய் மதனன்மற் றிதனைச் சொன்னான்.

---

* விளக்கிடுதல் என்பது விளக்கீடு எனத்திரிந்தது.

என்று பேசப்பட்டிருக்கிறது. உலகத்திலும் "மலையிலிட்ட விளக்கு" என்று வழங்கும் முதுமொழியானும் இதன் பெருமை புலப்படும். திருவருணாசலமே யிதற்குரிய விசேடதலமாகலின் அதனையும் பற்றி யுரைப்பாம். திரு அருணாசலம் என்பது தொண்டைநாட்டு முப்பத்திரண்டு சிவஸ்தலங்களுள் ஒன்று. "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்று தெய்வப்புலமை ஔவைப் பிராட்டியாராற் சிறப்பிக்கப்பட்ட இத்தொண்டை நாட்டில், முப்பத்திரண்டு தலம் வந்ததற்குக் காரணம் என்னவென்று ஆராயுமிடத்து, இறைவி யுலக முய்வான் ஈண்டு வந்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தருளினள் என்று முந்து நூல்கள் முழங்கலான், அதற்கு அறிகுறியாகத் தலங்களும் முப்பத்திரண்டாயின வென்பர் பெரியோர். உலகத்திலே யுள்ள எல்லாத் தலங்களினும் ஆயிரகோடி சிவஸ்தலங்களே விசேடித்தன. அவற்றினும் ஆயிரத்தெட்டுத் தலங்களே விசேடம். அவற்றினும் நூற்றெட்டு சிவஸ்தலங்களும், அவற்றினுந் தெய்வத் தலங்களாகிய அறுபத்தெட்டும், அவற்றினும் அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னுஞ் சத்த முத்தித் தலங்களும் உயர்ந்தனவாம். அவற்றினும் ஆதாரஸ்தலங்களே விசேடித்தனவாம். அவற்றினும் பஞ்சபூதத்தலங்களே யுயர்ந்தன. அவற்றினும் பிறக்க முத்திதருந் தலமாகிய திருவாரூரும், இறக்கமுத்திதருந் தலமாகிய காசியும், நினைக்க முத்திதருந் தலமாகிய திருவண்ணாமலையும் சிறந்தனவாம். பிறத்தலும் இறத்தலும் கிடைத்தல் ஒருவர்க்கு முற்புண்ணியம் இருந்தாலன்றி யாகாவாம். நினைத்தல் யாவர்க்கும் எளியதாகலின் அது செய்தமாத்திரத்தே சிவ சாயுச்சியத்தை யளிக்கும் இத்திருவருணாசலத்தின் மகிமை செப்புந் தரத்ததோ? தத்துவங் கடந்த தனிமுதற் பொருளாகிய பரசிவனே இத்தலமாக விளங்குவான் எனில், அதன் பெருமையை யாவரே யளக்க வல்லார். சிவனுருவாய் நின்றது எவ்வாறெனில்:—

முற்காலத்திலே ஸ்ரீமந் நாராயண மூர்த்தியும் அவர் குமாரரான பிரமதேவரும் நாம் பிரமம், நாம் பிரமம் என்று போர்புரிய, அதனாலுலகமும் அவரும் இறப்பார் என்று கருணை கூர்ந்த காளகண்டப்பெருமான், மாசிமாதத்திலே அபரபக்கச் சதுர்த்தசி திதியிலே, அர்த்த சாமத்தில் ஓர் சோதி வடிவாய் எழுந்தருளி யவர் நடுவில் நின்றார். அவ்வக்கினிப் பிழம்புத் தம்பத்தின் அடிமுடியை யறிந்தவரே பிரமமாவர் என்று அசரீரி கூறிற்று. அது கேட்ட அரி பிரமர் போரை விடுத்து முறையே பன்றியாகியும் அன்னப் பறவையாகியும் பூமியைத் தோண்டிச் சென்றும், அண்டங்கள் குலுங்க யதிரப் பறந்தும் தேடி அறியாராயினர். இளைத்

தவராய அவ்விருவரும் சோர்வுற்று மனந்தெளிவுற்றுப் பெருமானைத் துதிப்ப, அவர் அக்கினிவடிவைச் சுருக்கி மலையாய் நின்றனர். அம்மலை உலக முழுவதும் சிவந்த நிறமுற்றுத் தோன்றினமையால் அருணகிரியெனத் திருப்பெயர் வாய்ந்தது. அருணம்—சிவப்பு. அசலம்—மலை. சிவந்த நிறத்தை யுடையமலை. சோணகிரி என்பதும் அதுவே. சோணம் - சிவப்பு. இனி அருணாசலம் என்பதில், அருணம் என்ற தற்கு, ருணசம்பந்தங்களை யொழிப்பது என்று அருணகிரிபுராணஞ் சொல்லிற்று. எவ்வளவு மழைபெய்யினும் சலம் கீழிறங்காமல் அம் மலையிலேயே அடங்கிவிடலால் அக்கினிமலை யென்பதற்கு அதுவு மோர் திருஷ்டாந்தமே.

இச்சிவசோதிமலை, கிருதயுகத்தில் அக்கினிமலையாகவும், திரேத யுகத்தில் மாணிக்க மலையாகவும், துவாபரயுகத்திற் பொன்மலையாகவும், இக்கலிகாலமாகிய பாவயுகத்தில் அவ்வடிவு மாறிக் கல்மலையாகவும் விள ங்கும் என்று பிரமாண்ட புராணமும், சிவரகசியமும், உருத்திர சங்கி தையும், அருணைமான்மியமும் அறைகின்றன. சில வைணவ நண்பர்கள் சிவனது அடியை யெங்கள் நாராயணமூர்த்தி தேடவாரா என்றும், அது சைவர்களது கட்டுக்கதைகளாமென்றும் கூறுகின்றதைக் கேட்டிருக்கின் றேம். வைணவசகோதரர்களே! வேதம் நமக்கும் சைவர்க்கும் பொது வான தொன்றன்றோ? உபநிடதமும் அப்படி யுள்ளதே. அவற்றிற் கூறப்பட்ட பிரமாணங்களை யிங்குக் காட்டுகின்றோமன்றி, சைவர் நூற் சரிதமாவது, கட்டுக்கதைகளாவது காட்டுவே மல்லேம். வேதோப நிடதப் பிரமாணங்களை நீவிர் ஒப்பாது விட்டால் பாஷண்டர் ஆவீர் களே. அந்தப் பிரமாணங்கள் வருமாறு:—

## இருக்கு வேதம்.

விஷ்ணுர்வை வாராகம் ரூபமாஸ்தாய பூமின் விதாரயன் சகஸ்ரம் ஸமா ஆசன்-பாதாந்விஷ்ண பரோ பூத்வா, த்வமேவ மாதாஜி, த்வமேவ ப்தாஸி, த்வமேவ ஜியேஷ்டோஸி, த்வமேவசிரோஷ்டோஸி, யயேவம் மகிமாநம், வேதாத் திருஷ்டாபவதி, விக்ஞாதாபவதி, கர்த்தாபவதி, காரயதாபவதி, யயேவம்வேதா, சிவஸாயுஜ்யமாப்நோதி, சிவஸாயுஜ்ய மாப்நோதி.

## பாஸ்கர சங்கிதை யெனும் வேதபாகம்.

ப்ரஹ்மா விஷ்ணு ரஜஜாபத்—எனத் தொடங்கி, வாராஹோ விஷ்ணு, நிமமஜ்ஜ பூமௌப்ரம் ஹோதப் பாத பூமேர்நிவமா ஸுக்ருத்திரஃ என்று முடியுமது.

## அதர்வண வேதச் சரப உபநிடதம்.

யத்பாதாம் போருஹத் த்வம்த்வம் மிருக்யதே விஷ்ணு நாதுநாஸ்து, த்வாஸ்தத்தியம் மஹேசா நமவாங்மாந ஸகோசாம், பக்தியாநமிர்தரே விஷ்ணௌ ப்ரசாதமக ரோத்விபு.

## வில்லிபுத்தூரார் பாரதம்.

"ஓரேனந்தனைத் தேடவொளித்தருளு மிருபாதத் தொருவனந்தப்-போரேனந்தனைத் தேடிக் கணங்களுடன் புறப்பட்டான்"

"புள்ளுடைக் கொடியோ ரிருவருங்காணுப் புண்ணியன்"

என்ற பிரமாணங்களாலும் இன்னும் அநேக பிரமாணங்களாலும் வெள்ளிடைமலேபோற் றெள்ளிதின் அறியக் கிடக்கின்றது. இங்ஙனம் வேதாதி பிரமாணங்கள் முழங்கியதை யெடுத்துக்கூறின் விஷ்ணுதூஷணஞ் செய்கின்று மென்பிர். அதற்கு வேதங்களும் அவையிற்றை யருளிச்செய்த பரப்பிரமமுமே விடைகூறவேண்டும். நிற்க. அக்கினி மலையாக நின்றருளிய பெருமான் பிரம விட்டுணுக்கள் செய்த பூசையினுள மகிழ்ந்து இலிங்கோற்பவகாலமாகிய மகாநிசியிலே அடியையும் முடியையுங் காட்டாது இலிங்கோற்பவ மூர்த்தியாய் ஒரு முகூர்த்த காலங் காட்சி கொடுத்தருளினர். கொடுத்தருளியது மன்றிக் "கார்த்திகை மாதக் கார்த்திகை நட்சத்திரத்திலே இதுபோல ஓர் சோதி காட்டுவோம். அதனைத் தரிசிப்பவர் யாவராயினும் அவர் பாவங்களாகிய இருட் படலத்தினின்று நீங்கிச் சிவஞான வொளியையடைந்து எம்கழலடியுறுவர்" என்றும் பரமர் கூறினமையால் அந்த ஐதிகப்படியே இக்காலத்தும் திருவண்ணுமலையிற் கார்த்திகைக் கார்த்திகையிற் றீபம் மலையினுச்சியில் ஏற்றித் திருவிழாக் கொண்டாடப்படும். அதற்காகப் பலதேசங்களிலு மிருந்து இலக்ஷக் கணக்காகச் சனங்கள் வந்துசேர்ந்து தரிசிப்பர். அரிக்கும் பிரமனுக்கும் நடுவிற் சோதியுருவாகத் தோன்றியது மாசிமாதச் சிவராத்திரிக் காலத்திலன்றி, கார்த்திகையி லிடுவது எங்ஙனமெனின், அதனைக் கூறுவாம்.

சோதியுருவாக முதலிற் றோன்றியது மாசிச் சிவராத்திரியிலேயே. இலிங்கோற்பவ மூர்த்தியாய்ப் பின்னர்க் காட்சி கொடுத்தது மகா நிசிக் காலமாகிய இரவு இருபத்தேழு நாழிகைக்குள்ளாம். அக்காலந் தேவ நாளாதலின் அக்கணக்கின்படி பார்க்கின் மானுடதினக் கார்த்திகைமாதமே தேவர்க்கு மகாநிசிக் காலமாகும். அதுபற்றியே கார்த்திகையில் விளக்கு விழாச் செய்யபபடுமென்றறிக. இதுவன்றி, வான் என்னு

மொரு சித்தன், முனிவர் சாபத்தால் மகிடாசுரனுய்ப் பிறந்திருக்க, சங்கரி அவனைக் கொன்று அவன் கழுத்திற் சிவலிங்கந் தோன்றியெடுக்க, அது கையினின்றும் நீங்காதுறைய, அப்பாவத்தை விலக்கிக் கொள்ளற் காக, அம்மையார் இத் திருவருணசலத்தை யடைந்து ஐப்பசி மாதத் துக் கேட்டை நட்சத்திரத்திற் பூசித்துக் கட்க தீர்த்தத்தின் முழுகி யருச்சித்தமையாற் சிவலிங்கம் கையினின்றும் நீங்கப்பெற்றனர். கார்த் திகைக் கார்த்திகையிலே சிவாகம விதிப்படி யுற்சவம் நடத்துவித்துத் தீபங்களையு மெவ்விடத்தும் ஏற்றுவித்துத் தாம் நினைந்தனவெல்லாம் பெற்றூர் என்று அருணகிரிபுராணம் கூறுதலால், அவ்விதிப்படி யிக்கா லத்துந் தீபமேற்றுதலுமாம். இத்தீப தரிசனஞ் செய்தோர் சிவபெரு மானைத் தரிசித்தவராவர். சிவபெருமான் ஒளிவடிவாயிருக்கின்றூர் என் பது தோன்றத் திருநெறித் தமிழ்வேதமும் "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்று கோஷிக்கின்றது. இம்மலை சிவனே யாத லால் இதன்கண் கால்வைத் தேறுதல் மகா பாதகமாம். இம்மலையை வலம் வந்தோர் தம் பாவங்களெல்லாம் நீங்கி முத்தி பெறுவர். வலம் வருவோர் பாதரட்சை, தொடுதோல் இட்டும், குடைபிடித்தும், வாக னத்தேறியும் செல்லலாகாது. முன்னர் மாகிதன் என்னும் அரசன் குதிரையிலேறி வலஞ்செய்தான். அதனுல் அவன் நரகத்தில் வீழ்ந் தான். குதிரை சிவலோகஞ் சென்று சிவகணத்தலைவனுய் வாழ்நத தென்று உண்மை நூல்கள் கூறின. ஆதலால் நமராங்காள்! குளிக்கப் போய்ச் சேறு பூசுவார் போலப் பாவந் தேடிக்கொள்ளாது விதிப்படி தீப தரிசனமும், பிரதக்ஷிணமும் செய்து பேரின்பு உறுவீராக.

---

## (2) தீப இயலும் அதன் உண்மையும்.

ஆயயம் முதலிய சிவசந்நிதானங்களிலும், பூசையினும், யாகாதி களினும் விளக்கிடுதல் மகா புண்ணியமாம். சோடச உபசாரங்களுள் விளக்கிடுதலும் ஒன்றும். விளக்கிடுதல் சரியைத் தொழில்களுள் விசே டித்ததாகச் சொல்லப்பட்டது. சிவபெருமானுக்கு முப்பத்திரண்டு உப சாரங்களோடு பூசை செய்க. அவை யியலாதாயிற் சோடசத்திற் பூசிக்க. அதுவுங் கூடாதவர் சந்தனம், புட்பம், தூபம், தீபம், நை வேத்தியம் என்னும் பஞ்சோபசாரங்களோடு பணிதல் விதி. அது வுஞ்செய்ய இயலாதார் முடிவிற் செய்யப்படும் தீபமாத்திரம் ஏற்றித் தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச் சங்கராசயபோற்றி யென்னக் கடவர் என்று காமிக ஆகமம் இலளிதாகமம் முதலிய முதனூல்க

ஞுரைக்கின்றன. இதனுற் நீபத்தின் பெருமை யித்துணைத்து என் பது தெற்றெனப் புலப்படுகின்றது. புவனங்கள் யாவற்றையும் பொ துவறப்புரந்த மாவலிச் சக்கிரவர்த்தி யென்பான் யாவன்? அவன் முற்பிறப்பி லெலியாகப் பிறந்து சிவாலயத்துள்ள விளக்கிலிடப்பட்ட நெய்யை யுண்ணுதற்குச் சென்ருன். போயுண்ணுங் காலத்து மங் கியிருந்த தீபச்சுடர் தன்முகத்திற்சுட வுதறியதனுல் அது ஓங்கி யெரிந்தது. அதனுல் தத்துவாதீத தனிப்பரம்பொருளாகிய தற்பர சிவனுர் மூவுலகுமேவல் கேட்ப ஆளும் பெரும் பேற்றையும், அட்ட ஐசுவரியம் அஷ்டபோக்கியசம்பன்னம், சப்த சந்தானம், சதுர்விதோபாயம், சட்குணசமேதம், பஞ்சதந்திரப் பிரவீணம், வர்க் கத் திரய விசிட்டம், சதுரங்கபலம், சகல நியோக சகிதமாக வமரும் வாழ்வையும் அருளினுர் என்று புராணங்கள் கூறுகின்றன. சிவத்திரவி யத்தைத் தன் பசிக்காக வுண்டபடியினுலும், மங்கும் விளக்கைத் தூண்டவேண்டுமென்று நினைத்துச் செய்யாமையாலும், சிறிது குற்ற முற்றவனுனபடியால், திருமாலது வஞ்சச் செய்கையால் அவை மாற்றப் பட்டான். இங்ஙனமாயின் மெய்யன்புடன் தீபமிடுவார் அடையும் பலம் இவ்வளவினதென்று உலக மறிக.

தீபமாலை, தீபங்கள் என்னு மிவற்ருற் பிரகாசிப்பித்தல் சிவவழிபா ட்டிற்கு இன்றி யமையாததாகும். தீபமாலையாவது கபிலநிறப் பசுவின் நெய்யினுல் நிறைக்கப்பட்டது. கர்ப்பூரம் அகில் என்னுமிவற்ரோடு சம்பந்தமாகத் திரிக்கப்பட்ட இழைகளை யுடையதும், அவியாததும், வட்டவடிவாகிய தோரணம் முன்னர்த் தூங்கப்பெற்றதும், திரிசூல வடி வாகச் செய்யப்பட்டதுமா யுள்ளது. தீபங்கள் ஒரு முகம், இருமுகம், மும்முகம், நான்குமுகம், பஞ்சமுகம் என்பனவும், புருடதீபம், நட்சத் திரதீபம், மயூரதீபம், இடபதீபம், நந்திதீபம், கும்பதீபம் என்பனவு மாம். பூசையின் மூவகையுள், தீபம்வரையிலும் அர்ச்சனை யெனவும், நைவேத்தியம் வரையிலும் பூசையெனவும், பலியிடுதலளவும் சாந்தி கருமம் என்றும் சொல்லப்படும். ஆலயங்களில் தீபமிடுங்கால் ஒன்று முதல் பத்துவரையில் இடுதல் அதமாதமமாம். பத்துமுதல் நூறுவரை யில் இடுதல் அதமம். நூறுமுதல் பதினுயிரம் வரையில் இடுதல் மத்தி மம். பதினுயிரம்முதல் இலக்ஷம் இறுதியாக இடுதல் உத்தமமாகும். அதற்கு மேலிடுவது உத்தமோத்தமம் எனப்படும்.

பகலில் இடுந்தீபங்களில் இரட்டிப்பாக இரவினிடுக. முதற் சாமம் கடைச்சாமங்களில் இடுவனவற்றிலும் இரட்டிப்பாக இடைச் சாமங்களி லிடுக. குற்றமில்லாத நற்பசுக்களின் நெய்கொண்டு இடுவது சாத்துவிக

தீபமாகும். வெள்ளாட்டு நெய், நல்லெண்ணெய் இவைகளா லிடப்படு வது இராசத தீபமாகும். எருமை நெய்யாலிடுவது தாமச தீபமாம். விருக்ஷங்களின் விதைகளில் உற்பத்தியான ஆமணக்குநெய் இருப் பைநெய், கடலைநெய் முதலியன கொண்டு இடுவது பைசாசதீப மாகும். தாமத தீபத்தைப் பார்க்கிலும் பைசாசதீபம் இழிந்ததும் யோக்கியமில்லாததும் என்று சிவாகமங்களால் இகழப்பட்டன. வர்த்தி கள் தாமரை நூல், பருத்திநூல் கொண்டு செய்யப்படல்வேண்டும். இவ் வாறு பரசிவனால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட சிவாகமங்கள் முறை யிடவும் எம்மவர் அதை எட்டுணையேனும் பார்க்கின்றாரல்லர். குளிக் கப்போய்ச் சேறு பூசுவார்போல, துர்நாற்றமுள்ள மண் எண்ணெய் கொண்டும், மெழுகுவர்த்தி யென்னும் அநாசாரப் பொருள்கொண்டும் விளக்கிடுகின்றனர். உற்சவ காலங்களிலே எண்ணெய்ச் செலவிற்கு அஞ்சிச் சாணவரட்டியிலே (எருமுட்டைகளிலே) மண்ணெண்ணெ யைத் தோய்த்துக் கொளுத்திப் பிடிக்கின்றனர். தருமகர்த்தாக்களும் அதனைக் கண்டித்தல் கிடையாது. குருக்கள்மாருட் சிலரும் அவர் போன வழியே விடுகின்றனர். இதனால் நரகப் பிராப்தியன்றி எட் டுணையும் பலன்கிடையாது. தீபச்சுடர் ஓரங்குலம் அதமம். இரண்டு மூன்று அங்குல அளவு மத்திமம். அவற்றிற்கு மேற்பட்ட அளவின உத்தமம் என்க.

காலை, உச்சி, மாலை, யென்னு முக்காலங்களில் தீபங்கள் நான் குடன் பூசிப்பது அதமத்தி னதமம். காலை உச்சிகளில் நான்கு தீபங் களும், மாலை காலத்தில் எட்டுமாகப் பூசிப்பது அதமமாகும். முக்கா லங்களினும் பன்னிரண்டு இடுவது மத்திமத்தி லதமம். முக்காலங்களி னும் இருபத்து நான்கு கொள்வது மத்திமத்தின் மத்திமம். சங்க காகளத்தொனிகளோடும், அர்க்கிய புட்பங்களோடும் முப்பத்தாறு தீபங்களிடுவது மத்திமத்தி னுத்தமமாம். எழுபது தீபங்களேற்றிப் பூசித்தல் உத்தமத்தி லதமம். முக்காலங்களிலும் இரண்டு மரக்கால் அரிசிகொண்டு செய்யப்பட்ட அவிசு, பாயசம், சித்திர இலட்டுகங்களை யும், அன்னங்களையும், அவ்வளவு சுத்தான்னத்தையும் படைத்து அர்த்த சாமத்தும் அவ்வாறு நைவேதித்து முப்பத்து நான்கு வாத்தியாதிக ளோடு இறுநூறு தீபமுங்கொண்டு பூசிப்பது உத்தமத்தில் மத்திமமாம். நைவேத்தியங்கள் பத்து மரக்கால் அரிசியாற்செய்து, ஐம்பது வாத்தி யங்களோடு முப்பத்திரண்டு உபசாரமும், ஐம்பது உருத்திர கணிகை யர் நிருத்தங்களுமமைய முக்காலத்தும் ஐந்நூறு, ஆயிரம், பதினாயிரம், தீபங்கள் கொண்டு பூசிப்பது உத்தமோத்தமம் ஆகும். இத்தீபமிடுதல்

தேகம் என்னும் ஆலயத்திலே யுள்ள மனம் என்னுந் தகழியில் அறிவாகிய நெய்யை நிறைத்து, உயிர் என்னுந் திரியிலே பிராணன் என்னுங் காற்றை நிறுத்தி, ஆணவமலம் என்னும் இருணீங்கச் சிவஞானம் என்னுந் தூண்டாவிளக்கை யேற்றினர் சிவபெருமானது திருவடிப் பேறாகிய பேரின்ப அத்துவித முத்தியை யடைவார் என்னும் உண்மையை விளங்கவைத்த குறியுமாம்.

## தேவாரம்.

உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
யிடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே.

விளக்கினர் பெற்றவின்ப மெழுக்கினற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே.

---

## சிவகீதை.

(156-வது பக்கத்தொடர்ச்சி.)

சிலைப்பாலைப்போல அறியாமையால் எண்ணப்பட்டது சிசுப் பருவமானது பெருங்கஷ்டமேயன்றோ, எவ்வளவுகாலம் ஸுஷும்னை யெனும் நாடியானது கபத்தினல் சூழப்பட்டு உள்ளதோ அத்தனைகாலம் வரையில் அக்ஷரஸ்பஷ்டமாய் வார்த்தை சொல்ல இயலாதன்றோ.

இக்காரணத்தாலேயே கர்ப்பத்திலும் அழுவதற்கியலுவதேயில்லை. பின்னர் யௌவனப்பருவம் வந்ததும் யாதும் தெரியாதவனாய் மதித்தும் ஸ்திரீபோக மொன்றிலிலேயே ஆவலுற்றுச் சற்றுநேரம் பாடுவதும் சற்றுநேரம் ஓடுவதும் இவை முதலிய செய்கைகளைச் செய்கின்றான்.

வேகமாய் மரத்தினிலேறுகிறான். பெரியோர்களைத் துன்புறுத்துகின்றான். காமக்குரோதமதத்தால் யாதும் தெரியாதவனாய் எவர்களையும் லக்ஷியம் செய்கின்றதில்லை.

எலும்பு மாம்ஸம் நரம்பு இவைகளின் சேர்க்கைவடிவாகிய ஸ்திரீயின் விகாரமாய் காணப்படுவதும் கெட்ட நாற்றமுள்ளதுமாகிய தவளையின் பிளப்பு அடிவயிற்றுக்கு (ஆஸனத்துவாரத்திற்கு) நிகராகிய நிதம்பத்தில் ஆவலுடையவனாய் ஸ்திரீபோக இச்சையால் நொந்துமனதினல் மிக்க தஹிக்கப்படுகின்றான்.

(இன்னும் வரும்.)

## பிரார்த்தனை.

இப்பத்திரிகை பொருளீட்டல் முதலிய பயன்களைக்கருதாது, பொது ஜன நன்மையையே கருதி வெளிவருவதும், எவர்களுக்கும் பயன்படுமாறு மிகவும் எளிய இனிய செந்தமிழ் நடையில் எழுதப் பெறுவதும், கற்றவர் சிலரான்மாத்திரமன்றி மற்றவர் பலராலும் நன்கு மதிக்கப்படுவதும், எவரும் கொடுக்கக்கூடிய மிகவுங் குறைந்த சந்தாவை யுடையதும், காலந்தவறாது வெளிவருவதும், காகிதப் பஞ்சத்தால் பலபத்திரிகைகள் கெட்டடொழிந்த விடத்தும், தான் சிறிதும் தவறுத லின்றி ஒழுங்காய் நடைபெறுவதுமாக இருந்தும், இதுவரையில் 700 சந்தாதாரர்களே சேர்ந்தார்கள். இலட்சக்கணக்கானச் சைவர்கள் வாழும் இத்தமிழ் நாட்டில், சைவசமயிகட்கே சிறப்பாகவும் அருமை யாகவும் வெளிவந்துலவும் இப்பத்திரிகைக்கு இவ்வளவு குறைந்த சந்தா தாரர்கள் இருப்பது சைவ சமயத்தின் தற்கால நிலைமையையும், சைவ சமயிகளின் சமயாபிமானத்தின் அளவையும் காட்டும். இதுவரையில் இப்பத்திரிகை பலவிடங்களிலும் பரவுமாறு செய்த சிவநேயர்களின் தொகை முப்பதுக்கு அதிகமாயிராது. இவர்கள் வெறுஞ் சைவாபி மான மேலீட்டினால் அன்பு கூர்ந்து செய்த முயற்சிகளாலேயே இப்பத் திரிகை இதுவரையில் மாத்திரமன்றி இனிமேலும் தடையின்றி நடை பெற இடம் பெற்றது. இவர்களைப்போலவே இப்பத்திரிகையை வாசிக் கும் ஒவ்வொருவரும் அன்பு கூர்ந்து இயன்றவரையில் முயற்சிசெய்தால் எண்ணிறந்த சந்தாதாரர்கள் சேர்ந்து, இப்பத்திரிகை இன்னும் அதிக மாகப் பரவும். சைவ உலகத்திற்குப் பெரும் பிரயோசனங்கள் உண் டாம். எங்கும் சிவபுண்ணியமும் வளரும். ஆதலால் இப்பத்திரிகையை யாதரிப்பவர்கள் இப்பத்திரிகையை மாத்திரமன்றி சைவசமயத்தையே யாதரிப்பவராவர். உலகில் சிவபுண்ணியங்களைச் செய்வித்தாருமாவர். இச்சிவபுண்ணியத்தை யாவரும் பிரயாசையின்றிச் செய்யும்பொருட்டே இதின் சந்தா மிகவும் குறைக்கப்பட்டது. இது தினம் ஒன்றுக்கு அரைக்காசுக்கும் குறைவாகவே இருக்கிறது. ஆதலால், சிவநேயச் செல்வர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் அன்புகூர்ந்து இயன்றவரையில் சந்தாதாரர்களைச் சேர்த்து உபகரிக்கப் பிரார்த்திக்கின்றோம்.

பத்திரிகாசிரியர்.

---

## சிவஞானபோதவசனாலங்காரதீபம்.

இது சிவஞானபோதப் பொருள்களை நல்லாசிரியனைப்போல் எளிய நடையில் விளக்கும் அரிய வசனநூல். இதன் விலை ரூபா. 2-8-0. வேண்டுவோர் சென்னை சிந்தாதிரிப்பேட்டை சாமிநாய்க்கன்வீதி 44-வது கதவிலக்கமுள்ள வீட்டில் ம-௱-௱-ஸ்ரீ, சி. ஏகாம்பரமுதலியாரவர்களுக் கெழுதிப் பெற்றுக்கொள்க.

# சர்வ தேள் விஷசஞ்சீவி.

## கதறிவந்தவன் களிப்புடன் செல்வான்!
## விஷந்தீண்டினவன் நிமிஷத்திற் குணமடைவான்!!
## குணமில்லாவிட்டால் ரூபாய் 100 இனும் கொடுக்கப்படும்!!!



நண்பர்களே! ஒவ்வொரு வீட்டிலும் தேளினுடைய உபத்திரவம் பொறுக்கமுடியாமல் அவஸ்தைப்படுவதை நாம் அனைவரும் கண்டு விசனமுற நேரிடுவதைப்பற்றி, நாம் அதிக கஷ்டப்பட்டு இதற்காக உயர்ந்த மருந்து கண்டுபிடித்திருக்கிறோம். இது அநேக ஐரோப்பிய டாக்டர்களாலும், தமிழ்வைத்திய பண்டிதர்களாலும், நன்கு மதிக்கப்பெற்றது. எமது மேற்கண்ட லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியை தேள் கொட்டின விடத்தில் உபயோகிக்க உடனே ஒன்றிரண்டு நிமிஷத்திற்குள் குணமடையச் செய்யும். இவ்விஷ சஞ்சீவியை இன்னும் எலி, நாய், பூரான், செய்யான், பாம்பு, நண்டுதறக்கா முதலிய எவ்வித விஷ ஜெந்துக்கள் தீண்டினபோதிலும், டைரெக்ஷனில் சொன்னபிரகாரம் உபயோகித்தால் குணமடையலாம்.

மேற்சொன்னவைகளுக்கு உபயோகித்துக் குணமில்லாவிடில், பணம் வாபீஸ் செய்து விடப்படும்.

இந்த லங்கர் மார்க்குள்ள சர்வதேள் விஷ சஞ்சீவியைக் கைப்பற்றுங்கள். இவ் விஷ சஞ்சீவி ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது. ஏனென்றால், ஓர் மனிதனை இரவில் 12 மணிக்கு நித்திரையில் விஷந்தீண்டிவிட்டால், அம்மனிதன் எவ்வளவோ அவஸ்தைப்பட அநேக மருந்துகளையும் மந்திரங்களையும் உபயோகித்தும் பயன்படாமற் போகிறதல்லவா? அதற்காக இவ்விஷ சஞ்சீவி ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்கவேண்டியது.

வேண்டுபவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை பாக்கெட் 1-க்கு ரூ. 0-8-0. டசன் 1-க்கு ரூ. 5-0-0.

விலாசம்:—

வி. எ. எஸ். பாணி,

நெ. 3, இருளப்பன்தெரு, மதராஸ்.

---

REGISTERED NO. M. 1159.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்

மாதாந்தப் பத்திரிகை.

மலர் 2.] நளஙூ மார்கழிமீ -1916ஙூ டிசம்பர்மீ [இதழ் 12.

உள்ளுறை. பக்கம்.



இது

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ-சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்

சமர்ப்பிக்கப்படுவது.

---

பத்திரிகாசிரியர்

இருக்கம் - ஆதிமூலமுதலியார்

சென்னை

சைவவித்தியாநுபாலனஅச்சியந்திரசாலை.

1916

வருடச்சந்தா அணா 12.

(தபாற்செலவுட்பட.)

REGISTERED NO. M. 1103.

# விளம்பரங்கள்.

## கொத்தமங்கலத்தில் பெரியபுராணப் பிரசங்கம்.

திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோவிலுக்கடுத்த கொத்தமங்கலம் என்னும் ஊரில் நாட்டுக்கோட்டை நகர வைசியர்களின் நல்லாதரவால், சித்தூருணிமடத்தில்; நாளது நளஞு ஐப்பசிமீ 12உ (12-11-16.) ஆதிவாரத்தன்று, தொண்டைநாட்டு வித்வான்களிலொருவரும் சித்தாந்த சைவசரபமுமாகிய ஸ்ரீலஸ்ரீ சோளங்கிபுரம் சிவ-அருணகிரி முதலியாரவர்களால், திருத்தொண்டர் புராணத்தின் ஓர் பகுதியாகிய திருநாவுக்கரசு சுவாமிகள் புராணப்பிரசங்கம் செய்யப்பட்டது. புராணத்தைக் கேட்டுய்ய நாட்டுக்கோட்டை நகர வைசியமக்களும் ஏனைய வருணத்தாரும் வந்துகூடினார்கள். பிரசங்கம் மாலை 3-மணி முதல் 6-மணிவரையிலும் நடந்தேறியது. புராணத்தின் முதல்பாசுரத்தின் முதலடியாகிய "திருநாவுக்கரசு வளர்திருத்தொண்டினெறிவாழ" என்னும் பகுதிமாத்திரம் அன்று நடந்தேறியது. பிரசங்கியாரவர்கள் வேதோபநிஷத்துக்களிலிருந்து வேண்டிய பிரமாணங்களைக்காட்டி ஞானமிர்தமழையைப்பெய்து பக்தி ஒழுகச் சிவபரத்வம் நாட்டினார்கள். மற்ற மூன்று அடிகளையும் நேற்றையதினம் மாலை இரண்டுமணிநேரம் பிரசங்கித்தார்கள். புராணத்தைக் கேட்கவந்த ஆண்பாலார் பெண்பாலார் அனைவரும் அடிக்கடி "ஹர ஹர மாதேவா" என்று பேரொலிசெய்து தன்வய மற்றவர்களானார்கள். இந்தப்புராணம் முடிவெய்தும் பரியந்தம் இப்படியே பிரதி ஆதிவாரம் மங்கலவாரம் குருவாரம் ஆகிய இந்தச் சுபதினங்களில் மாலை 3-மணிமுதல் 5-மணிவரையிலும் நடத்த திருவருளை முன்னிட்டு ஏற்பாடாயுள்ளது.

கொத்தமங்கலம்.
15-11-16.

தெ-பழ-சித-சதாசிவஞ்செட்டி.

ஆயுள் சந்தா.—தக்கோலம் எனவழங்கும் திருவூறல் சேரனைத்தாரண தருமகர்த்தராகிய ஸ்ரீமன் கு. ஆலங்காட்டு முதலியாரவர்களும், தேவகோட்டை வெள்ளையனூரணி கீழ்க்கரை ஸ்ரீமான் பழ-பிச-பிச்சகுட்டிச் செட்டியாரவர்களும், தேவகோட்டை ஸ்ரீமான் - தி. ம. உலகப்பனம்பலம் அவர்களும் நிகழும் நவம்பர்மீ தங்கள் ஆயுள்சந்தா அனுப்பியதற்கு நன்றிபாராட்டி வந்தனமளிக்கின்றோம்.

அடுத்தவருடப் பத்திரிகை.—அடுத்த ஜனவரிமீ இப்பத்திரிகையின் மூன்றுமலர் தொடக்கமுதலால் பத்திரிகை வி-பி தபாலில் அனுப்பப்படும். பத்திரிகை வேண்டாதவர்கள் முன்னமே தெரிவிக்கப் பிரார்த்திக்கின்றோம்.

தலையேடும் அட்டவணையும்.—இவ்வருடத்துப் பத்திரிகைகளை ஒன்றுய்ச்சேர்த்துத் தைத்துக்கொள்ள விரும்புவோர் இப்பத்திரிகையின் ஈற்றுத்தாளை முதலில்வைத்துத் தைத்துக்கொள்க.

பத்திரிகாசிரியர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

மலர் 2.] || நளஞூ மார்கழிமீ—1916ஞூ டிசம்பர்மீ || [இதழ் 12

*ஊன டைந்த வுடம்பின் பிறவியே*
*தான டைந்த வுறுதியைச் சாருமாற்*
*றேன டைந்த மலர்ப்பொழிற் றில்லையுண்*
*மாந டஞ்செய் வரதர்பொற் றொடொழ.*

## சிதம்பர தத்துவார்த்தம்.

சிதம்பரதத்துவார்த்தமானது அநுபூதிமான்களாகிய சிவஞானிகளுக்கேயன்றி மற்றவர்களுக்கு உணர்வரியது. அதைப்பலநூல்கள் விரித்துக்கூறுகின்றன வெனினும் அநுபவஞானம் ஒருசிறிதும் இல்லாத எம்போலிகட்கு அது பெரும்பாலும் வெறுஞ்சொன் மாத்திரமாய் அறிவுக்கெட்டாமலிருக்கும். ஆதலால் அதனை விரித்துக்கூறமாட்டாமல் என் சிற்றறிவுக்கெட்டியவரையில் இங்குச் சுருக்கிவரைதலுற்றேன்.

சிதம்பரதத்துவார்த்தத்தின் பெருமையும் அது குற்றமற்ற அநுபூதிமான்களுக்கே உணரவரும் என்பதும்,

*தற்பரமாய்ப் பரபதமாய்த் தாவிலநு பூதியதா*
*யற்புதமா யாரமுதா யானந்த நிலயவொளிப்*
*பொற்பினதாய்ப் பிறிவிலதாய்ப் பொருளாகி யருளாகுஞ்*
*சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம் பலம்போற்றி.*

என்னுங் கோயிற்புராணச் செய்யுளால் உணரலாகும்.

இச்செய்யுளின் பொருள்:—

*தற்பரமாய்*=ஆன்மாவுக்கு மேலானதாய்—*பரபதமாய்*=மேலாகிய பொருளாய்—*தாவு இல் அநுபூதியதாய்*=குற்றமில்லாத அநுபவத்தாலறியப்படுவதாய்—*அற்புதமாய்*=ஆச்சரியத்தை விளைவிப்பதாய்—*ஆர் அமுதாய்*=அரிய அமிர்தமயமாய்—*ஆனந்தநிலய ஒளிப்பொற்பின*

தாய்=ஆனந்தநிருத்தப் பிரகாசத்தினது மிகுதியையுடையதாய்—பிறிவு இலதாய்=(சிவத்தோடு) நீக்கமில்லாததாய்—பொருளாகி=உண்மையாய்—அருளாகும்=சத்திரூபமாயுள்ள—சிற்பரம் ஆம் அம்பரம் ஆம் திருச்சிற்றம்பலம்போற்றி = சிதம்பரமாகிய திருச்சிற்றம்பலம் துதிக்கப்படுவது (எ—று).

சிதம்பரம் என்னுஞ்சொல் சித் அம்பரம் எனப்பிரிந்து ஞானகாசம் என்றுபொருள்படும். சிவபெருமானுக்கு ஞானமே திருமேனியாதலினாலும், அவர் ஞானிகளின் உள்ளத்தில் பிரகாசிக்கும் பேரொளியாயிருத்தலாலும், சிதம்பரம் அவர் திருமேனியெனவும், அவர் நடிக்கும் இடம் எனவும் சொல்லப்படும். சிதம்பரம் என்பது சிற்றம்பலம் என்று மருவியது.

சிதம்பரத்திற்கு எண்ணிறந்தபெயர்களிருக்கின்றன. அப்பெயர்களாலேயே அதின் தத்துவார்த்தம் நன்குவிளங்கும். அவற்றுள் சில வருமாறு:—

## கோயிற்புராணம்.

அத்தன் பாதத் துவனித் தநடத் தமரும் பொதுவின் பெயர்மன் றமலஞ்
சத்தும் பரின் மயகோ சமகத் தனிபுண் டரிகங் குகைவண் ககனஞ்
சுத்தம் பரமற் புதமெய்ப் பதமச் சுழுனை வழிஞா னசுகோ தயநற்
சித்தம் பரமுத் திபரப் பிரமந் திகழுஞ் சபைசத் திசிவா லயமே.

(இ—ள்) அத்தன் பாதத்துவன்=உலகத்துக்குப் பிதாவும் தத்துவங்களைக் கடந்தவருமாகிய சிவபெருமான்—நித்தநடத்து அமரும் பொதுவின்பெயர்=அனவரததாண்டவத்திலே (திருவுளம்) பொருந்தப்பெற்ற அம்பலத்தின் பெயர்களாவன—மன்று=மன்றும்—அமலம்=அமலமும்—சத்து=சத்தும்—உம்பர்=உம்பரும்—இரண்மயகோசம்=இரண்மயகோசமும்—மகத்=மகத்தும் — தனி = தனியும் — புண்டரிகம்=புண்டரீகமும்—குகை=குகையும் — வண்ககனம் = வளவியககனமும்—சுத்தம்=சுத்தமும்—பரம்=பரமும்—அற்புதம்=அற்புதமும்—மெய்ப்பதம்=மெய்ப்பதமும்—அச்சுழுனைவழி ஞானசுகோதயம்=அந்தச் சுழுனைவழிஞான சுகோதயமும்—நற்சித்தம்பரம் = நல்லசிதம்பரமும்—முத்தி = முத்தியும் — பரப்பிரமம் = பரப்பிரமமும் — திகழும் சபை=விளங்காநின்றசபையும்—சத்தி= சத்தியும்—சிவாலயம்=சிவாலயமுமாம்.

சர்வான்மாக்களுக்கும் பொதுவாய்ச் சம்சாரவழக்கறுக்கும் அம்பலமாதலின் மன்று எனவும், இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கியிருத்தலின் அமலம் எனவும், காலத்தால் வரையறுக்கப்படாமல் உள்ளதாதலின் சத்து எனவும், மேலாகிய பொருளாதலின் உம்பர் எனவும், பொன்மயமாகிய சபையாதலின் இரண்மயகோசம் எனவும், எவற்றினும் பெரிதாதலின் மகத் எனவும், சுத்தகேவலமாதலின் தனியெனவும், பூமிக்கு இருதய கமலமாதலின் புண்டரீகம் எனவும், யாவர்க்கும் புகலிடமாதலின் குகையெனவும், நித்தமும் வியாபகமுஞ் சுத்தமுமாகிய பரமாகாசமாதலிற் ககனம் எனவும், தூய்தாதலிற் சுத்தமெனவும், எல்லாப்பொருட்கும் மேலாதலிற் பரம் எனவும், காணுந்தோறும் காணுந்தோறும் புதிது புதிதாயிருத்தலின் அற்புதம் எனவும், சத்தியத்துக்கு இடமாயிருத்தலின் மெய்ப்பதம் எனவும், சுழுமுனைமார்க்கத்திலே ஞானானந்தம் உதிக்குமிடமாதலின் சுழுனைவழி ஞான சுகோதயம் எனவும், பூதாகாசம்போலச் சடமாகாது சித்தேயாகலிற் சிதம்பரம் எனவும், பாசநீக்கத்தானமாதலின் முத்தி எனவும், மகாமாயைக்கு மேலாதலின் பரப்பிரமம் எனவும், எக்காலத்தும் எல்லாப்பொருளினும் விளங்குதலிற் சபை எனவும், சிவசத்திவடிவாதலின் சத்தி எனவும், சிவத்துக்கு ஆலயமாதலிற் சிவாலயம் எனவும் பெயர் பெற்றதென்றறிக.

சிவபெருமான் ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமிலாத ஞானப்பெருவெளியாயிருப்பதுமன்றி, நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆன்மா, சூரியன், சந்திரன் என்னும் இவ்வெட்டுப்பொருள்களோடு, உடலுயிர்போலவும், கண்ணொளியுங்கதிரொளியும்போலவும், பிரிவறுமத்துவிதமாய்க்கலந்து, அவைவேறு தாம்வேறு என்னாதபடி அவைகளைத் தமது திருமேனியாகக் கொண்டிருக்கிறார். அதனால் அவரை அட்டமூர்த்தியென்று மறைகள் முழக்கும்.

## திருவாசகம்.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகேழெ னத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

## தேவாரம்.

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி
யருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

"ப்ரிதிவ்யோபவ, ஆபஸ்சர்வ, ஆக்னேருத்ரோ, வாயுர்பீம, ஆகாசஸ்யமஹாதேவ, ஆதமாநஃ பசுபதிஃ, சூர்யஸ்ஸோக்ரஃ, சந்தாஸ்ய ஸோமஃ" என்னும் வேதவசனத்தால், சிவபெருமான் பிருதிவி என்னுந் தநுவுக்குப் பவன் என்னும் நாமத்தாலும், அப்பு என்னுந்தநுவுக்கு ஸர்வான் என்னும் நாமத்தாலும், அக்கினி என்னுந்தநுவுக்கு உருத்திரன் என்னும் நாமத்தாலும், வாயு என்னுந்தநுவுக்குப் பீமன் என்னும் நாமத்தாலும், ஆகாசம் என்னுந்தநுவுக்கு மகாதேவன் என்னும் நாமத்தாலும், ஆத்மா என்னுந்தநுவுக்குப் பசுபதி என்னும் நாமத்தாலும், சூரியன் என்னுந்தநுவுக்கு உக்கிரன் என்னும் நாமத்தாலும், சந்திரன் என்னுந்தநுவுக்குச் சோமன் என்னும் நாமத்தாலும் அதிஷ்டானமும் சைதன்யமுமாயிருக்கிறார் என்பது பெறப்படும்.

பிருதிவிமுதலிய எட்டுப்பொருள்களும் அவருக்குச் சரீரமாயிருத்தலினால் அவை அவரைவணங்கும் இடங்களாயிருக்கின்றன. ஆதலினால், அவர் காஞ்சி, திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்னும் தலங்களில் பிருதிவிமுதலிய பஞ்சபூதரூபமாக வணங்கப்படுகின்றனர். இத்தலங்களுள் அவரைப் பரமாகாசரூபமாக வணங்குமிடம் சிதம்பரத்தலமாம்.

பிருதிவி தத்துவம் கோடியோசனை நீளமும் அகலமும் உடையதாய் ஆயிரகோடி பண்டங்களையுடையதாம். பிருதிவி தத்துவத்திற் பத்துமடங்கு அப்புதத்துவமும், இதிற் பத்துமடங்கு தேயுதத்துவமும், இதிற் பத்துமடங்கு வாயுதத்துவமும், இதிற் பத்துமடங்கு ஆகாசதத்துவமுமிருக்கும். வாயுமுதலிய நான்கு பூதங்களும் ஆகாயத்தினின்றும் தோன்றிநின்று ஆகாயத்தில் ஒடுங்குவதுபோல் பிரபஞ்சம் யாவும் எப்பொருளிடத்தினின்றும் தோன்றி யொடுங்குமோ அப்பொருள் சிதம்பரம் என்று சொல்லப்படும். "சமஸ்த அண்டங்களின் தொகுதியாகிய குமிழிக்கூட்டங்கள் தோன்றப்பெறும் இரத்தினாகாமாகிய பாப்பிரகிருநிரூபபாாசத்தியே சிதம்பரம் எனப்படும். இந்தப் பிரகாச ரூபத்தையுடைய பிரமம் 'ஆகாசசரீரம்" என்று சைவபாஷ்யக்காரர் கூறியிருக்கின்றனர். "இந்தச்சேதனுசேதனப் பிரபஞ்சமெல்லாம் சிதம்பரசத்தியினின்றும் உண்டாயின; அச்சிதம்பரசத்தியைப்போய் அடைகின்றன" என்று சாந்தோக்கிய உபநிடதங்கூறுகின்றது.

அன்றியும், இப்பரதகண்டத்துச் சிவாலயங்களிலுள்ள சிவமூர்த்தங்களின் கலைகளெல்லாம் அர்த்தராத்திரியில் சிதம்பரத்திற்போய் ஒடுங்கும். ஆதலால் சிதம்பரம் ஒன்றே கோயில் என்று வழங்கப்படுகின்றது. ஏனைய சிவாலயங்களெல்லாம் அருணைசைலேசுரர்கோயில், ஏகாம்

பாநாதர்கோயில் என்பன வாதியாக அடைச்சொற்களோடுங்கூடியே வழங்கப்பெறுகின்றன.

பலகோடி சனனங்களை யெடுத்தெடுத்துக் களைத்திருக்கும் ஆன்மாக்களுக்கு இளைப்பாறுதலைத்தாவேண்டி சிவபெருமான் சர்வசங்கார காலத்தில் பிரபஞ்சமனைத்தையும் தம்மிடம் ஒடுக்கிக்கொண்டு உமா தேவியாரோடு தன்னந்தனியாய்நின்று ஆனந்தநிருத்தஞ்செய்வர். அவர் அவ்வாறு நிருத்தஞ்செய்யுமிடம் ஞானகாசம் எனவும், அக்காலம் நள்ளிருட்காலம் என்றும் சொல்லப்படும்.

## திருவாசகம்.

நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே.

## இரட்டையர் தைவிகஉலா.

"அல்லினுமை கைத்தாளங் கொட்டநடங் காண்பவரார்"

சிவபெருமானுக்குச் சொரூபநிலையெனவும் தடத்தநிலையெனவும் இருவேறு நிலைகளுண்டு. அவர் குணம் குறி செயல் ஒன்றுமின்றி வெறும் ஞானமயமாய் இருக்கும்நிலை சொரூபநிலையும், ஆன்மாக்களுக்கிரங்கி நவந்தருவடிவங்கொண்டு பஞ்சகிருத்தியஞ் செய்யும்நிலை தடத்த நிலையுமாம். இவற்றுள் சொரூபநிலையே சிதம்பரமாம். இது சிதம்பர இரகசியம் என்றும் சொல்லப்படும். தடத்தநிலை நடராஜவடிவமாம். ஆதலால் சிதம்பரமானது அவருடைய இருநிலைகளையும் விளக்கிக் கொண்டிருக்கும் இடமாம்.

ஸ்ரீ நடராஜப் பெருமான் திருமுன்னர் இருக்கும் திருவாயிற்படி ஸ்ரீ பஞ்சாக்கரப்படி என்று சொல்லப்படும். அது ஸ்ரீ பஞ்சாக்கரத்தியான வாயிலாகவே அவரை யடைதல்வேண்டும் என்பதை விளக்கும்.

(இன்னும்வரும்.)

பத்திரிகாசிரியர்.

# முத்திசோபானம்.

## சிவஞானசித்தியார்.

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந்
தாதமார்க்க மென்றுஞ் சங்கரனை யடையு
நன்மார்க்க நாலவைதா ஞான யோக
நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய
சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமா
முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்.

அண்டசம், சுவேதசம், உற்பிசம், சராயுசம் என்னும் நால்வகை நெறியிற் பிறப்புவையாவை? அவையெல்லாம் பசுக்கள்; அவ்வாறு பிறத்தலில்லாதது யாது? அது பதிப்பொருள்; என்னும் இதுவொன்றே எளிதில் அவ்விரண்டுக்குந் தம்முள் வேற்றுமை அறியும்வண்ணம் நிற்பது. ஆதலால் வேதாகம புராணேதிகாசமுதலிய நூல்களிலே மற்றைத்தேவர்களெல்லாம் அவ்வாறு பிறந்திறத்தல்சொல்லப்படுதலாலும், சிவபெருமானுக்கு அது உண்டென்பது சொல்லப்படாமையாலும் அவரே முழு முதற்கடவுளெனத் துணியப்படும். அத்தகைய சருவஞ்ஞதை, திருத்தி, அநாதிபோதம், சுவதந்திரதை, அலுப்தசத்தி அனந்தசத்தி என்னும் அறுகுணங்களையும்; சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களையும் இயல்பாகவேயுடைய அநாதிமல முத்தபதியாகிய சிவபெருமான் அநாதிமலபெத்த பசுக்களாகிய ஆன்மாக்களின் மேல்வைத்த பெருங்கருணையினாலே அவைகளுக்குப் பசுத்துவநீக்கமும் சிவத்துவவிளக்கமும் சித்தித்தற்பொருட்டு தமது ஊர்த்துவமுகமாகிய ஈசான முகத்தினின்றும் காமிகாதி இருபத்தெட்டாகமங்களையும்; ஏனை தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் நான்கு முகங்களினின்றும் இருக்காதி நான்கு வேதங்களையும்முதனூலாக அருளிச்செய்தனரென்று காமிகாகமாதிகளினும் கந்தபுராண ஈசசங்கிதையின்கண்ணுள்ள *ஆலாசியமான்மியம் முதலியவைகளினும்கூறப்பட்டுள்ளன. இம்முதனூலினின்றும் உருத்திரமூர்த்திகளாலும், மகரிஷிகளாலும், இருநூற்றேழுபாகமங்களும், பதினெண் சுபபுராணங்களும், பதினெண்ணுபபுராணங்களும், மூன்றிதிகாசங்களும் வழிநூலாக அருளிச்செய்யப்பட்டன. ஏனை அட்டப்பிரகாணங்

---

*திருவிளையாடற்புராணம் வேதத்துக்குப் பொருளருளிச்செய்தபடலம் ௨௪. ௨௫,

களும், சடங்கங்களும் பிற்காலத்துள்ள ஆப்தர்களால் சார்பு நூலாக அருளிச்செய்யப்பட்டன. இம்முதல் வழி சார்பு நூல்களினின்றே சர்வ சாஸ்திரங்களுந் தோன்றின.

இவ்வேதாகம முதலிய சகலகலைகளும் சிவபெருமானது அந்தரங்க பகிரங்க வழிபாட்டைக் கூறுநிற்கும். இவ்வழிபாடாகிய சிவபுண்ணியப்பணி ஒரு ஜென்மத்திற்கிடைப்பதன்று; அது பூர்வஜென்மங்களில் புறச்சமயநெறியினின்று கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனைநயவாமை, வரைவின்மகளிர் நயவாமை முதலிய குற்றங்களினீங்கி, இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தந்தை தாய் முதலிய பெரியோர்களை வழிபடுதல் முதலிய குணங்களினின்றொழுகிய புண்ணியமேலீட்டால், பிற்சென்மங்களில் அகச்சமயங்களிற்பிறந்து அந்நெறிபற்றியொழுகிய பெரும் புண்ணியத்தால் கிடைத்தல்வேண்டும்.

சமயங்கள்—புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச்சமயமும், அகச்சமயமுமென *நான்குவகைப்படும்; அவற்றுள் புறப்புறச் சமயம்—உலோகாயதம், மாத்திமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம், ஆருகதம் என அறுவகைப்படும். புறச்சமயம்—தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப்படும். அகப்புறச்சமயம்—பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், அயிக்கவாதம் என அறுவகைப்படும். அகச்சமயம்—பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுரவவிகாரவாதம், சிவாத்துவிதவாதம் என அறுவகைப்படும். இவையெல்லாம் அகம், புறம் என்றிரண்டாயடங்கும். இவ்வாறு இரண்டாயடக்கியும் அவற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி நான்காக வகுத்துக் கூறுதலுமமையுமென்பது; தொல்காப்பியத்தில் அகம், புறம் என்றிரண்டாய் அடக்கிக்கூறிய பொருளைத் தம்முள் வேறுபாடுநோக்கி பன்னிரு படலத்தில் அகம்-அகப்புறம்—புறம்-புறப்புறம் என நான்காகப் பகுத்தோதியவாற்றானுமுணர்க.

ஈண்டுகூறிய சமயத்தாருள் புறப்புறச்சமயத்தாராறுவரும் வேத சிவாகமங்களை நிந்திக்கும் நாத்திகராயினும் ஒரு நூலென்றும் பிரமாணமென்றுங்கொண்டு நெறிக்கண்ணே நிற்றலால் அவர்சமயம் புறப்புறச் சமயமென வேறு வைத்தெண்ணப்பட்டது. புறச்சமயத்தாராறுவரும் வேதத்தைப் பிரமாணமெனப் பொதுவகையாற் கொள்ளினும் அவருள் தார்க்கிகர்வேதத்தைச் † சுவதப்பிரமாணமென்று கொள்ளாமையோடு

* இந்நாற்கூற் றறுவகைப்பேதமும் சிவஞானபாடியத்துட்காண்க. † சுவதப் பிரமாணமென்பது—தானே பிரமாணமாவது. பரதப்பிரமாணமென்பது—ஈசுரனாற் சொல்லப்பட்டமையிற் பிரமாணமாவது.

வேதப்பொருளோடு முரணிப் பொருட்டன்மை கோடலானும், மீமாஞ்சகர் கருமகாண்டத்தைப் பிரமாணமெனக் கொண்டு ஞானகாண்டத்தை இகழ்தலானும், ஏகான்மவாதிகள் ஞானகாண்டமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு கருமகாண்டத்தை இகழ்தலானும், ஏனைமூவரும் வேத வாக்கியங்களில் தத்தம் மதத்திற்குப் பொருந்துமாத்திரையே எடுத்துக் கொண்டு ஏனையவற்றிற்குப் பிரமாணங்கொள்ளாமையானும், வேதநிந்தகர்களாகிய இவ்வறுவரும் புறச்சமயிகளென்று வேறு வைத்தெண்ணப்பட்டனர். அகப்புறச்சமயத்தாரறுவருள் பாசுபதர் முதலிய ஐவரும் வேதாகமமிரண்டிற்கும் பொதுவகையாற் பிரமாணங்கொள்ளினும் அவ்விரண்டிற்கும் புறமாகிய பாசுபத முதலிய உபாகமாதிகட்குச் சிறப்புவகையாற் பிரமாணங் கோடலானும், வேதாகமங்களில் ஆகாவென விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும், அயிக்கவாத சைவர் வேதம் சிவாகமம் இரண்டிற்கும் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு அவற்றில் விதித்த வழி ஒழுகுவாராயினும் ஆணவமலத்துண்மை கொள்ளாமையோடு அதனுண்மை சாதிக்கும் சிவாகமங்களை இகழ்தலானும், இவ்வறுவரும் அகப்புறச்சமயிகளென வேறு வைத்தெண்ணப்பட்டனர். ஏனை அகச்சமயத்தாரறுவரும் பொருளுண்மையெல்லாம் சித்தாந்த சைவரோடொப்பக்கொள்ளும் அந்தரங்க உரிமையுடையாராயினும் அவ்வப்பொருள்கட்குக் கூறும் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையின் முரணுதலான் இவர்சமயம் அகச்சமயமென வேறு வைத்தெண்ணப்பட்டது.

இனிப் *புண்ணியமானது பசுபுண்ணியமென்றும் பதிபுண்ணிய மென்றும் இருவகைப்படும்—அவற்றுள் தண்ணீர்ப்பந்தல், சத்திரமமைத்தல் முதலிய முப்பத்திரண்டு தருமங்களைச் செய்தல் பசுபுண்ணியமெனப்படும். சரியை கிரியையாதிகள் செய்தல் பதிபுண்ணிய மெனப்படும். அது அபுத்திபூர்வம், புத்திபூர்வமென்று இருவகைப்படும். அவற்றுள் அபுத்திபூர்வமாவது—வேள்விமுதலிய வற்றுட்போல ஏனைத்தெய்வங்களினின்று பொதுநீக்கி அறியுமாறின்றிச் சிவபிரானைநோக்கிச் செய்வதென்றும், அந்நோக்கமுமின்றி மாவலிச்சக்காவர்த்தி முற்பிறப்பிற்செய்ததுபோலச் செய்த வினை யாதானுமோராற்றால் சிவபிரானுக்குரிய பணியாய் முடிவதுமென இருவகைப்படும்.

இனிப் பொதுநீக்கிச் செய்வதாகிய சிவபுண்ணியமும் பொதுவென்றும் சிறப்பென்றும் இருவகைப்படும்; அவற்றுள் பொதுவாவது—சிவ

* சிவபுண்ணியப் பாகுபாடுகளும், சரியையாதி பேதங்களுந் திராவிடமாபாடியத்திற் கூறப்பட்டவை.

(189, 190 பக்கம் விருபட்டுள்ளன)



இச்சரியையாதிகளிற் றலைப்படுவதற்கு சத்திநிபாதமே இன்றியமையாத கருவியாம். இது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்குவகையாய் அவற்றுள் ஒவ்வொன்றும் நன்னான்காய்ப் பதினாறுவகைப்பட்டு விரிவாற் பல திறப்படும். இவற்றை முறையிற் பற்றியொழுகுதலே சரியையிற் சரியையாதி ஞானத்தில் ஞானமீறாகிய சோபானக்கிரமமாம். இச்சத்திநிபாதம் மலபரிபாகம் எய்தப்பெற்றாலன்றிப் பெறுதலரிது. மலபரிபாகமாவது—மலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்களோடு கூடுதலாம். இம்மலபரிபாகமும் இருவினையொப்பு எய்தப்பெற்றாலன்றிப் பெறுதலரிதாகலின் அவ்விருவினையொப்பும் ஒருதலையான் வேண்டப்படும். அவ்விருவினையொப்பாவது புண்ணியபாவமிரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்புப் பிறத்தலேயாம்.

இச்சரியையாதிகள் *அரும்பு மலர் காய் கனிகள்போல ஒன்றுக்கொன்று காரணகாரியமாய் நிகழவுள்ளன. எங்ஙனம் அரும்பின்றேல் மலரும், மலரின்றேற்காயும், காயின்றேற் கனியும் இல்லையோ அங்ஙனம் சரியையின்றேற் கிரியையும், கிரியையின்றேல் யோகமும், யோகமின்றேல் ஞானமும், எய்துவதின்று. இஞ்ஞானம் தத்துவவாயிலாக ஆன்மாவின்கணிகழும் பாசஞானத்தாலும் யானே பிரமமெனத் தருக்குற்றெழும் பசுஞானத்தாலும் அறியப்படுமாறின்றி †"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" ‡"அவனருளாலே யவன்றாள் வணங்கி" எனவும் வரும் திராவிடவேதப் பனுவற்படி பதிஞான மொன்றானே அறியுந்தரத்தது.

இப்பதிஞானமாவது காலாக்கினியுருத்திர புவனமுதல் அநாசிருத புவனமீறாகிய இருநூற்றிருபத்து நான்கு புவன போகங்களும் இதற்குமுன் அநுபவித்துக் கழித்தமையால் அவற்றைக் கான்ற சோறெனஅருவருத்துவிட்டு மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா, புவனத்துவா என்னும் அறுவகையத்துவாவுட்பட்ட அசுத்தப்பிரபஞ்சம், சுத்தாசுத்தப்பிரபஞ்சம், சுத்தப்பிரபஞ்சம் என்னும் மூவகைக் காரியப்பிரபஞ்சமும் காரணரூபத்தில் சிறிதும் காணப்படாமையால் அவற்றை "இந்திரசாலங் கனவுகானலினீர்" என முழுப்பொய்யெனக்கண்டு அவ்வாறு கண்ட காட்சி சலியாதிருக்கப்பெறின் அப்பிரபஞ்சத்திற்கு விலக்ஷணமான ஞானசொரூபம் ஆண்டினிது விளங்கித் தோன்றும். அது தோன்றவே அதன்கட்பெருங்

---

*தாயுமானவர் பராபரக்கண்ணி, †திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், ‡திருவாசகம்.

காதல்மீதூரும். அது மீதூரவே அவ்வன்பின்வழித்தாய்ப் பேரின்பமாய் ஆன்மவறிவின்கண்ணே விளங்கித்தோன்றும் அந்த ஞானத்திற்கு முதலாகிய ஞேயப்பொருள்.

அஞ்ஞேயத்தைக் கண்டகாட்சி சலியாததீதப்படுதலே நிட்டையெனப்படும். அக்காட்சி ஒரோவழி வாதனைவயத்தால் பெரும்பான்மையுஞ் சலிக்கப்பெறுதல் இயல்பேயாம். அங்ஙனம் சலியாதிருத்தற் பொருட்டு ஒரு தலையான் வேண்டப்படுவது சிவோகம்பாவனையும், திருவஞ்செழுத்து மந்திரமும், அந்தரியாகக்கிரியையுமாம். அவற்றுள் சிவோகம்பாவனையாவது உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும், இங்ஙனம் விபரீதமாக அறிகின்ற ஆன்மாவானது சுட்டுணர் வுட்பட்ட அப்பாசமுமன்று, சுட்டுணர் விறந்து நின்ற அப் பதிப்பொருளுமன்று, இரண்டிற்கும் வேறெனக்கண்டு ஏனைப் பதிப் பொருள் வேறாயினும் கண்ணொளியும் கதிரொளியும்போல வியாப்பிய வியாபக பாவத்தால் வேற்றுமை சிறிதுந் தோன்றுதவாறு ஒற்றித்து நிற்றல். அஞ்செழுத்து மந்திரமாவது அங்ஙனம் சிவமும் ஆன்மாவும் உடையானும் உடைமையுமாய் நிற்கும் பரிசை அஞ்செழுத்தைக் கணிக்குமுறைமையின் வைத்துச் சிகர வகர யகரங்கள் முறையே தற்பதப்பொருளும் தொம்பதப்பொருளும் அசிபதப்பொருளுமா முறைமைநோக்கித் தன்னறிவு அதன் வயத்தாம்படி யுறைத்துநிற்றல். அந்தரியாகமாவது—இதயம், உந்தி, புருவநடு என்னும் இவற்றை முறையே பூசைத்தானம், ஓமத்தானம், தியானத்தானமாகக் கருதிக்கொண்டு அம்முதல்வனை ஐம்பொறியடக்கல், கொல்லாமை, பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அட்டபுட்பங்கொண்டு அத்திருமந்திரத்தாலர்ச்சித்தலாம். இங்ஙனம் அந்தரியாக முதலிய மூன்றும் ஒருவழிப்பட நின்றுகொண்டு அவ்வஞ்செழுத்தை ஆசிரியனறிவுறுத்த ஒருமொழிப்படி நெஞ்சழுத்திக்கணித்தல் செய்யற்பாற்று. இக் கருத்துப்பற்றியன்றே ஞானசாதனங் கூறும் ஒன்பதாஞ் சூத்திரத்துள் "தியாயேத்" என்று கோஷித்து நின்றது வடமொழிச் சிவஞான போதம். இங்ஙனம் அவனே தானேயாகிய வந்நெறி யேகனாகி யிறைபணி நின்று அயராவன்புசெய்து அரன்கழலைத் தலைப்பட்டுக் கடைப்பிடிப்பதே வேதாகமங்களின் முடிபெனக் கூறுவர் பெரியார்.

இவ்வயராத அன்புசெய்து அரன் கழலடைந்த அன்பர்க்குச் சீவன்முத்தி நிலைக்கண் தேகம் நிற்குமளவும் பிராரத்வ வினை அத்தேகத்தைப்பற்றி நிற்றலான் அஃது அவருக்கு ஒரோவழி வாசனை வயத்தால் குலாலன் வினைதவிரவும் சக்கரஞ் சுழலுமாறுபோல வந்து தாக்

கும்: தாக்கவே, அது சார்பாக விருப்பு, வெறுப்புக்கள் நிகழாநிற்கும். நிகழவே, பார்த்தவிடமெல்லாம் பரமே பார்த்திருப்பார்க்குப் பாசாதி பூதகாரியவிடயப் பொருள்கள் காட்சிப்படும். படவே அவற்றைச்சுட்டி யுணர்வதாகிய விபரீதவுணர்வு மேம்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்தும். இங்ஙனம் கீழ்ப்படுத்த எழும் ஆன்மஞானசத்தியை முற்கூறியபடி மும்மலங்களைக் களையும் நிட்டையிலும், ஆன்ம இச்சாசத்தியை அந்நிட்டையை நிலைபெறுத்துவதாய பத்தியினால் மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தை யணைந்த சிவபக்தர்களோடிணங்குவதிலும், ஆன்ம கிரியா சத்தியை அம்மருவுதலை நிலைபெறுத்துவதாய அப்பத்தாது திருவேடத்தையும், சிவாலயத்தையும், சிவனெனவே தேறி வழிபடுதலிலும் செலுத்தி நிற்றல் ஒருதலையாமென்க.

## திருநாவுக்கரசுநாயனர் தேவாரம்.

நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
றென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
றன்கட னடியேனையுந் தாங்குத
லென்கடன் பணிசெய்துகிடப்பதே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீலஸ்ரீ ஆநந்த ஷண்முக சரணலய சுவாமிகள்,
தில்லைவளாக மடாலயவாசி,
திருச்செந்தூர்.

---

## சிவகீதை.

(180-வது பக்கத்தொடர்ச்சி.)

ஸ்திரீகளின் தேஹமானது எலும்பு மாம்ஸம் நரம்பு தோல் இவைகளைக் காட்டிலும் வேறாய் யாதுளது. அஞ்ஞானத்தால் மோஹித்தவனாய்க் கொண்டு ஜகத்தைச் சிறிதும் விவேகித்துப் பார்க்கின்றதில்லை.

ப்ராணவாயுவானது வெளிப்போய்விடின் ஸ்திரீயின்தேகமானது ஐந்தாறுதினங்களில் எவ்வாறாகுமோ அந்தோ அதனை ஆலோசித்துப் பார்க்கின்றதில்லை.

பெரும் அவமதிப்பிற்கிடமாகிய கிழத்தன்மையை அடைந்து மிக்கத்துன்புறுகின்றான். கபத்தினால் கட்டப்பட்ட மார்புடையவனாகின்றான். உண்ட உணவுசெரிப்பதில்லை. பற்களுதிர்ந்து பார்வையுங் குன்றிப்போன நிலைமையுடையவனாய்க் கசப்பு துவர்ப்பு முதலியவைகளைப் புசிப்பவனாகின்றான்.

வாயுவின் பீடையால் கோணிப்போன இடை கழுத்து கை தடை கால் இவைகளையுடையவனும், பலமற்றவனும் எண்ணிறந்த ரோகங்களை யுடையவனும், தனது பந்துக்களால் அவமதிக்கப்பட்டவனுமாகின்றான்.

சுத்தியில்லாதவனும் மலம்பூசப்பெற்ற தேகமுடையவனும் தேஹம் கொடுமையாய் எரிக்கப்பெற்றவனுமாய் எளிதில் கிடைக்காதனவாகிய போகங்களையே சிந்தித்துக்கொண்டு இருக்குமிடம் விட்டசையாம லிருக்கின்றான்.

எவ்விந்திரியமும் வேலைசெய்வதற்கில்லாமற் போனமையால் சிறு பாலர்களும் பரிகஸிக்கின்றார்கள். அதன் பிறகு மரணகாலத் துக்கத்திற்கு நிகரில்லை.

பெரும்பிணிகளையுடைய பிராணிகளும் எவனிடம் பயப்படுகின்றனவோ, அந்த எமனால், பந்துக்களால் தழுவப்பட்டிருக்கினும் சமுத்திர நடுவிலுள்ள ஸர்ப்பம் கருடனாலேபோல, கொண்டுபோகப்படுகின்றான்.

ஹா பத்நீ, ஹா தனமே, புத்திரர்களே என்று மிக்கபயங்கரமாய் அழுகின்றவனாயினும், தவளையானது ஸர்ப்பத்தினாலே போல எமனால் கைப்பற்றப்படுகின்றான்.

மர்மஸ்தானங்கள் ஹிம்ஸைப்படும்போதும், ஸந்திபந்தங்கள் துடிக்கும்போதும், மரணாவஸ்தையிலுள்ளவனுக்கு எந்த துக்கம் நேருமோ அந்த துக்கம் மோக்ஷத்தில் விருப்புற்றவர்களால் சிந்தித்துப் பார்க்க வேண்டியது.

கண் விழிக்கமுடியாது செருகப்படும்போதும் நினைவும் தவிரவே, ம்ருத்யு பாசத்தால் கட்டப்பட்டவனுக்கு ரக்ஷகன் காணப்படுகின்றதில்லை யன்றோ.

அஞ்ஞானத்தால் தகையப்பட்டவனாய் சரியாய் உள்ளசித்தமுடையவன்போலக் கூப்பிடப்பட்டு ஞாதிகளை தீனத்தன்மையுடன் கூடிய விழியால் பார்க்கின்றான்.

காலனால் இருப்புச்சங்கிலியாலும் பந்துக்களால் ஸ்நேஹபாசத்தாலும் தான் இருபக்கங்களிலும் இழுக்கப்படுகின்றதாகக் காண்கின்றான்.

ஹிக்கையென்னும் இருமலால் தொந்தரையுற்று ஸ்வாஸத்தால் வறண்டும் காலபாசத்தால் இழுக்கப்படுகின்றவனுமாகிய மனிதனுக்கு ரக்ஷகன் இல்லையன்றோ.

ஸம்ஸாரமாகிய யந்த்ரத்திலேறினவனாய் யமதூதர்க்கு வசங்கதனும் யமபாசத்தினால் கட்டப்பட்டவனுமாய்க் கொண்டு எங்கு செல்லுவேன் என்று வருத்தமுறுகின்றான்.

என்னசெய்வேன் எங்குசெல்லுவேன் எதைப்பற்றுவேன் எதை விடுவேன் என்று இவ்விதம் செய்வது யாதென்று அறியாமல் மிகவும் தொந்தரை யடைந்து தேஹத்திலிருந்து பிராணனோடு வெளிப்படு கின்றான்.

யாதனு தேஹத்தைப்பற்றிக்கொண்டு யமதூதருக்குட்பட்டு இங்கி ருந்துசென்று யமயாதனைகளெல்லாவற்றையும் அனுபவிக்கின்றான்.

அந்நாகயாதனைகளுள் அனுபவிக்கும் துக்கத்தைச் சொல்ல எங்ங னம் இயலும்.

யாதொருதேஹமானது கர்ப்பூரசந்தனாதிகளால் எப்போதும் பூசப் பெறுகின்றதோ, அழகிய ஆபரணங்களாலும் சிறந்தவஸ்திரங்களினாலும் அலங்கரிக்கப்படுகின்றதோ அத்தேஹமே ஜீவனால் பிரிக்கப்பட்டதாயின் தொடத்தகாததும் பார்க்கத்தகாததுமாகின்றது.

இல்லத்தினின்றும் வெளிக்கொண்டுபோகின்றார்கள். க்ஷணப்போ தும் வைத்திருக்கின்றதில்லை.

அதன் பிறகு கட்டைகளோடு கொளுத்தப்படுகின்றது. அதுவும் க்ஷணத்தில் சாம்பலாக்கப்படுகின்றது. அல்லது நரி கழுகு நாய் காக்கை முதலியவைகளால் தின்னப்படுகின்றது. நூறுகோடி ஜன்மமெடுக்கினும் அதே தேஹம் மீண்டும் காணப்படுகிறதில்லை.

இந்திரஜாலப்பொருள்களுக்கு நிகராயுள்ள இவ்வுலகவாழ்க்கையில் எனது தாய்தந்தை எனது குரு ஜனம் எனது பந்து என்று நிச்சயிப்பது எப்படிக்கூடும். ஏனெனின் கர்மத்தோடுகூட தான் ஒருவனே போகும் படி ஆகின்றமையால் இம்மனிதலோகமானது களைப்பாறுதற்குச் சற்றுத் தங்குமிடமாகிய மாத்திற்கு ஸமானமே யன்றோ.

எப்படி மாலைதோறும் வசிக்கும் மாத்தை யடைந்து ஒன்றுகூடிய பறவைகள் பிறகு காலைதோறும் அம்மாத்தை விட்டு ஒன்றுக்கொன்று பிரிந்து அது வந்து வந்தவழியோடேசென்றுவிடுகின்றதோ அதுபோ லவே ஜ்ஞாதிகளும் அஜ்ஞாதிகளும் என்றறியத்தக்கது.

ஜன்மம் மாணஹேதுவும், மரணம் ஜன்மஹேதுவும் ஆகின்றது. ஜிவன் ஏற்றுமாம்போல் ஓய்வின்றி எப்போதும் சுற்றிக்கொண்டேயிருக்கி றான்.

ஜீவனுக்குக் கர்ப்பத்தில் சுக்கிலம்சேர்ந்தது முதல் மாணம் வரை யில் யாதொன்று சொல்லப்பட்டதோ அவ்விந்த பெரும் பிணிக்கு மரு ந்து என்னிலும் அந்நியன் இல்லை.



## சுப சமாசாரங்கள்.

இவ்வருடப் பத்திரிகையாகிய இரண்டாமலர் இவ்விதழோடு இனிது முடிவதனால், இதனைச் சைவ உலகம் சந்தோஷிக்கும் சுபசமாசாரங்களோடு முடிக்கின்றோம்.

இப்போதுண்டாயிருக்கும் காகிதப்பஞ்சத்தால் பத்திரிகைகளாகிய பாதவங்கள் பல பட்டொழிந்தும், சைவம் எனப்பெயரிய இத்தெய்வத்தரு சிறிதும் வாட்டமின்றி பல உண்மைச் சிவநேயர்களின் மெய்யன்பெனும் தண்ணீரினாலும், உழைப்பென்னும் எருவினாலும், செம்மையினோங்கிச் செவ்விதின் வளர்ந்து, இவ்வருடத்திலும் பருவந்தவறாது பன்னிரண்டிதழ்களையும் விரித்து, வையமெங்கும் சைவமணம் வீசியது.

## ஆயுள் சந்தா ஆயிரம் ரூபா.

இத்தருவுக்கு எப்போதும் எவ்விதமான தீங்கும் நேரிடாதபடி அச்சுக்கூடமாகிய வேலிகோல்வதற்கு, இரங்கூனிலிருக்கும் வைசிய சைவப் பிரபுக்களாகிய ஸ்ரீமான் மே-சு-மே-மே-இராமநாதன் செட்டியாரவர்களும், சேவு-சித-சோக்கலிங்கச் செட்டியாரவர்களும், 100 ஆயுள் சந்தாதாரர்களைச்சேர்த்து, 1000–ரூபா சேகரித்தனுப்பினார்கள்.

இத்தருவை வளர்க்கும் சைவ உழவர்குலம் தாரணியெங்குந் தழைக்குமாறு, இச்சபையார்வைத்து நடத்தும் சைவ பாடசாலையை, இச்சபையின் போஷகரும், சைவசித்தாந்த மகா சமாஜக் கூட்டத்தைத் தமது சொந்த செலவில் சென்னையிற்கூட்டி யுபகரித்தவரும், மெஸ்ஸர்ஸ் பெஸ்டு அண்டு கம்பெனி துவிபாஷிகருமாகிய ஸ்ரீமான் எஸ். இரத்தினவேல் செட்டியாரவர்கள் பார்வையிட்டு மிகவும் களிகூர்ந்து தமது சொந்த செலவில் இப்பாடசாலைக்கென விசாலமானக் கட்டிடம் கட்டிக்கொடுத்து அதை அபிவிருத்திசெய்ய முன் வந்துள்ளார்கள்.

யாழ்ப்பாணம் பாடசாலைகளின் உதவி பரிசோதகர் ஸ்ரீமான் யஸ். கந்தையாபிள்ளையவர்கள் நிகழும் நவம்பர்மீ இருபது சந்தாதாரர்களைச் சேர்த்து முதலிரண்டு மலர்களையும் பெற்று வாசிக்குமாறு செய்ததுமன்றி, இன்னும் பலரைச் சந்தாதாரர்களாக்கிவர மிகுந்த முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள்.




மதிவளர் சடைமுடி யன்று ளாரைமுன்
றுதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநல னுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.

திருச்சிற்றம்பலம்.

பத்திரிகாசிரியர்.